



# நாடு எங்கே செல்கிறது!?

க்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

# நாடு எங்கே செல்கிறது?

(நாட்டில் நிலவும் எண்ணங்கள்)

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# பொருளடக்கம்

## படித்து விட்டீர்களா?

### டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தி

எழுதிய பிற நூல்கள்

| | ரூ. | காசு |
|---|---|---|
| எண்ணங்கள் | 8 | 00 |
| மனமும் பிரார்த்தனையும் | 7 | 00 |
| நெஞ்சமே அஞ்சாதே நீ | 5 | 00 |
| தட்டுங்கள் திறக்கப்படும் | அச்சில் | |
| பிரச்சினைகளுக்கு முடிவுகாண்பது எப்படி? | 10 | 00 |
| தலைவன் ஒரு சிந்தனை | அச்சில் | |
| ஆத்ம தரிசனம் | 4 | 00 |

**வானதி பதிப்பகம்**

13, தீனதயாளு தெரு,

தி. நகர், சென்னை-17

## உங்களுடன் சில வார்த்தைகள்

*இன்று 1984*

நமது நாட்டில் ஜனநாயகம் நிலவுகிறது. பாராட்டப் பட வேண்டிய விஷயம். தனி மனித சுதந்தரம் ஓரளவுக்கு இருக்கிறது. பத்திரிகைச் சுதந்தரம் இருக்கிறது. படித்த—குறிப்பாகத் தொழில் நுட்பம் அறிந்த—மக்கள் தொகை ஏராளமாக இருக்கிறது.

பாதுகாப்புத் துறையில் விமானம், தளவாடம், டாங்குகள் என்று இந்தியா தன்னிறைவைக் கண்டு வருகிறது. சிறு தொழில், நடுத்தரத்தொழில், கம்ப்யூட்டர், விண்வெளி ஆராய்ச்சி, விண்கோளை வானவெளியில் விடுதல் போன்ற விஞ்ஞான—தொழில் ரீதியான துறை களில் இந்தியா முன்னேற்றம் கண்டிருக்கிறது.

பொதுமக்களுடைய வருமான நிலை பத்து வருடங் களை விட இப்போது உயர்ந்திருக்கிறது. மொத்த இந்தியாவைப் பார்க்கும்போது சில சில மாநிலங்களும், தமிழ்நாட்டைப் பார்க்கும்போது சில சில மாவட்டங் களும் நல்ல வளர்ச்சியைப் பெற்றிருக்கின்றன.

"நாடு எங்கே செல்கிறது?" என்ற கேள்விக்கு என்ன பதில் அளிப்பீர்கள்?

"அது நான் எந்தக் கட்சியைச் சேர்ந்தவன் என்பதைப் பொறுத்தது. எதிர்க்கட்சியாளனுக இருந்தால் முன்னேற்றமே இல்லை என்று கண்டிப்பேன்!" ஆளுங்கட்சி நபராக இருந்தால் எல்லாம் இனிதாக இயங்குகிறது என்று பாராட்டுவேன்!" என்று சொல்வீர்களா?

ஆம்! அதைத்தான் இங்குக் குறிப்பிட விரும்பு கிறேன். அத்தகைய கட்சிக் கண்ணேட்டத்துடன் என் கட்டுரைகளைப் படிக்காதீர்கள். நாட்டுக்கு எது நல்லது என்ற நோக்கில் விஷயங்களைச் சீர்தூக்கிப்பார்க்கும் முறை நம்மிடையே அதிகமாக வேண்டுமென விரும்புபவன் நான். நாம் விருப்பு வெறுப்பு இன்றி மூன்முவது மனிதனுக இருந்து விஷயங்களை எடை போடவேண்டும்; ஆராய வேண்டும்; தெளிவு பெறவேண்டும்; இந்தப் பண்பு மங்கிவந்தால் நம் ஜனநாயகம் தோற்று வருகிறது என்று அர்த்தம்.

மாற்ருன் தோட்டத்திலே மல்லிகை மலர்ந்திருக் கிறது என்பதற்காக, அதற்கு மணமில்லை என்று வாதிடக் கூடாது. நம் பிள்ளை, நம் அண்ணன், நம் சொந்தக்காரர் ஆட்சி செய்கிருர் என்பதற்காகக் கண்ணை மூடிக்கொண்டு பள்ளத்தில் இறங்க முடியாது. நடுநிலையாளர்களை நாம் வரவேற்க வேண்டும்; பாராட்ட வேண்டும்; "உண்மை யிருக்குமோ கூற்றில்?" என்று கவனித்துக் கேட்க வேண்டும். அந்த நோக்குடன் பின்வரும் சில கருத்துக் களை நீங்கள் பரிசீலிக்க வேண்டும். மேலும் ஏன் இப்படி 'காய்தல் உவத்தலி'ன்றி, விஷயங்களைப் பரிசீலிக்க வேண்டும் என்று கூறுகிருேம்?

சில சமயம் ஒரே விஷயத்தில் ஆழ்ந்து மூழ்கி இருப்ப வன், பிற விஷயங்களையும், புதிய பார்வைகளையும் பார்க்க முடியாதவனுயிருக்கிருன். ஆனுல், புதிய பாதை கண்டவர் களாலேயே இவ்வுலகம் முன்னேறி இருக்கிறது! புதிய நோக்கு நமக்குத் தேவை.

வெளியிலிருப்பவர்கள் மாறுபட்ட நோக்கையும் பிற நாட்டு அனுபவங்களையும் தங்கள் நாட்டு வளர்ச்சியுடன் ஒப்பிடுகிருர்கள்; ஆக்கம் சேர்க்கிருர்கள்.

இனவெறி, நிறவேற்றுமை, தனிமனித கௌரவம், தனி மனித உரிமைகள் பற்றி எல்லாம் மோகன்தாஸ் காந்தி ஆப்பிரிக்காவில் இருந்தபோதுதான் அதிகம் உணர்ந்தார். நேருவின் இங்கிலாந்து படிப்பும் சூழ்நிலையும் அவரை ஒரு ஜனநாயக வாதியாக்கியது. வி. கே. கிருஷ்ண மேனனும், ஜெயப்பிரகாஷ் நாராயணனும் பெற்ற வெளி உலக அனுபவங்கள் இந்திய நாட்டின் வாழ்வில் மாறுதல் கள் தோன்றக் காரணமாயிருந்தன. விஞ்ஞானக் கண்டு பிடிப்புக்கள் பலவும் ஒரு துறையிலுள்ள உண்மைகள் மற்ருேர் துறையில் இறங்கும்போது ஏற்படுவனதான்.

மாறுபட்ட கருத்துக்கள்தான் மாற்றங்களுக்குக் காரணமாயிருக்கின்றன. மாறுதல்கள் வளர்ச்சிக்கு அறிகுறி. ஆனுல், மாறுபட்ட கருத்துக்களையும் மாற்றங் களையும் மனித சமுதாயம் எளிதாக ஏற்றுக்கொள்வ தில்லை. இருக்கின்ற நடை முறைகள் மாற்றப்படும்போது ஒரு பயம்—பத்திரமின்மை—மனித உள்ளங்களில் தோன்றுகிறது.

அமீபாவிலிருந்து மனிதனுகும்வரை பல்வேறு மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. 'கற்கால மனிதனுக வாழ்வைத் தொடங்கியவன் இன்று வானவெளிக்குப் போகிருன்' என்பது வரை பலவகை மாற்றங்கள் மனித

வாழ்வில் நிகழ்ந்து மனித சமுதாயத்தை முன்னேற்றி உயர்த்தி இருக்கின்றன. மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவித்தவர்கள் பலருக்கு உயிரே போயிருக்கிறது!

ஆக்சிஜனைக் கண்டு பிடித்த லவாய்சியருக்கும், உலகம் உருண்டை என்று சொன்ன கலிலியோவுக்கும் எத்தனையோ சங்கடங்கள் விளைந்தன. ஜனநாயகம் என்பதே மனிதன் கண்டுபிடித்த ஒரு வாழ்க்கை நெறிதான்; ஆட்சிமுறைதான். ஜனநாயகம்—பல்வேறு கருத்துக்களுக்கும் மதிப்புக் கொடுக்கும் ஓர் இடம். மாறுபட்ட சிறுபான்மையோருக்கும் சம அந்தஸ்து அளித்துப் பாதுகாக்கும் இடம்.

நாளும் நாளும் நாம் வளரவில்லை என்றால் வாழ்வை நாம் தோற்க விட்டவர்களாவோம். வளர்ச்சிதான்—வாழ்வின் ஜீவத்துடிப்புதான்—பல்வேறு விதங்களில் பரிணும வளர்ச்சியாக உருவெடுக்கிறது.

இந்த அடிப்படை உண்மைகளுடன், "நாடு அடுத்த கட்டத்தில் என்னசெய்ய வேண்டும்?" என்று நாம் கவனிப்போம். எங்கே செல்கிறது என்று தெரிந்து கொள்ள இன்று எங்கே இருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

நாட்டின் முக்கியமான பிரச்சனைகளான, "வறுமை," "வேலை வாய்ப்பு இல்லாமை" இவை தீர நாம் என்ன செய்யவேண்டும்? முதலில் "எது நமது லட்சியம்?" என்ற லட்சியத் தெளிவு வேண்டும். லட்சியத்தை அடைய லட்சியத்தில் பற்று - பிடிப்பு வேண்டும் நமக்கு.

"லட்சியங்கள் என்ன? லட்சியங்களை அடைய என்ன காரியங்கள் செய்யவேண்டும்? எப்படித் திட்டம் வகுக்க வேண்டும்? எந்தக் காலக்கெடுவில் இவற்றை முடிக்க

வேண்டும்?'' என்பதைத்தான் பிரபல தொழில் அறிஞர் கள். 'எம். பி. ஓ'. அணுகுமுறை என்கிருர்கள். லட்சியங்களை முன் வைத்து நிர்வகிப்பது, 'MANAGEMENT BY OBJECTIVE' இது சொந்த வாழ்க்கைக்கும் நாட்டு வாழ்க்கைக்கும் பொருந்தும்.

இதற்கு மாற்ருன வேறு முறை என்ன என்று நீங்கள் கேட்கலாம். அவ்வப்போது வரும் பிரச்சனைகளை, பிரச் சனைகள் வந்தவுடன் அவ்வப்போது சமாளித்துக் கொண்டி ருப்பதுதான். ஆங்கிலத்தில் இவர்களைச் ''சின்ன சின்ன தீயை அவ்வப்போது அணைத்துக்கொண்டு காலத்தை ஓட்டுபவர்கள்'' என்று கூறுவார்கள். (PUTTING OUT FIRES). அதாவது இவர்களிடம் திட்டம் ஏதும் இல்லை. 'இதுதான் லட்சியம்; இதை இப்படி அடையப்போகிறேன் என்ற தெளிவோ, தீர்மானமோ இவர்களிடம் இல்லை. இவர்களை 'அன்ருடங் காய்ச்சிகள்' என்று குறிப்பிடலாம்.

நம்மிடம் 'அன்ருடங் காய்ச்சிகள்' அதிகம் இருக் கிருர்களா, அல்லது திட்டமிடும் லட்சிய வாதிகள் இருக் கிருர்களா என்று நீங்களே அலசிப்பாருங்கள். ''நாடு எங்கே செல்கிறது?'' என்பதற்கு நீங்களே விடை அளிப் பீர்கள்.

இரண்டாவதாக, விஷயங்கள்—பிரச்சனைகள் என்று வரும்போது எது முக்கியம் என்று நாம் பகுத்துணர வேண்டும். ஆங்கிலத்தில் இதையே (PRIORITIES) ''முக்கியமானதை முதலில் செய்'' என்பார்கள்.

கேரளத்து எல்லையில் கண்ணகிக்குக் கோயில் எடுப்பது முக்கியமா? அல்லது 'வறுமையால் தாழ்ந்து போயிருக்கும் கிராமங்களில் தொழிலபிவிருத்தி செய்வது முக்கியமா? ஒரு பல்கலைக் கழகத்திற்குக் காலஞ் சென்ற

எந்தக் கவிஞனின் பெயரை வைக்க வேண்டும் என்பதில் கருத்துச்செலுத்த வேண்டுமா? அல்லது தெருச் சுகாதாரத்தில் அக்கறை காட்ட வேண்டுமா?

''இருப்பதெல்லாம் இருக்கட்டும். கிழவியைத் தூக்கி மணையில் வை'' என்று யாரும் சொல்வதில்லை. ''எது முக்கியம்?,'' என்கிற கேள்வி நம் வாழ்க்கையையும் நாட்டு வாழ்க்கையையும் தொடும் மிக முக்கியமான கேள்வி.

இப்போது நீங்கள் ஆராயுங்கள். நாட்டில் எது முக்கியம் என்று கருதப்பட்டு, முக்கியமான விஷயங்கள் நமது கவனத்தைக் கவர்கின்றனவா அல்லது திசை திருப்பும் உப்புப்பெறுத விஷயங்கள் நம் கவனத்தைக் கவர்கின்றனவா என்று எண்ணிப் பாருங்கள்.

உங்கள் பதிலில் நாடு எங்கே செல்கிறது என்ற கேள்விக்கு விடை இருக்கும்.

தனி மனிதனது பலகீனமான குணங்கள்தான் தனி மனித முன்னேற்றத்தைத் தடை செய்கிறது என்று, மனோதத்துவ நிபுணர்கள் கூறுகின்றார்கள். காரியங்களை ஒத்திப் போடுதல்; பிரச்சனை இல்லை என்று வாதித்தல், (நெருப்புக் கோழி பூமிக்குள் தலையைப் புதைத்துக் கொள்வதைப் போல) முக்கியமில்லாத விஷயங்களில் காலத்தைச் செலுத்துதல், தெளிவின்மை, குழப்பம், சந்தேகம் என்று பலகீனங்கள் தனி மனித வாழ்வைச் சிதைக்கின்றன.

தலைவனும் நம்மைப் போன்றவன்தான். ஆனால், அவனிடம் பலகீனங்கள் மிகுந்து பலம் குறைந்து காணப் படுமேயானால் அந்தக் குணங்களின் விளைவுகள் நாட்டின்

விதியாக நாட்டின் தலையில் விடிகின்றன. இதனால் நாட்டின் முன்னேற்றம் தடைப்படுகிறது. இந்தியத் தலைவர்களும், மாநிலத் தலைவர்களும் பலம் மிகுந்தவர்களா, பலகீனம் மிகுந்தவர்களா என்பதையும் நீங்களே ஆராயுங்கள். நாடு எங்கே செல்கிறது? என்பதற்கு விடை கிடைக்கும்.

அடுத்ததாகத் "தனித்தன்மை நமக்கு வேண்டும்". அதுதான் ஆக்க சக்திக்கு வழி என்று மனோதத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள். தனி மனிதனைப் பார்த்து- "அடுத்த வீட்டு அண்ணுசாமியைப் பார்த்து உன்னை ஒப்பிட்டுக் கொள்ளாதே. நீ நீயாகச் செயல்படு!" என்று மனசிகிச்சை நிபுணர்கள் கூறுவார்கள். அடுத்த வீட்டு அம்புஜம் செய்வதுபோல் நம்வீட்டு நாச்சியும் எல்லாக் காரியங்களையும் செய்தால் நம் வீட்டில் பிரளயம் நிகழும்.

ஆனால், அரசியல் உலகில் எதிர்க்கட்சித் தலைவரை வைத்தே தங்கள் சிந்தனையையும் செயலையும் நிர்ணயிக்கப் போனால் நாடு எங்கே செல்லும்? ஆள்பவரிடம் சூத்திரக் கயிறு இருக்கிறது என்பதுபோக எதிர்க் கட்சிக் காரருக்குத்தான் ஆள்பவரைவிட வலிமை இருக்கிறது என்று ஆகிவிடுகிறது! நாட்டில் நடக்கும் விஷயங்களை அடுத்த வீட்டு அம்புஜத்தையும் அண்ணுசாமியையும் வைத்து மதிப்பிடுங்கள். நீங்கள் யோசியுங்கள்! நாடு எங்கே செல்கிறது? என்கிற கேள்விக்கு விடை கிடைக்கும்.

உண்மையிலேயே நம் தலைவர்கள் எல்லாம் தரங் குறைந்தவர்களா என்றால் "இல்லை! இல்லை!" என்றுதான் பதில் சொல்ல வேண்டும். அவர்களிடம் அற்புதத் திறமைகள் இருக்கின்றன. செயல்புரியும் வலிமை இருக் கிறது. சாமர்த்தியம், சாகசம், வசீகரம் இருக்கின்றன

பிரமாதமான இளைஞர்களையும் அனுபவசாலிகளையும் தங்களுக்கு ஆலோசனை சொல்ல அருகே வைத்திருக்கிறார்கள்.

பின் ஏன் லட்சியத்தெளிவோ பிடிப்போ இல்லை? அனுபவத்தினாலும், பழக்கத்தினாலும், சூழ்நிலை தரும் பயத்தினாலும் அவர்கள் தங்கள் பதவியைக் காப்பாற்றிக் கொள்ளும் உயிர்ப்போராட்டத்திலே கவனஞ் செலுத்த வேண்டி இருக்கிறதோ 24 மணி நேரமும், என்ற சந்தேகம் நம்முள் எழுகிறது.

இன்றைய நிலையில் பொருளாதார வளம் என்ற ஒன்று மட்டுந்தான் நமது லட்சியமாய் இருக்க முடியும். பொருளாதார வளத்தைப் பெருக்க, வறுமையை ஒழிக்க, எல்லோருக்கும் வேலைவாய்ப்பைப் பெருக்க, தொழிலபிவிருத்தி ஒன்று மட்டும்தான் உதவும். சிறுதொழில், கைத்தொழில் பெருந்தொழில். வாயிலாகப் புதிய பொருளை உற்பத்தி செய்ய வேண்டும்.

ஏராளமான பொருட்களை உற்பத்தி செய்யும்போது நமக்கு வரும் பங்கு அதிகமாகும். வாழ்க்கை வசதிகள் மிகும். செல்வம் புரளும்போது மனிதன் அதிக சந்தோஷத்துடன் வாழ்வான்; அதிக சுதந்தரத்துடன் வாழ்வான்.

மாறாக உற்பத்தியைப் பெருக்காத செலவினங்களில் நாம் நம் பணத்தைச் செலவிடுவது முட்டாள்தனம். நம் நாட்டில் சத்துணவுத் திட்டம், விவசாயக்கடன் ரத்து, கைத்தறிக் காரர்களுக்குச் சலுகை என்று பல திட்டங்கள் பொதுப் பணத்தை —வருமானத்தில் சுமார் நான்கில் ஒரு பகுதியை எடுத்துக்கொள்கின்றன. இவை எல்லாம் நல்ல திட்டங்கள்; அவசியமான திட்டங்கள்தான்.

ஆனால், ஒரே ஒரு விஷயம். "ஆண்டவனே! சுமை அதிகமாயிருக்கிறதே என்று நான் கவலைப்படவில்லை. முதுகை அகலமாக்கித்தா, என்றுதான் கேட்கிறேன்!" என்றான் ஒரு பரோபகாரி.

பரோபகாரத்திற்குமுன், "நம் முதுகை அகலமாக்க நாம் என்ன செய்தோம்?" என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். முதுகு அகலமாக, வலுவாக இல்லை என்றால் சுமை முதுகெலும்பை ஒடித்துவிடும்.

தலைமையிலுள்ளோரின் பொருளாதாரக் கண்ணோட்டம் நமக்குக் கவலை தருகிறது. நாடு எங்கே செல்கிறது என்று கவலையுடன், அச்சத்துடன், எதிர்காலத்தைப் பார்க்கிறோம்.

காலந்தாழ்க்குமுன் நாம் தொழில், தொழில் என்று தொழிலை—விவசாயத்தை, வருமானத்தை அதிகப்படுத்த வேண்டும்.

பொருளாதாரத்திற்கு அடுத்தபடியாக நம் கவனத்தைக் கவர வேண்டிய விஷயம், நம் திறமையை நாம் பூரணமாக நாட்டின் நன்மைக்கு உபயோகிக்கிறோமா என்பதுதான்.

ஒரு நாட்டின் சொத்து அதன் நீர்வளம், நிலவளம், கனிவளமல்ல; அதன் சொத்து அதன் மக்கள்தான்! அறிவும் திறமையும் தான்.

ஒரு கையகல இங்கிலாந்து நாட்டு மக்களின் அறிவும் திறமையும், எத்தகையதோர் சாம்ராஜ்யத்தை நிறுவியது. எண்ணிப்பாருங்கள்! எத்தகையதோர் வாழ்க்கை வசதியை ஆங்கிலேயர்களுக்கு நல்கியது, எண்ணிப் பாருங்கள்.

மனிதன் புத்திசாலியாக இருக்கும்போது அவன் எந்தப் பிரச்சனைக்கும் வழி கண்டுபிடித்துவிடுவான். நம்மிடமோ ஏராளமான புத்திசாலிகள்; நிறைய புத்தி சாலிகள்!

ஆனால், உபயோகித்தால்தானே பலன் பெறமுடியும்? அதேபோலப் புத்திசாலிகளும் ஈடுபட்டால்தானே சமுதாயத்தில் அவர்களது முத்திரை விழும்? நாடு முன்னேறும்?

அமெரிக்காவில் 'கிரைஸ்லர்' என்ற கார் கம்பெனிமூட வேண்டிய நிலைக்கு வந்தது. அதன் பொருளாதாரம் படுத்துப் போனபோது லீ அயோகோக்கா என்ற திறமை சாலியை அதன் தலைவராக நியமித்தார்கள். இரண் டாண்டுகளில் கம்பெனி லாபம் பெற்றது. நமது ஊரில் ஸ்பிக் ரசாயனக் கம்பெனியில் திரு. வெங்கட்ரமணனை அதன் தலைவராக அமர்த்தினார்கள். இதுவரை லாபம் காணாத அந்தக் கம்பெனி முதன் முதலாக லாபத்தைச் சென்ற ஆண்டு பெற்றது.

திறமை வளர — திறமைவெளிவர — திறமைக்கு மதிப்புக் கொடுக்கவேண்டும். திறமையை உபயோகிக்க வேண்டும். நம் நாட்டில் கல்லூரி அட்மிஷனிலிருந்து, அமைச்சரவை வரை, திறமையை மதிக்கிறோமா என்று நீங்கள் யோசித்துப் பாருங்கள். நாடு எங்கே செல்கிறது என்று பின் தீர்மானியுங்கள்.

நம் நாட்டில் கலையும் மொழியும் நமது முழுவாழ்க்கைப் படுதாவையும் நிறைத்து விடுகின்றன. கலையும்மொழியும் வாழ்வின் ஒரு பகுதி; அவ்வளவுதான். குடும்பம், சுயமுன்னேற்றம், தொழில், செல்வம், சாதனை, வாழ்க்கையில் நிறைவு என்று வாழ்வில் பல விஷயங்கள்

இருக்கின்றன. சினிமாவும் அரசியலும் நம் வாழ்க்கையை ஒருதலைப்பட்சமாக நம் சிந்தனைப் படுதாவை இன்று நிறைக்கின்றன; இது மாற வேண்டும்.

ஜனரஞ்சகம் என்ற பெயரில், 'வாசகர்கள் விரும்புகிறார்கள் என்ற வாணிப நோக்கில் ஆபாசங்களை நியாயப் படுத்தும் போக்கு—அதிகப்படுத்தும் போக்கு—குமுதம் போன்ற தலையாய பத்திரிகைகளில் மலிந்துவிட்டது. அங்கே உள்ள நல்லவர்கள் பிராயச்சித்தம் செய்து கொள்வது நாட்டுக்கு நன்மை செய்வதாகும். நாடு எங்கே செல்கிறது என்று பார்க்க—கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டாம்.

மாதம் ஒரு முறை, நாம் தேர்ந்தெடுத்த சட்ட மன்ற உறுப்பினர்களையும், பாராளுமன்ற உறுப்பினர்களையும் ஒவ்வோர் ஊரில் ஒவ்வொரு மாதம் அழைத்து, ''அவர் தொகுதிக்கு என்ன செய்கிறார், நாட்டுக்கு என்ன செய்கிறார், என்ன செய்ய வேண்டும்'' என்பதைக் கூறி நெருக்க வேண்டும். ''ஏதும் செய்யா விட்டால் பதவி பறிபோய்விடும்'' என்ற பயத்தை ஏற்படுத்த வேண்டும்.

லஞ்சம் தேவையில்லாத அளவுக்கு, நமது சட்ட மன்ற—பாராளுமன்ற உறுப்பினர்களின் சம்பளத்தையும் அமைச்சர்களது சம்பளத்தையும் அதிகமாக்க வேண்டும். அவர்கள் கண்ணியமாக வாழ நாம் வழி செய்ய வேண்டும். சில நல்லவர்களாவது லஞ்சத்தை எதிர்பாராது வாழ்வார்கள். நாடு நல்ல திசையில் செல்லும்.

அரசாங்க அமைப்பையும், அலுவலர்களையும், செலவினங்களையும் நாளுக்கு நாள் பெருக்கிக் கொண்டே போவதைக் குறைக்க வேண்டும். குறைக்காவிடில் அரசாங்கச் சம்பளத்தை நம்பி வாழும் மக்களால்—

உற்பத்தி செய்யாதவர்களால் நம்நாடு நிறைந்துவிடும். யாராவது பொருளுற்பத்தி செய்தால்தான் அரசாங்கம் செலவழிக்க முடியும். ஆகவே, அரசாங்கச் செலவினங்களைக் குறைத்துப் பொருளுற்பத்தி செய்பவர்களை அதிகப் படுத்த வேண்டும். பிறநாடுகளில் நிர்வாகச் செலவு பத்து அல்லது இருபது சதம்தான் மொத்த வருமானத்தில். நமது நாட்டிலோ அரசாங்க நிர்வாகச் செலவு நாற்பது சதத்திற்கு மேலாக இருக்கிறது. கவலைக்குரிய விஷயம்.

தொழிலபிவிருத்திக்காக நமது மாநிலப் பிரதிநிதிகளை அமெரிக்காவிலும், ஜப்பானிலும், பிரிட்டனிலும் ஜெர்மனியிலும் நாம் நியமிக்க வேண்டும், இந்திய வெளிநாட்டிலாகாவின் உதவியுடன். நமது தொழிலபிவிருத்தி டில்லியின் சுருக்குக் கயிற்றில் ஊஞ்சலாட முடியாது. மாநிலங்களின் வளர்ச்சியில் சுதந்தரம் இருக்கும்போதுதான் இந்தியா முன்னேறும்.

அதே போலத் தொழிலபிவிருத்திக்காகப் பிற மாநிலங்களின் வளர்ச்சியைக் கண்காணிக்க ஒரு குழு செயல்பட வேண்டும். மத்திய அரசாங்க ஆராய்ச்சி நிலையக் கண்டு பிடிப்புக்களையும் வெளிநாடுகளிலும், வெளி மாநிலங்களிலும் நிகழும் கண்டுபிடிப்புக்களையும் நாட்டுக்குத் தர, மாவட்டந் தோறும் தொழில் நுட்பத் தகவல் நிலையம் ஏற்படுத்தப்பட வேண்டும். ஒவ்வொரு கல்லூரியும் விஞ்ஞான, தொழில் நுணுக்க ஆராய்ச்சியால் ஊக்குவிக்கப்பட வேண்டும். அதற்கான மானியம் அளிக்கப் படவேண்டும்.

விவசாயக் கண்டுபிடிப்புகள் விவசாயப் பல்கலைக் கழகங்களிலிருந்து விரைவில் விவசாயிக்கு நேரடியாகப் பயன்படவேண்டும்.

மாற்று எரிபொருள், உயிரியல் ஆராய்ச்சி, எலக்ட் ரானிக் என்று உலகில் வேகமாக வளரும் விஞ்ஞானத் துறைகளுக்காக நம் நாட்டில் விஞ்ஞானிகளும் ஆராய்ச்சி களும் ஊக்குவிக்கப்பட வேண்டும். ஆராய்ச்சி நிலையங்கள் தொடங்கப்பட வேண்டும்; அப்படித்தான் ஜப்பானில் செய்கிறார்கள்.

அமைச்சர்கள் மக்களின் தொண்டர்களாக நாட்டுக்கு நன்மை செய்வதில் போட்டி போடுபவர்களாக இருக்க வேண்டும். அத்தகைய உணர்வை நாம் உண்டாக்கி விடவேண்டும். அதைப் பத்திரிகைகளும், நாட்டுப் பொதுச் சங்கங்களும் செய்ய முடியும். நல்லது செய்யும் அமைச்சரை மனமாரப் பாராட்டுங்கள்; மாலை போடுங்கள்; விழா நடத்துங்கள்—பின் என்ன ஆகிற தென்று பாருங்கள்! ஒன்று மற்ற அமைச்சர்களும் நாமும் ஏதாவது செய்ய வேண்டுமென செய்யத் தொடங்குவார் கள். அல்லது "இவனுக்கு இத்தகைய செல்வாக்கா?" என்ற நினைவில் அந்த அமைச்சருக்கு வேலை போயிருக்கும். பொதுமக்கள் கொதித்தெழுவார்கள்—ஆகவே, இரண்டும் நாட்டிற்கு நல்லதை உண்டு பண்ணும்.

தொழிலபிவிருத்தி, நிர்வாகம் என்ற இவற்றிற்கு அடுத்தபடியாக நமது கல்வி சீரமைக்கப்பட வேண்டும். அதற்கு என்னென்ன செய்ய வேண்டும் என விவரமாக என் கட்டுரைகளில் குறிப்பிட்டிருக்கிறேன், கல்வியாளனாக ஒரு கால் நூற்றாண்டைக் கழித்தவன் என்ற அனுபவத்தில்.

நண்பர்களே!

தமிழ்ச் சமுதாயம் ஒரு நல்ல சமுதாயமாக, வளம் மிகுந்த சமுதாயமாக விளங்க முடியும்.

பயத்தை உதறுங்கள்.

அவநம்பிக்கையைத் தூர எறியுங்கள்.

லட்சியக் கனவைக் கண்முன் நிறுத்துங்கள்.

செயல்படுவோம்.

நம்மால் முடியும்.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!

அன்புடன்

ஜனவரி 4 - 1981 **எம். எஸ். உதயமூர்த்தி**

பின் குறிப்பு.

'நாடு எங்கே செல்கிறது' என்கிற எனது கட்டுரைகள் அந்தந்தக்கால மனோநிலையில் எழுதப்பட்டவை. ஆனால், அவற்றின் அடிப்படை உண்மை ஏதும் மாறவில்லை.

உங்கள் கருத்துக்களை எழுதுங்கள்.

**M. S. UDAYA MURTHY**
308, COTTON WOOD DRIVE
LAFAYETTE LA 70506.
U. S. A.

# 1. தமிழ்நாடு எங்கே செல்கிறது?

ஒன்பதாண்டுகளுக்குப் பிறகு, தாய்நாடு—தமிழகம்— என்று வெகு 'ஆவலுடன் சென்னையின் மண்ணை மிதித்தேன். உறவினர்களையும் நண்பர்களையும் சந்தித்தேன். சரித்திரத்தில் தங்கத் தகட்டிலே வைர எழுதுகோல் கொண்டு தமிழ்நாட்டின் சரித்திரம் எழுதப்படும், எழுதப்பட வேண்டும் என்று ஆசைப் பட்டவன் நான்.

தமிழ் நாட்டில் அறிவுக்குக் குறைவில்லை; திறமைக்குப் பஞ்சமில்லை; அண்டை மாநிலங்களையும், அயல் நாடுகளையும் கண்டு நாம் புதுப் பாதை சமைக்க, தொலை தேசங்கள் கூட அருகில் வந்துவிட்ட ஒரு சுருங்கிய காலத்தில் வாழ்கிறோம்; நமது தலைவர்களும் ஒன்றும் சாதாரண மனிதர்கள் அல்லர் என்று நினைத்துப் பூரிப்பவன் நான்.

'வெளி நாடுகளில் வாழும்போது தேசப்பற்று அதிக மாக இருப்பதைக் காண்கிறேன்' என்றார் அண்ணா. ஒருவேளை என் ஆசையில், நான் அதிகமாகத் தமிழ் நாட்டில் எதிர்பார்த்து விட்டேனோ என்றுகூட யோசிப்ப துண்டு.

"தமிழ்நாட்டில் கடந்த பத்தாண்டுகளில் என் னென்ன மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன என்றுகவனித் தீர்களா" என்று பலரும் கேட்டார்கள்.

அண்ணுவின் அழகு மிக்க நினைவு ஸ்தம்பத்தைக் கண்டேன். 'காலணிகளைக் கழற்றி விட்டுச் செல்லுங்கள்' என்று காவற்காரரர் சொன்னபோது, அந்தத் தமிழ் மரியாதை என்னைப் பெருமையால் நிறைத்தது. கூவத்திற்குப் புது வாழ்வு வந்திருப்பதைக் கண்டு பூரித்தேன். மக்கள் முன்னைப்போல் பசி பட்டினியாயில்லாமல், ஏதோ வயிற்றுப் பஞ்சம் இல்லாது வாழ்வதுபோல் எனக்குத் தோன்றியது; மகிழ்ந்தேன். தமிழ் மூதறிஞர்களின் சிலைகள் கண்டு வணங்கினேன். நிலையான கோட்டையிலிருந்து நடமாடும் பஸ் வரை, தமிழ்மணம் வீசிடக் கண்டேன்.

கடந்த இருபதாண்டு காலத்தில் அறிஞர் அண்ணுவும், பெரியார் ஈ. வே. ரா.வும், சமுதாய நோக்கில் ஒரு பெரிய புரட்சியைக் கொண்டு வந்தனர். இத்தகைய புரட்சி இந்தியாவின் சரித்திரத்தில் புத்தருக்குப் பிறகு ஏற்படவில்லை என்றும், கடந்த பல நூற்றுண்டுகளில் இந்தியாவின் வேறு எந்த மாநிலத்திலும் இத்தகைய ஓர் இயக்கம் எழவில்லை என்றும் அமெரிக்கப் பேராசிரியர்கள் எழுதுகிறுர்கள். அந்தச் சமுதாயப் புரட்சி தன் பலனைக் கொடுத்து விட்டது. எங்கும் சம உணர்ச்சியும், சாதி பேதமில்லா நிலையும் வந்து விட்டது.

இனி அடுத்து வரவேண்டிய புரட்சி, மக்களின் மனேபாவத்தில் வரவேண்டிய ஒன்று. ஆனல், தமிழ் நாட்டில் மக்களின் மனேபாவம் கண்டுதான் நான் பலமுறை அதிர்ச்சி அடைந்தேன். ஒரு மக்கள் சமுதாயத்தின் மனேபாவம் இப்படி இருந்தால் அந்த நாடு எப்படி முன்னேறும் என்ற திகிலும் கவலையும் என்னுள் படர்ந்தது.

"தம்பீ! அமெரிக்காவிலிருந்து நீங்களும் உங்கள் மனைவியும் வந்து போக என்ன செலவாகும்?" என்று கேட்டார்கள்.

"சுமாராக ஒரு இருபத்தையாயிரம் ரூபாய் ஆகும்" என்றேன்.

"எல்லாம் கவர்மெண்ட் கொடுக்குமில்லையா?" என்றார்கள்.

நான் அதிர்ந்து போனேன்.

"ஐயா! நான் என் சொந்த நாட்டையும் உறவினர் களையும் பார்க்க வருவதற்குக் கவர்ன்மெண்ட் ஏன் கொடுக்க வேண்டும்? அது என்னுடைய சொந்த விஷய மல்லவா? என் சொந்த விஷயங்களுக்கெல்லாம் கவர்ன் மெண்ட் பணம் கொடுத்துக் கொண்டிருந்தால், மறுநாளே அது திவாலாக வேண்டியதுதான்" என்று விளக்கினேன்.

எனக்கு அவர்கள் மனோபாவம் புரிந்தது. எதற்கும் கவர்ன்மெண்டை — அரசாங்கத்தை — எதிர்பார்க்கும் மனோபாவம்! அரசியல்வாதிகள் 'அது தருகிறோம் இது தருகிறோம்' என்று போட்டி போட்டுக் கொண்டு சொல் லிச் சொல்லி ஒரு கையாலாகாத இனத்தை- பிறர் கையை நோக்கும் ஒரு சமுதாயத்தை—அரசாங்கத்தை நம்பி வாழும் ஒரு மக்கள் சமுதாயத்தைப் படைத்து விட்டிருக்கிறார்கள். தமிழ் உலகின் அன்றாட வாழ்வைக் கவனித்தேன். தமிழ் உலகமே அரசை நம்பித்தான் சுற்றிச் சுழலுவது போல் இருக்கிறது.

நான் தங்கியிருந்தபோது, "தம்பீ! உங்களுக்கு யாரையாவது மந்திரியைத் தெரியுமா? எலெக்டிரிசிடி போர்டில் கம்பம் நடுவதற்கு அன்றாடக் கூலி வேலைக்கு

ஆள் எடுக்கிறார்களாம். அதில் எப்படியாவது மந்திரியைப் பிடித்துப் பையனை நுழைத்து விட்டால் தேவலை'' என்றார்கள், என் நண்பரைப் பார்த்து. ஒருவருக்குச் சென்னையிலேயே இருக்க வேண்டுமாம்; அதற்குச் சொல்லுமாறு ஒருவர். மற்றொருவருக்கு மாற்றல் தேவையாம்! அதற்கான பேச்சு.

இன்னொருவருக்கு யாராவது அரசாங்கத்திடம் சொன்னால், ஒரு முப்பது ரூபாய் அலவன்ஸ் அதிகமாகக் கிடைக்குமாறு செய்யலாமாம். இதற்கு ஒரு சிபாரிசு.

இதுவல்லாமல் பி. டி. அட்மிஷன்; பி. காம். அட்மிஷன் என்று இப்படிப் பல.

இதையெல்லாம் கண்டபோது ஒரு விதத்தில் அமைச்சர்களைக் கண்டு பரிதாபப்பட்டேன். மற்றொரு விதத்தில், அமைச்சர்கள் எப்படி எங்கெங்கு வேலை காலி இருக்கிறது என்று கணக்கு வைத்துக் கொண்டு, எப்படி எல்லோரையும் அனுப்பி வைத்துத் திருப்தி செய்கிறார்கள் என்று ஆச்சரியப்பட்டேன்.

நியாயமில்லாதவற்றுக்கும், குப்பை விஷயங்களுக்கும் சுயநலத்திற்கும் இப்படி அரசாங்கத்தை மக்கள் எதிர்பார்க்கும் மனோபாவம் இருந்தால், நாடு எப்படி முன்னேறும், முன்னேற்றத்திற்கான சிந்தனைக்கு எங்கே நேரம் கிடைக்கும் என்று யோசித்தேன்.

சாந்தோம் பீச்சின் குடிசைகள், கடற்கரையை ஒட்டி எழுப்பியிருக்கும் குடியிருப்புக்கள் எல்லாம்—மக்களின்—தமிழ் நாட்டின் மனோபாவத்தைத்தான் பறைசாற்றிக் கொண்டிருந்தன.

எப்படியாவது வாழ்ந்தால் போதும் என்று, ஆபாசத்தையும் சுகாதாரமின்மையையும் பொருட்படுத்தாது

மக்கள் ஜீவிக்கும் நிலே, மக்கள் மனேபாவத்தைத்தான் பிரதிபலிக்கிறது.

அடுத்து, நான் வெகு ஆவலுடன் சென்ற இடம் சினிமா தியேட்டர். தமிழ்நாட்டில் பல படங்கள் பார்த்தால் அவற்றில் மிக வெற்றிகரமாக ஓடிய படம் 'சவாலேசமாளி'. கேரளத்தில் 'அனுபவங்கள் பாலிச்சகள்' (அனுபவங்கள் ஏமாற்றின) என்ற சத்யன் நடித்த மலேயாளப் படம் பார்த்தேன்.

இவ்விரண்டு திரைப் படங்களுமே இவ்விரண்டு மாநிலங்களேயும், அங்கு வாழும் மக்களேயும், அவர்களது ஆசாபாசங்களேயும், அவர்கள் மனேபாவத்தையும் புலப்படுத்துவதாக எனக்குப் பட்டது.

'சவாலே சமாளி' என்ன கதை?

தேர்தலில் தோற்று விட்டால் தன் மகளேக் கட்டிக் கொடுப்பதாக ஒரு பாட்டாளியிடம் (பேச்சாளியிடம்) பணயம் வைக்கிறுர் தன் மகளே, ஒரு மேட்டுக் குடிக்காரர். பின், பாட்டாளி தேர்தலில் வெற்றி பெற, கல்லூரியில் படித்த பெண் தந்தையின் சொல்லேக் காப்பற்ற அவனேத் திருமணம் செய்து கொள்கிறுளாம். கல்யாணம் செய்யு முன்னும், கல்யாணம் செய்த பின்னும் அந்தப் பெரிய இடத்துப் பெண்ணேக் கேவலமாகவும் இழிவாகவும் பேசலாமாம். அப்படிப் பேசுவது தான், பாட்டாளி வர்க்கத்து வெற்றியாம். ஒரு பணக்காரப் பெண்ணே ஓர் ஏழை சிவாஜி திட்டுமாறு கதாசிரியர் கை காட்டும் இடங்களில் எல்லாம், ஒரே கைத் தட்டல். உழைப்பின் உயர்வைப் பற்றி ஒரு பேச்சில்லே. முன்னுக்கு வருவதைப் பற்றி ஒரு மூச்சில்லே. ஒரு சாதாரண வேலேக்காரன் இப்படி ஒரு முதலாளியை

எதிர்த்துக் கேட்டு, மட்டந்தட்டி, தரை மகா ஜனங்களுக்கு மகிழ்ச்சி ஊட்ட வேண்டும் என்பதற்காகவே அந்த மேட்டுக் குடிக்காரர் சிவாஜியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு நிற்கிறார்.

அந்தச் சினிமாவைப் பார்க்கும்போது, ஏதோ கண்ணியமாக வாழும் ஓர் அமைச்சரின் மகள், ஒரு பிரபல தொழிலதிபரின் மகள், ஒரு பெரிய போலீஸ் அதிகாரியின் மகள்—இவர்களெல்லாம் கையில் மாலையை வைத்துக் கொண்டு, குப்பத்திலிருக்கும் ஒரு ரோசமுள்ள நல்ல தம்பிக்காகக் காத்துக் கிடந்து கெஞ்சுவது போலவும், ஏதோ உலகில் மாப்பிள்ளையே கிடைக்காதது போலவும் தோன்றியது.

யாரை, யார் ஏமாற்றுகிறார்கள்? இருப்பவனைத் திட்டினால் இல்லாதவனது நிலை உயர்ந்து விடுமா?

இப்படி இதுபோல் மக்களை நம்ப வைத்துச் சமுதாயத்தை உருவாக்கினால் அம்மக்கள் நாளை எங்கே அறிவில், ஆற்றலில், உழைப்பில் நம்பிக்கை வைக்கப் போகிறார்கள்?

சத்யனின் 'அனுபவங்கள் ஏமாற்றின' என்ற மலையாளப் படம் எப்படி இருந்தது?

ஒரு குடிகாரக் கணவன் குடும்பத்தை விட்டு விட்டுச் சென்று விடுகிறான். அக்குடிகாரனின் மனைவி குழந்தைகளை வைத்துக்கொண்டு சோற்றுக்குப் பாடுபடுகிறாள். அவள் எப்படி மற்றோர் ஆண் துணை வரும்போது தடுக்கிறாள், தவிக்கிறாள், பின் ஏற்றுக்கொள்கிறாள், அதன் விளைவு என்ன, அவளது குடிகாரக் கணவன் மீண்டும் வரும்போது எப்படிச் சந்திப்பு நேர்கிறது, என்பதெல்லாம் தான் கதை. நடைமுறை வாழ்வில் நடக்கக் கூடியவற்றைப்

பிரதிபலிக்கும் திரை இலக்கியம் அது. வாழ்க்கையின் ஏடுகளைக் காண்கிறோம் அங்கே. அவை நம்மைப் பண்படுத்துகின்றன.

நம் நாட்டை நான் அமெரிக்காவுடன் ஒப்பிட்டுப் பார்த்து "ஐயகோ! இப்படி ஆகிவிட்டதே உன் நிலை" என்று தமிழ்த் தாயைப் பார்த்துப் புலம்பவில்லை. அல்லது மற்றோர் ஆசிய நாடான ஜப்பானுடன் ஒப்பிட்டுப் பார்த்து "ஏ! தாழ்ந்த தமிழகமே!" என்று துயரக் குரல் எழுப்பவில்லை.

'கேவலம் சுண்டைக்காய் அளவுள்ள நமது அண்டை மாநிலமான கேரளத்தைப்போல் கூட நாம் இல்லையே' என்று எண்ணும்போது, அதிர்ச்சி என்னுள் வேதனையாய் வளர்ந்தது.

இன்றைய தமிழ்நாட்டை யார் எந்தப் பாதையில் அழைத்துச் செல்கிறார்கள்?

மத போதகர்களும், பள்ளி ஆசிரியர்களும், பத்திரி காசிரியர்களும், நாடகாசிரியர்களும்தான் நாட்டிற்கு வழி காட்டும் சிந்தனவாதிகள். "இப்படிப்பட்ட படங்கள் தான் இப்போது நிறைய வருகின்றன. அவற்றிற்குத் தான் மவுசு" என்று பலரும் சொல்வது உண்மையானல் நல்லவர்களெல்லாம் தீவிரமாக எண்ண வேண்டும், 'நாடு எங்கே போகிறது' என்று.

மக்களின் மனோபாவம் கண்டு நான் வருந்தவில்லை. அதை உருவாக்குபவர்களின் மனோபாவம் கண்டுதான் நான் அதிர்ச்சி அடைந்தேன். ஆயாசம் கொண்டேன்.

## 2. காமராசரும் அண்ணுவும் காட்டிய வழி எங்கே?

தமிழ் நாட்டில் மக்கள் அதிக முக்கியத்துவம் கொடுத்து அன்ருட வாழ்வோடு இணைத்துக் கொண்டிருக்கும் விஷயங்கள் இரண்டு: ஒன்று அரசியல்; மற்ருென்று சினிமா.

நமது ஊரில் சினிமா நட்சத்திரங்கள் போட்ட காலண்டர்கள் ஏராளமாக விற்பனை ஆகும். நமது வீடுகளில் நட்சத்திரங்களின் படங்களை மாட்டி அலங்கரிப்போம். அமெரிக்காவில் அவரவர்களது சொந்த, வீட்டுப் படங்களைத்தான் அறைகளில் மாட்டியிருப்பார்கள்.

அமெரிக்காவில், 'சினிமா ஒரு கலை; நடிப்பு ஒரு தொழில், அவ்வளவுதான். நமது ஊரிலோ ஒவ்வோர் இளைஞன் உள்ளத்திலும், பெண்ணின் மனத்திலும் சினிமா ஒரு பொன்சுரங்கம். வளமைக்கு, செல்வச் செழிப்பிற்கு, புகழிற்கு அதுவே பெரிய குறிக்கோள்—என்ற மனோபாவம் வளர்ந்திருக்கிறது; வளர்க்கப்பட்டிருக்கிறது.

மக்கள்முன் நிலையான குறிக்கோளை, வாழ்வுக்கான வழிவகைகளை, முன்னேற்றத்திற்கான முன்னோடும் கருத்துக்களை வைக்கத் தவறிவிட்டது தமிழகம். உழைப்பைப் பற்றியோ, எப்படி ஒவ்வொருவரும் வசதி

யாய் வாழ வழி காண வேண்டும் என்றே, எப்படி எல்லோரும் சுகாதாரமாக வாழலாம் என்பதைப் பற்றியோ, நாடு தொழில் மயமாக வேண்டியதன் அவசி யத்தைப் பற்றியோ யாரும் பேசக்காணேம்.

எனக்குத் தெரிந்த அநேக பணக்காரர்கள் எல்லோரும் கடந்த ஆண்டுகளில் தொழில் தொடங்கி யிருப்பதைக் கண்டேன். என்ன தொழில் என்கிறீர்கள்? ஊருக்கு இரண்டாகச் சினிமா தியேட்டர் கட்டிப் போட்டி ருக்கிறார்கள். இவர்கள் தொழில் தொடங்கும் வசதியுள்ள மனிதர்கள். பணம் படைத்தவர்களது மனோபாவமே தமிழ் நாட்டில் எப்படி ஆகிவிட்டது பாருங்கள்!

சினிமா தியேட்டர் கட்டினால் நாட்டில் எப்படிப் புதுப் பணம் வரும்? தொழில் அல்லவா நாட்டில் புதுப் பணத்தையும், வேலை வாய்ப்பையும் கொடுக்கும். தமிழ் நாட்டில் நிறைய சினிமா எடுத்து, எல்லோரும் சினிமா நட்சத்திரங்களாகி, தமிழ்நாடு பணக்கார நாடாகி விடலாம் என்று யாராவது சொல்லட்டும்.

நாட்டுக்கு வேண்டுவது, நெல் விளைவிப்பதைப்போல, புதிய பொருள், புதிய அறுவடை. நமக்குத் தேவைப்படும் பொருட்களையும், பிற நாடுகளுக்கும் தேவைப்படும் பொருட்களையும் நாம் உற்பத்தி செய்தாலல்லவா, நமது ஊரில் புதுப் பணம் புரளும், வசதி வளரும், வாழ்க்கை முன்னேறும்.

நான் சென்னையிலிருந்தபோது எல்லோரும் "அண்ணு சமாதி பார்த்தீர்களா?" என்று கேட்டார்கள். "பார்த் தேன்" என்று கூறினேன். அவர்கள் கேள்வியில் அர்த்த மிருந்தது. அண்ணு என்ற அந்த மகத்தான மனிதரை,— மேதையைத் தமிழ்நாடு எப்படிப் போற்றுகிறது என்ப தற்கு அது ஒரு சான்று.

அடுத்து, அவர்கள் என்னைக் கேட்ட கேள்வி, "செபயர் தியேட்டர் பார்த்தீர்களா? தேவி பாரடைஸ் பார்த்தீர்களா?" என்பவைதான்.

ஏதோ செபயர் தியேட்டரினால் தமிழகமே முன்னுக்கு வந்து விட்டாற் போலவும், தமிழனின் திறமையை அது உலகுக்குப் பறைசாற்றுவது போலவும் பேசினார்கள்.

அம்பத்தூரில் பேக்டரி கட்டியிருக்கிறார்கள் புதிதாக என்றோ, மணலியில் பெட்ரோ கெமிகல் தொழில் தொடங்கப் போகிறார்களே தெரியுமா என்றோ, தூத்துக் குடியில் யூரியா தொழிற்சாலை தொடங்கப் போகிறார்களே தெரியுமா என்றோ கேட்க வில்லை. மக்கள் மனோபாவம் எப்படி இருக்கிறது பாருங்கள்.

"நீ எப்படி எண்ணுகிறாயோ அப்படியே ஆவாய்" என்பது பழமொழி. தமிழகத்தின் மனோபாவம் எப்படி வசதி படைத்தவர்களிலிருந்து மிகச் சாதாரண ஏழை வரை சினிமா உலகைச் சுற்றிக் கொண்டிருக்கிறது என்பது என்னைத் திகைப்பூட்டியது. திடுக்கிட வைத்தது.

சினிமாத் துறையிலுள்ள சிலரிடம் நான் இது பற்றிக் கூறியபோது அவர்கள் கவலை தெரிவித்தார்கள். நாட்டுக்கு இது நல்லதன்று என்று கூறினார்கள். இந்த ஒருதலைப்பட்ட வளர்ச்சி நாட்டின் எதிர்காலத்திற்கு ஏற்றதன்று என்று கூறினார்கள்.

"தமிழகமே! நீ வேறு ஏதும் வேலை செய்ய வேண்டாம். பட்டி தோறும் ரசிகர் மன்றங்கள் அமை. தெருவெல்லாம் நடிகைகள் பற்றித் தமிழ்முழக்கம் செய். சினிமா நட்சத்திரங்களின் சொகுசும் அழகும் பற்றிப் பேசு. புதிய தியேட்டர்கள், புதிய முகங்கள், புதிய படங்கள் பற்றிப் பேசு. சிந்தி; எழுது; ஏன், உனக்குக்

கூட ஒரு நாள் சினிமாவில் நடிக்க ஒரு சந்தர்ப்பம் கிடைக்கலாம்; நீயும் குபேரனுகி விடலாம்.

தமிழகத்தின் தேவைகள் நிறைந்துவிடும்.

தமிழகத்தின் குறைகள் நீங்கிவிடும்.

ஏன் இப்படித் தமிழ் மக்கள், சினிமா என்றவொரு கொட்டகைக்குள் புகுந்து கொண்டு இதுவே உலகம் என்று தங்கள் நேரத்தையும் சிந்தனையையும் வீணுக்கி வாழ்கிருர்கள் என்று எண்ணினேன்.

தமிழ் மக்களது அறிவுக்கும், ஆற்றலுக்கும், திறமைக்கும், துணிவுக்கும், ராஜாஜியும், காமராசரும், அண்ணுவும் ஏற்றிய தீபத்தைக் கொண்டு எங்கோ போயிருக்க வேண்டிய தமிழ்நாடு, இப்படி எங்கோ குறிக்கோள் மாறி, திசை தவறிச் சுழல்கிறதே என்று என் மனம் ஆதங்கப்பட்டது.

தமிழகம் எங்கே செல்கிறது?

'அதன் தலைவர்களும், சிந்தனுவாதிகளும் இதை அறிந்தும் பார்த்துக் கொண்டுதான் நிற்கிருர்களா?' என்ற கேள்விகள் என்னுள் எழுந்தன. யார் இதற்குக் காரணம் என்ற கேள்வியும் என்னுள் எழுந்தது.

ஒரு நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கும் சிந்தனுவாதிகள் மூன்று பேர்.

முதலாமவர்: மதபோதகர்கள்—சமயப் பிரசாரகர்கள்.

இரண்டாமவர்: பள்ளி ஆசிரியர்கள்.

மூன்ருமவர்: பத்திரிகாசிரியர்கள்.

(அரசியல்வாதியைப் பற்றி அப்புறம் பேசுவோம்).

இவர்கள்தான் ஒரு நாட்டின் ஜீவநாடி. ஆங்கிலத்தில் இவர்களை (Thought Leaders) என்று கூறுவார்கள். ஒரு கருத்து மக்கள் மனத்தில் புகவேண்டுமானால் இவர்கள் மூலம்தான் புகவேண்டும். மக்கள் மனத்தில் ஒரு கருத்தைப் பதித்து அச்சமுதாயத்தை எந்தப் பக்கம் அழைத்துச் செல்ல வேண்டுமோ, அந்தப் பக்கம் அதைத் திருப்பிச் செல்லும் சிந்தனையும், அதற்கேற்ற வாய்ப்பையும் பெற்றவர்கள் இவர்கள்.

சமயத்தைப் பார்ப்போம். சமுதாயத்தில் இன்று சமயத்தின் பிடிப்பு இருக்கிறது. ஆனால், சமயப் பிரசாரகர்களின் பிடிப்பு ஒன்றும் அதிகமில்லை இன்று. அவர்கள் ஏதோ ஏங்கிய நிலையில், மன்னிப்புக் கேட்கும் மனோபாவத்தில் இன்று இருக்கிறார்கள். நிலைமை அப்படி.

பள்ளி ஆசிரியர்கள் விதைக்கும் கருத்து முளைத்து வெளிவரப் பத்தாண்டுக் காலமும், சில சமயம் ஒரு தலைமுறையும் ஆகும்.

ஆனால், பத்திரிகாசிரியர்களது செல்வாக்குப் பத்து ஆண்டுக் காலமோ அல்லது ஒரு தலைமுறை வரையிலுமோ காத்திருப்பது அல்ல. காற்று வீசும் அந்த அளவு வேகத்துடன் அவர்கள் தங்கள் கருத்துக்களைப் பரப்ப முடியும். தி. மு. க.வின் வெற்றிக்கு எப்படி 'தினத்தந்தி' உதவியது என்பது நாடறிந்த உண்மை. பத்திரிகைகளின் பலமும், சக்தியும் மகத்தானவை.

கடந்த இருபதாண்டுகளாகத் தமிழ் நாட்டை உயரத் தூக்கிச் செல்வதில் பத்திரிகைகள் என்ன செய்தன என்று பார்க்கலாம். தமிழனின் வாழ்வை, தொழில் வளத்தை, சுய கௌரவத்தை, உழைப்பை எப்படி மேம்படுத்தின என்று பார்க்கலாம். இன்றைய தமிழனின்

மனோபாவத்தை எப்படிக் கஷ்டப்பட்டு உருவாக்கின என்று பார்க்கலாம்.

ஒரு நட்சத்திரம் 'எப்படிப் படுத்தால் நல்லது' என்று, தனது செக்ஸ் அப்பீலுடன் படுக்கையறைப் படத்துடன் விளக்குகிறது ஒரு வாரப்பத்திரிகை.

இப்படிச் செய்வது யார்? ஒரு மஞ்சள் பத்திரிகையா? இல்லை. தமிழ் கூறு நல்லுலகந்தோறும் அதிகமாக விற்பனையாகும் பத்திரிகை. இது யாருக்காக வெளியிடுகிறார்கள் என்று நினைக்கிறீர்கள்? சிவப்பு விளக்குத் தெருவில் வசிப்போர்களுக்கு 'டிப்ஸ்' வழங்கும் இதழா இது? இல்லை. குடும்பப் பத்திரிகை என்று கூறிக் கொள்கிறார்கள். வரிவிடாமல் படிக்கும் வார இதழாம்; சொல்கிறார்கள். அதில் முக்கியமாக வருவது ஒரு நடிகை எப்படிப் படுத்தால் நல்லது என்ற பொருள் பொதிந்த கட்டுரை!

மற்றோர் இதழில்: திரைக் கதாநாயகர் காலையில், மத்தியான வேளையில், மாலையில், இரவில் என்ன சாப்பிட்டார் என்ற மிக முக்கியமான விஷயம் வெளியாகி இருந்தது.

"காலையில் நான் ஆரஞ்சு ஜூஸ் சாப்பிடுவேன், ஆப்பிள் ஜூஸ் சாப்பிடுவேன், ஆட்டுக்கால் சூப் சாப்பிடுவேன் என்றும், மீன் பொரியலும் மொச்சைக்கொட்டை குழம்பும்தான் எனக்குப் பிடிக்கும்" என்ற வர்ணனைகள். இதன் வாசகர்களும், "நல்ல வேளை, கதாநாயகரின் உணவு முறை தெரிந்தது வயிற்றில் பாலைவார்த்தாற் போல் இருக்கிறது" என்று மறுநாள் படுக்கப் போனார்கள்; எப்படி? சரியான விதத்தில், சரியான கோணத்தில் சாய்ந்து!

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டில் சில பத்திரிகைகள், பச்சையான கதைகள் — அப்படிப்

பட்ட அழகிகளின் படங்கள் — இவற்றைப் பிரசுரித்து விற்றன. அமைச்சர்கள் அன்று அதைக் கண்டித்தார் கள். அவற்றை மஞ்சள் பத்திரிகை என்றார்கள்.

இன்று என்னவென்றால் வெள்ளை சுதேசித் தாளுக் குள்ளும், வழவழப்பு அட்டைக் கிடையிலும், மஞ்சள் தனம் செய்கிறார்கள்.

இன்றையக் கதாசிரியர் சிலர் ஒரு பெண்ணின் மேடு பள்ளங்களைப் பற்றி நவீனம் எழுதுகிறார்கள். இதுவன்றி ஒரு சாதாரண இரண்டணா—நாலணா காசிற்குப்பத்திரிகை வாங்கும் ஒரு வாசகர், பல விதமான கதாநாயகிகளுடன்— ஒரு குறும்புக்காரி, கோபக்காரி, தாபக்காரி, பால்காரி, தயிர்க்காரி என்று எல்லாவிதமான பெண்களுடனும் — சல்லாபித்து அனுபவித்து விட்ட உணர்ச்சியை வாரி வழங்கி வருகிறார்கள். அவை கதைகளாம்! சொல் கிறார்கள்!

நிலைமை இப்படி இருக்கும்போது நீங்கள் ஏன் கவலைப் படுகிறீர்கள், தமிழ் நாடு எங்கே செல்கிறது என்று?

பின் எங்கே போகும்? பத்திரிகைகள் மக்கள் முன் நின்று மக்களுக்கு வழி காட்டலாம். அல்லது மக்கள் ஆசாபாசங்களுக்கேற்ப நடத்தப்படலாம். மக்களுக்கு வழிகாட்டத் துணிச்சல் வேண்டும்; கற்பனை வேண்டும்; தீர்க்க தரிசனம் வேண்டும்; நாட்டின் எதிர்காலத்தின் மீது அக்கறை வேண்டும்.

தமிழ்ச் சமுதாயம், திங்கள் கிழமை காலையில் ஆபீசுக்குப் போவதிலிருந்து கதை படித்துக் கொண்டிருக் கிறது; பொழுதுபோக்கிக் கொண்டிருக்கிறது தமிழ் நாட்டுக்குச் சரியாகத் திசை காட்டுவோர் இல்லை. கவலைப் படுவோர் கண்ணீர் விடுங்கள்; சிந்தியுங்கள், சீறி எழுங்கள்.

## 3. பாரதியாருக்குப் பிடிக்காத பாவங்கள் !

தமிழ் நாட்டில் நண்பர்கள் என்னையும் என் மனைவியையும் 'பாஷ்' ஓட்டல் எனப்படும் அதிகச் செலவுள்ள மேற்கத்திய உணவு விடுதிகளுக்கு அழைத்துச் சென்றனர். அங்கெல்லாம் என்ன கண்டேன்? ஒரு விளையாட்டைக் கண்டேன். அது வேடிக்கையாக இருந்தது எனக்கு. நாங்களும் இந்தியர்கள். அந்த 'பாஷ்' ஓட்டலை நடத்தியவர்களும் இந்தியர்கள். சர்வர்களும் வெள்ளைச் சட்டைக்குள் ஒளிந்து கொண்டிருந்த கறுப்பு மனிதர்கள் தான். எல்லோருமே சேர்ந்து ஒரு வெள்ளைக்கார விளையாட்டை விளையாடினோம். அதாவது ஒரு மேற்கத்திய நாட்டு ஓட்டலில் எப்படி உணவுக்கு ஆர்டர் கொடுப் போமோ அப்படி, நமது சுவையான தமிழ் நாட்டு உணவை எப்படி ருசியைக் கெடுத்து வெள்ளைக்காரர் களுக்கு வழங்குவார்களோ அது போல, எப்படிப் பீங்கான் தட்டுகளை மேஜையில் நிறைத்து விலையைக்கூட ஏற்ற முடியுமோ அப்படி எல்லாம் நடந்தது. அவருக்கும் இது ஒரு போலி என்று தெரிகிறது. நமக்கும் இது போலி என்று தெரிகிறது. இப்படி ஒரு விளையாட்டு! இத்தகைய ஓட்டல்களை இதற்கு முன்பு சென்னையில் மிதித்தறியாத நான், இதை வேடிக்கையாக ரசித்தேன்.

"இரவு கேளிக்கை நடனங்களைப் பார்க்க ஆசைப் படுகிறீர்களா? இப்போது 'காபரே' நடனம் கூடச்

சில ஓட்டல்களில் நடத்துகிறார்கள்'' என்றார்கள் என் நண்பர்கள்.

''போதுமான அளவு 'டாப் லெஸ்' 'பாட்டம் லெஸ்' ஆட்டங்களையும் பெண்களையும் சான்பிரான்ஸிஸ்கோ விலும் சிகாகோவிலும் பார்த்திருக்கிறேன்'' என்று கூறி விட்டு, சென்னை இப்படி முன்னேறியிருப்பதைக் குறித்து என் பாராட்டைத் தெரிவித்துக் கொண்டேன்!

சென்னை நகரிலே பெண்களை அமெரிக்கன் ஜீன்சிலும், மலேயா உடையிலும், ஆங்கில ஸ்கர்ட்டிலும் பார்த்த போது, நமது நாடு ஒன்றும் பின் தங்கியிருக்கவில்லை என்ற எண்ணம் சிரிப்பிடையே எழுந்தது.

அமெரிக்கா போன்ற மேற்கத்திய நாடுகளில் பல ஆண்டுகள் வசித்துவிட்டு இப்போது தமிழ் நாட்டைப் பார்க்கும் என்னைப் போன்ற ஒருவன், 'ஆகா! என்னைப் போன்றவர்களுக்கென்று ஒரு மேற்கத்திய உலகத்தை உருவாக்கி வருகிறார்களே' என்று மகிழ்வதற்குப் பதில், ஏதோ தமிழ் நாட்டின் பண்பாடும் ஜீவனும் மெதுவாகப் புரையோடுவதைப் போல் ஒரு விசாரம் எழும்பியது மனத்தில்.

தமிழகமெங்கும் இந்த மாற்றத்தில் ஈடுபடவில்லை என்று என் மனம் சமாதனம் சொல்லியது. எனினும் பணக்காரர்களும், செல்வாக்குள்ளவர்களும் எந்த ஒன்றை உயர்வாக, கௌரவமாகக் கருதிக்கொண்டாடு கிறார்களோ, அதுவே ஏழை மக்களையும் கவர்ந்து அதைக் கௌரவம், சிறப்பு என்று கருதத் தூண்டும். இது உலக இயல்பு. தமிழகம் எங்கே போய்க் கொண்டிருக் கிறது என்ற சந்தேகம் வந்தது எனக்கு.

தமிழ் நாட்டில் இரு விளம்பரங்கள் என் கண்களைக் கவர்ந்தன. 'இரண்டு குழந்தைகள் போதுமே' என்ற

குடும்பக் கட்டுப்பாடு பிரசாரமும், கருணு, ஐ. ஆர். 5, 8 போன்ற கலப்பு விதைகள் பற்றிய பிரசாரமும். இவற்றைப் பார்த்ததில் — காரியங்கள் இப்படி நடப்ப தில் எனக்கு மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டது.

இவை அன்றி, சாதாரண அமைச்சர்களது பொதுக் கூட்ட நோட்டீசுகளிலும், பிறந்த தினவிழா (!) நோட்டீசு களிலும் இப்போது அமைச்சர்களின் வண்ணப் படங்கள் எங்கும் தோன்றியிருந்தன. சினிமாவுக்கு அடுத்தபடி யாகப் புதுமுக அமைச்சர்கள் கூட நட்சத்திரப் பதவிக்குப் போவது போல் தோன்றியது.

தஞ்சை மாவட்டத்தில் தில்லையாடிக்குப் போனேன். அங்கே நாகப்பன்-வள்ளியம்மை இருவரும் காந்தியடி களுடன் தென் ஆப்பிரிக்காவில் வாழ்ந்த கதைகளை அற்புதமாகப் படமாக்கி அந்த நினைவு மண்டபத்தை, ஒரு கல்யாண மண்டபமாகக் கட்டியிருந்தார்கள்.

பச்சைப் பசேலென்றிருந்த இலுப்பைத் தோப்பைத் தரை தட்டமாக வெட்டி, பொட்டைத் திடலாக்கி அங்கே நூற்றுக்கணக்கான அரிஜன விடுதிகள் கட்டி யிருந்தார்கள். ஏழு லட்சம் செலவு என்று சொன்னார் கள். தில்லையாடி பாழடைந்து மண் மேடிட்டுப் போய்க் கொண்டிருந்த ஊர். ஆகவே, அங்கே மீண்டும் ஜீவனைக் கண்டதில் எனக்கு மகிழ்ச்சி.

ஆனல், ஒரு தொழில் அடிப்படை இல்லாது புகைந்து போய்க் கொண்டிருக்கும் ஊர் தில்லையாடி. அதில் லட்சம் ரூபாயில் போய் வீட்டைக் கட்டிப் போட்டால், அவர்கள் வீட்டை வைத்துக் கொண்டு அடுத்து என்ன செய்வார் கள்? ஒரு தொழிலை அரசாங்கம் அங்கே தொடங்கியிருந் தால் அதில் நூற்றுக் கணக்கான ஏழைகளுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கும். அப்போது அவர்கள் தங்களுக்குத்

தேவையான புதிய வீட்டைக் கட்டிக் கொள்வார்கள்; புதுப்பணம் புரளும்; வாழ்வு வளமடையும். நமது முதல்வருடன் இதுபற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். பல விஷயங்களைத் தெளிவு செய்தார். ஏழைகளுக்கு வீடு கட்டிக் கொடுத்ததன் அவசியத்தை விளக்கினார்.

நமது நாடு இல்லாத நாடுதான். எனினும் இலவசப் பள்ளிக்கூடமும், இனமான மருத்துவ வசதியும், இலவசப் புறம்போக்குக் குடியிருப்பும்-அதற்கு அவனே தீ வைத்து விட்டால், அவனுக்குக் கட்டிக் கொள்ளப் பணமும்... என்று நாம் கொடுத்து, நமது பரிதாபத்தில் ஏழை மனிதனின் காலை ஒடித்து விட்டோமோ என்று நான் கவலைப்படுகிறேன். ஏழையை, தானே நிற்க முடியாத வனாக்கி விட்டோமோ என்ற சந்தேகம் என்னுள் எழுகிறது.

ஓர் அமெரிக்கனிடம் இனமாக ஒரு பரிசைக் கொடுத்தால் அவன் வாங்கிக் கொள்ள மாட்டான். கடைசியில் வலுக்கட்டாயப்படுத்தி வாங்கிக் கொள்ள வைத்தோமானால், "இதற்குப் பதில் உனக்கு நான் ஏதாவது செய்து விடுகிறேன்!" என்பான். ஏனெனில், பொருள்களைப் பிறரிடமிருந்து இனமாக வாங்கிக் கொள்வது கேவலம்' என்பது அவர்கள் மரபு. அது அவனது சுயகௌரவத்தின் மண்டையில் அடிப்பதைப் போல் அவன் நினைக்கிறான். அப்படி அவன் வளர்க்கப்பட்டிருக்கிறான்.

நம்மிடையோ இனமாக மற்றவன் தரமாட்டானா என்ற மனோபாவம் ஒட்டி ஊறிப் போய் இருக்கிறது.

"இருப்பவன்தானே, கொடுத்தால் என்ன? என்கிறார் கள். இன்னும் ஒருபடி மேலே போய், "இருப்பவன்

ஏன் கொடுக்கமாட்டேன் என்கிறுன்?'' என்று கோபப் படுகிறுர்கள்.

பாரதியார் எழுதினுர், "நமது கதாகாலட்சேபங் களில் பாகவதர் எந்தப் பாகத்தைச் சிறப்பாக நடிக்கிறுர் தெரியுமா? நைச்சிய பாவம், பிச்சைக்கார பாவம், இரந்து கேட்கும் மனுேபாவம். அதுதான் அவர் காலட்சேபத்தில் மேவிப் போயிருக்கிறது. இது நமது நாட்டின் மனத்தைப் பிரதிபலிக்கிறது'' என்று பாரதியார் இம் மனுேபாவத்தைச் சாடுகிறுர். ஏனெனில், கொடையாளர் ஒருவர் பணம் வந்து கொடுத்த போதும், "நீ கொடுக்காதே; பணத்தை உன் கையில் வைத்துக்கொள்; நான் எடுத்துக் கொள்கிறேன்'' என்று கூறிய தன்மான வீரரல்லவா அவர்?

இன்றைய தமிழ் நாட்டிலோ, ஒரு லாட்டரியில் விழாதா என்போரும், நம்ம கலைஞர் நமக்கு மாதம் ஒரு நூறு ரூபாய்க்குக் கவர்ன்மெண்டில் ஏற்பாடு செய்யக் கூடாதா என்று எண்ணுவோரும் எத்தனை லட்சமிருப் பார்கள்? எண்ணிப் பாருங்கள்.

இந்தியாவின் பிரச்சனைகளை அமெரிக்க ஆங்கில இதழ் 'டைம்' வரிசைப்படுத்தியிருக்கிறது:

வறுமை.

மக்கள் தொகைப் பெருக்கம்.

எல்லைகளில் தொல்லை.

குறைந்த விவசாய மகசூல்.

சுகாதாரமின்மை.

இவை அனைத்தையும் செயல் மூலம் மாற்றி விடலாம். சட்டம் போட்டு மாற்றி விடலாம். பணத்தைக் கொண்டு செய்து விடலாம்.

ஆனால் ஒரு நாடும், அதன் மக்களும் எண்ணங்களில் நோயுற்று, சிந்தனையில் சீக்குப் பிடித்து வாழ்ந்தார்களானால்...?

## 4. ஊட்டம் எங்கே? உணர்வு எங்கே?

"தமிழர்கள் புத்திசாலிகள்" என்று நேரு சொன்னால், "டில்லியில் பெரிய பதவிகளில் தமிழர்கள் தான் இருக்கிறார்கள்—தமிழினம் புத்திசாலித் தனம் நிறைந்த இனம்" என்று மற்றவர்கள் பாராட்டினால், அதை அப்படியே நம்பிப் பெருமைப் படும் கூட்டத்தைச் சேர்ந்தவன் நான். 'புத்திசாலித்தனம்' என்பதற்கு ஈடான வார்த்தை வேறில்லை; பெருமை வேறில்லை என்பதில் ஒரு குழந்தைத் தனமான பிடிவாதம் என்றும் எனக்கு உண்டு. பிற நாட்டாருடனே, அதிலும் மற்ற மாநிலத்தாருடனே பேசும்போது எனது கொள்கையை முற்றிலும் நிரூபிக்கப் பட்ட உண்மையாக எண்ணிப் பேசுபவன் நான்.

ஆனால், தமிழ் நாட்டவர்களாகிய நாம் செய்யும் பல காரியங்களையும் பார்க்கும்போது 'நாம் உண்மையிலேயே புத்திசாலிகள் தானா?' என்ற சந்தேகம் என்னுள் எழுகிறது. "புத்திசாலித்தனம் என்பது என்ன? அறிவைப் பயன்படுத்தும் திறன் அல்லவா அது? அது இங்கே காலியாக அல்லவா இருக்கிறது!' என்று நான் அதிர்ச்சி அடைகிறேன்.

எனது அக்கறையும் கவலையும் நமது உணவைப் பற்றியது; உடல்—மன—வளர்ச்சியைப் பற்றியது; நாளை வளரும் தமிழ்ச் சந்ததி—பரம்பரையைப் பற்றிய கவலை அது.

கடந்த நாற்பதாண்டுகளாக, சம உணவைப் பற்றியும் போஷாக்கான ஆகாரத்தைப் பற்றியும் பள்ளிகளில் போதித்து வருகின்றனர். சம உணவு என்பது என்ன? உணவில் எவ்வளவு புரதம் இருக்க வேண்டும், தாதுப் பொருள், காய்கறிகள் இருக்க வேண்டும் என்றெல்லாம் தெளிவாகப் படித்திருக்கிறோம். அதுபற்றி நம்மால் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியும்; பரீட்சை எழுதித் தேற முடியும். ஆனால், சாப்பிடும் வேளை வந்து விட்டால் சம உணவுக்கும் சமையலறைக்கும் நமது படிப்பிற்கும் நமது நடைமுறைக்கும் சம்பந்த மிருப்பதில்லை. ருசியாய்ச் சாப்பிடுகிறோம்! அவ்வளவுதான்.

உணவில் போதுமான புரதம் இல்லாவிட்டால் குழந்தைகளின் மூளை வளர்ச்சி நிரந்தரமாகப் பாதிக்கப் படுகிறது என்று விஞ்ஞானிகள் நிரூபித்திருக்கிறார்கள். ஆனால், நமது உணவில் முக்கிய அங்கம் வகிப்பதோ, வயிற்றை நிரப்புவதோ வெறும் மாவுப் பொருள்தான்.

வெளிநாட்டுச் சரித்திரப் புத்தகங்களில் எழுதியிருக் கிறது, தென்னிந்தியர்கள் பார்ப்பதற்குக் கறுப்பாகவும், குள்ளமாகவும், சிறு உருவம் படைத்தவர்களாகவும் இருப் பார்கள் என்று. இதை அகில இந்தியாவையும் சுற்றிப் பார்த்தவர்கள் அறிவார்கள். இது பற்றி நாம் அதிகம் சிந்திப்பதில்லை. நாம் வசிப்பது விஞ்ஞான யுகம்— இருபதாம் நூற்றாண்டு—என்ற உணர்வே நமக்கு இருப் பதாகத் தெரியவில்லை.

தமிழ்ச் செல்வர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அடிக்கடிப் பேசுவார் கூட்டங்களில் :

“என் தாயார் எங்கள் வீட்டில் இருபது பேருக்கு மிளகாய்ச் சாந்து அறைத்துக் குழம்பு வைப்பார்கள். அவர்கள் உடலில் அத்தனை வலு இருந்தது. இப்போது

என்னவென்ருல் நமது வீட்டில் இருப்பவர்களுக்கு மிளகாய் அறைக்க முடிவதில்லே. உடலில் சக்தியில்லே. மிஷினில் அறைத்துக் கொண்டு கரண்டியால் அள்ளிப் போட்டுச் சாம்பார் வைக்கிருர்கள். நமது உடல் நிலே பற்றி—குறிப்பாக, நமது பெண்களின் உடல் நிலே பற்றி —நாம் கவனம் செலுத்த வேண்டும். ஏன்? அவர்கள் அல்லவா நமது சந்ததியை—பரம்பரையை— வளர்ப்பவர் கள்'' என்று.

ஆனுல், அவர் பேச்சு யார் காதிலும் விழுந்ததாகத் தெரியவில்லே. இதற்குள் சுதந்தரம் பெற்ருேம். நம்மை நாமே ஆளக் கற்றுக் கொண்டோம். நமது பிரதிநிதிகள் கடந்த 25 ஆண்டுகளாக அமைச்சர்களாக மக்கள் நல்வாழ்வுத் துறையை நிர்வகித்து வருகிருர்கள்.

கடந்த 25 ஆண்டுகளில் அமெரிக்காவில் ஒரு புரட்சி நடந்தது. இந்தத் தலேமுறையினர் தங்கள் பெற்ருேரை விடச் சராசரி மூன்றங்குலம் உயரமாக வளர்ந்திருக்கிருர் கள். காரணம், அவர்கள் உணவு அமைப்பில் அவர்களே புகுத்திக் கொண்ட மாறுபாடுதான். அன்ருடம் உண்ணும் ரொட்டியில் பலவிதச் சத்துள்ள பொருள் களேச் சேர்க்கிருர்கள். குறிப்பாக நம் உடல் வளர்ச்சிக்கு மிகத் தேவையான, 'லேசின்' என்ற பொருளேச் சேர்க் கிருர்கள். பொதுவாக, சைவ உணவுக்காரர்களின் உணவில் இது இருப்பதில்லே.

அதேபோல் ஜப்பானில் வளரும் புதிய தலேமுறை, முன் சந்ததியினரை விட உயரமாகவும் உடற்கட்டுடனும் வளர்வதால், அவர்களது ரெடிமேடு உடைத் தொழில் பூராவும் மாற்றி அமைக்க வேண்டி ஏற்பட்டது. அவர் களும் நம்மைப்போல் குள்ளமானவர்கள் தான்.

புத்திசாலிகளான நாமோ வெறும் மாவுப் பொருளை—அரிசிச் சோற்றை—சாப்பிட்டுக் கொண்டிருக்கிறோம். சோற்றுக்கே வழியில்லாத வறுமையைப்பற்றிய பிரச்சனை அன்று இது. இருப்பதைச்சரியானபடி உபயோகிக்கிறோமா என்னும் கேள்விதான் இது.

அமெரிக்காவில் விற்கப்படும் அரிசியில் கூட இரும்புச் சத்தை ஏற்றி, மக்களுக்குப் போஷாக்கு அளிக்கும் வகையில் விற்கிறார்கள். ஓர் அமெரிக்க வீட்டில், சைவ உணவுக்காரர்களான நாம், விருந்துக்குப் போய்விட்டால் "எப்படி உனக்கு வெறும் அரிசிச் சாதத்தையும் வெந்த காய்கறிகளையும் வழங்குவேன்? உன் புரத தேவைக்கு நான் எப்படி ஈடுகட்டுவேன்?" என்று துடித்துப் போவார் அவ் வீட்டுத் தலைவி. மக்கள் அவ்வளவு தூரம் சம உணவு பற்றிய உணர்வுடன் வாழ்கிறார்கள் அங்கே.

தமிழ் நாட்டில் யாருடைய வீட்டுக்காவது போனால், "ஃபேண்டா சாப்பிடுகிறீர்களா? கோகோ கோலா சாப்பிடுகிறீர்களா?" என்று உபசரிக்கிறார்கள். தாகசாந்திக்கு இவை நல்ல பானங்கள்தான். ஆனால், மக்கள் இவற்றை அணுகும் விதம்'எப்படி நமது மக்கள் கௌரவத்தை முன் வைத்து உணவுச் சத்தைப் பின் வைத்து விஷயங்களை அணுகுகிறார்கள்' என்பதைக் காட்டுவதாக எனக்குப் பட்டது. உணவில் சத்துக் காரணமாக நாம் அவற்றின் பலனை அலசுவதில்லை. உணவுப் பொருள்களுக்கு நாமாக உருவாக்கிக் கொண்ட ஓர் உயர்வு தாழ்வைக் கொண்டு பொருட்களை அணுகுகிறோம். நெய்யில் செய்தது என்ற உயர்வுடனும் (உடலில் கொழுப்பைச் சேர்க்கும்-வெறும் ஊளைச் சதையை வளர்க்கும் என்று அமெரிக்கன் தொடமாட்டான்.), இறுக வைக்கப்பட்ட எண்ணெயில்-வனஸ்பதியில் செய்தது என்ற பெருமையுடனும், தித்திப்புப் பொருட்களுக்கு நாம் கொடுக்கும் மதிப்பும், ஃபேண்டா

போன்ற பானங்களை நாம் அணுகும் விதமும்—எல்லாம் கௌரவப் பிரக்ஞை (Prestige conscious) ஆக இருக்கும் மக்கள் நாம் என்பதைத்தான் பறை யடிக்கிறது. கார்பன்-டை-ஆக்சைட் கரைந்த சர்க்கரைத் தண்ணீருக்குப் போய் நாம் இவ்வளவு விலையும், மரியாதை யும் கொடுப்பது விசித்திரமாகத் தோன்றுகிறது.

புது டில்லியில் நமது முன்னாள் தூதுவர் திரு.ஜி.பி. அவர்களைச் சந்தித்த போது, அவர் காலைப் பலகாரத் துடன் மோர் சாப்பிட்டுக் கொண்டிருந்ததைக் கண்டு வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன்.

ஒருமுறை நான் தியாகராயநகர் பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டிருந்த போது அங்கிருந்த கடையை நோக் கினேன். அங்கே பல கிண்ணங்களில் தயிர் வைக்கப்பட்டி ருந்தது. மதிய வேளையில் அருகிலுள்ள குடும்பங்கள் சாப்பாட்டிற்கு வாங்கிச் செல்வார்கள் போலும் என்றெண்ணி கடைக்காரரைக் கேட்டேன்.

அவர் சொன்னார்: நம்மைப் போன்றவர்கள்தான் இந்த உதவாக்கரை பானங்களை 50 காசு கொடுத்துக் குடித்துவிட்டுப் போவார்கள். ஆனால், இந்தப் பக்கத்தில் வசிக்கும் மக்கள் புத்திசாலிகள். தாகசாந்திக்கு நல்ல குளுமையான தயிரைச் சாப்பிட்டு விட்டுப் போவார்கள்; விலையும் நாலணாதான்!'' என்றார். எனக்கு அதிர்ச்சியும் ஆச்சரியமும் ஏற்பட்டது.

நோய் வந்தால் மருத்துவ மனைக்கு நாம் நடக்கும் நடை மிக அதிகம். அமெரிக்காவிலோ ஆண்டில் இரண்டு மூன்று முறை நோயென்று வைத்தியர் வீட்டை நாடிச் செல்வது அதிகம். காரணம்? அவர்கள் உணவு, ஊட்டம் நிறைந்ததாக இருக்கிறது. ஆகவே, அவர்களுக்கு நோயை எதிர்க்கும் சக்தி உடலில் நிறைய இருக்கிறது.

ஆனல், நமது ஊரிலோ, "டாக்டர் வீட்டிற்குப் போய் வந்தேன். ஊசி போட்டுக் கொண்டேன்" என்று பெருமையுடன் பேசும் பெரியப்பாக்களும், அத்தைகளும் அனந்தம். நமது மனோபாவம் ஆரோக்கியமானதல்ல. பின், உடலில் எப்படி ஆரோக்கியம் வரும்?

இந்த நமது வீட்டுப் பிரச்சனை உண்மையிலேயே பெரிய நாட்டுப் பிரச்சனை. நாடும், அரசாங்கமும், தலைவர்களும் மக்களிடையே உணவு பற்றிய ஓர் உணர்வை ஏற்படுத்த வேண்டும். உணவு சமைக்கு முன் பெண்களும் உணவுப் பண்டங்களை வாங்கு முன் சம்பாதிப்பவர்களும், போஷாக்குக் கண்ணோட்டத்துடன் பொருள்களை மதிப்பிடும் மனோபாவத்தை நாம் உருவாக்க வேண்டும்.

கூனூருக்கு அருகில் இந்தியாவின் உணவு ஆராய்ச்சிக் கழகம் ஒன்றிருந்தது. இது மக்களுக்கு உணவு பற்றி ஆராய்ந்து அறிவு வழங்க ஏற்படுத்தப்பட்ட ஆராய்ச்சி நிறுவனம்.

கல்வியும், படிப்பும் எப்படி நம்மிடை வெறும் சடங்காகப் போய் விட்டதோ, அதேபோல நமது ஆராய்ச்சிக் கூடங்களில் பெரும்பாலானவையும் ஏதோ பெயருக்கு ஸ்தாபனமாகவும், சிலருக்கு வேலை வாய்ப்புத் தரும் இடங்களாகவும் ஆகிவிட்டன.

ஆரம்பப் பள்ளியிலிருந்து சம உணவுபற்றி நாம் படித்து வந்தாலும், "படிப்பு வேறு, வாழும் முறை வேறு —வாழும் முறை பரம்பரைப் பழக்கப்படி" என்று கல்வியை நாம் வாழ்க்கையில் புகவிடாமல் வளர்ந்து விட்டோம்; நமது இளைய சமுதாயத்தை வளர்த்து வருகிறோம்.

நாம் விசித்திரமான 'படித்த' மக்கள்!

இதன் விளைவாக, பால் மணம் மாருத பச்சிளம் பாலகர்களை நான் எனது கல்லூரி வகுப்புக்களில் இந்தியா வில் கண்டதுண்டு. இடை வேளையில் பால் புகட்ட, பையன்களுடைய அம்மாவும் கல்லூரிக்கு வந்திருப்பார் களோ என்ற சந்தேகம் எனக்கு எழுந்ததுண்டு.

இப்படி வீங்கிய தலையும் உலர்ந்த உடலுமே கொண்ட தமிழ் மாணவனுல் புறநானூறு பேசும் புறத்தைப் பற்றி —வீரத்தைப் பற்றி—என்ன செய்துவிட முடியும்? இல்லை, அகத்தைப் பற்றித்தான் என்ன செய்து விடப் போகிருன்?

ஒரு நலிந்த தமிழினத்தைத் தோற்றுவிப்பான்.

எங்காவது இப்போதெல்லாம் பேச்சு, தமிழனின் புத்திசாலித்தனத்தைப் பற்றித் திரும்புமாஞல், நான் அதிகம் பேசுவதில்லை? மௌனம் சாதித்து வருகிறேன்.

## 5. கல்வி ஒரு நாலாண்டுச் சடங்கு!

நமது நாட்டில் கல்வி, தேங்கிக் கிடக்கும் குட்டையாக நாற்றமெடுத்துக் கொண்டிருக்கிறது. கடந்த 25 ஆண்டுகளாக நாம் எந்த மாற்றமும் செய்யவில்லை. கல்வியில் நாம் 25 ஆண்டுகள் பின் தங்கிப் போய்விட்டோம். நான் நமது கல்வியை, இங்கிலாந்துடனும், ஜப்பானுடனும் ஒப்பிட்டுப் பார்த்து நாம் கீழே போய்விட்டோமே என்று பதறவில்லை; அண்டை மாநிலங்களான குஜராத், மகாராஷ்டிரம், பஞ்சாப் போன்ற மாநிலங்களிலிருந்து கூட, பல கல்லூரிகளிலிருந்து ஆராய்ச்சி முடிவுகள் வெளியிடப் படுகின்றன. பிலாயில் இருக்கும் கல்லூரியை அமெரிக்கவில் உள்ள எம். ஐ. டி. பல்கலைக்கழகம்போல டாடா அமைத்து வருகிறார். டில்லியில், நேரு பல்கலைக் கழகம் 18 மாதங்களுக்குள் சர்வதேச மதிப்பைப் பெற்றுவிட்டது.

பிற இடங்களில் எல்லாம் விழிப்பு ஏற்பட்டு விட்டது. நாம் இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறோம்.

நம்மிடையே, 'ஏதோ ஓடிக் கொண்டிருக்கிறது. அப்படியே இருக்கட்டும்' என்று கவலைப்படாத - நம்மைச் சிரமப்படுத்திக் கொள்ளாத - மனோபாவம் பரவியிருக்கிறது.

நமது கல்வி எங்கே போய்க் கொண்டிருக்கிறது? பள்ளத்தை, படுகுழியை, பாதாளத்தை நோக்கி!

இதன் பலன் இன்று நமக்குத் தெரியாமல் இல்லை. ஐ. ஏ. எஸ். தேர்வுகளில் தமிழன் கீழே போய்விட்டான் என்பதும், சென்னை ஐ.ஐ.டி. பொறி இயல் தேர்வுகளில் நமது தரம் மிக மோசமாக இருப்பதாகக் கருதப்படுகிறது என்பதும் பலரும் அறிந்த உண்மை.

ஆனால், இன்று படித்து அடுத்த தலைமுறையில் மனிதனாக வரப்போகும் நமது இளைஞர் சமுதாயத்தின் விதியை நாம் பாழ்படுத்திக் கொண்டிருக்கிறோம். அவர்களது எதிர்காலத்தில் நமக்குப் பொறுப்பு உண்டு. நமது மாணவர்களது நாளைய எதிர்காலம் நாம் இன்று கொடுக்கும் கல்வியால் எப்படிப் பாதிக்கப்படுகிறது என்று எண்ணும்போது, நெஞ்சம் பதறுகிறது; இரத்தம் கொதிக்கிறது.

தமிழ் நாட்டில் படித்தோர் இல்லையா? தலைவர்கள் இல்லையா? எங்கே அவர்கள்? என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்ற அவசரம் நமக்கு ஏற்படுகிறது.

நமது கல்வி முறை மெக்காலே என்ற ஆங்கிலேயன், 'சர்வே' செய்பவர்களை நாட்டில் உருவாக்குவதற்காக அமைத்துக் கொடுத்த கல்விமுறை என்று கல்கி போன்றோர் கண்ணீர் விட்டுக் கூறினார்கள். நாம் சுதந்தரம் பெற்றோம். இன்று நாம் சர்வேயர்களை உற்பத்தி செய்வதற்குப் பதில் தாலுக்கா ஆபீஸ் எழுத்தர்களையும் ரயில்வேயில் டிக்கெட் பரிசோதகர்களையும் உருவாக்குவதற்காக நாம் அதைப் பயன்படுத்தி வருகிறோம்.

கடந்த 20 ஆண்டுகளில் ஜப்பானிலும், ஜெர்மனியிலும் என்ன நடந்தது? ஏன் நாம் அதுபோல் தொழில் துறையில், விஞ்ஞான வளர்ச்சியில் கற்பனை மிகுந்தவர்களை, துணிவு நிறைந்தவர்களை உண்டாக்க முடியவில்லை என்று எண்ணிப் பாருங்கள். மனித மூளையில் ஆரம்ப

முதற்கொண்டே எண்ண அமைப்புக்களை உருவாக்கும் நமது கல்வி முறை சீர்கெட்டுப் போயிருக்கிறது என்பது விளங்கும்.

நான் தமிழ் நாட்டில் பல கல்லூரி முதல்வர்களைச் சந்தித்தேன். பல கல்வி அதிகாரிகளைச் சந்தித்தேன். பல மாணவப் பிரதிநிதிகளைப் பார்த்தேன். அவர்கள் எல்லோரும் சொன்னார்கள், ''மாற்றம் தேவை என்றுதான் நமது தலைவர்கள் இப்படி அடிக்கடிப் பேசுகிறார்கள். ஆனால், எல்லாம் வெறும் 'மத மத' ஆசாமிகள்...'' என்று. விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்கு மட்டும் வேண்டுவதல்ல அறிவு. புரிந்து கொண்டதை உடனடியாகப் பயன் படுத்தவில்லை என்றால், எதற்கு அந்த அறிவு? நாம் எந்த ஊருக்கு அதன் மூலம் செல்ல முடியும்?

யார் செய்ய வேண்டும்?

நமது கல்வித் தலைமையாளர்கள் தான். 'யார் அவர்கள்? இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? என்ற கேள்வியை எல்லாம் எழுப்பி நமது சிறிய ஊரில் முகச் சுளிப்பை ஏற்படுத்துவது எனது நோக்கமன்று; என்ன செய்ய வேண்டும் என்று சிந்திப்போம்.

நமது நாடு இன்னும் தொழில் நாடாகவில்லை. இன்னமும் 80 சத மக்கள் விவசாயத்தை நம்பித்தான் வாழ்கிறார்கள். எனினும் விவசாயப் பிரிவு - படிப்பு என்று, இஷ்ட பாடமாகக் கூட நமது உயர்நிலைக் கல்வியில், நமது கல்லூரிகளிலே வைத்திருக்கிறோமா என்று எண்ணிப் பாருங்கள். ஏதோ விவசாயம் உயர் படிப்பாகச் சில தனிக் கல்லூரிகளில் வேலை பெறுவதற்காக, சிலருக்கே கிடைக்கும் ஒரு வாய்ப்பாக அதை அமைத்து விட்டோம். விவசாயம் இன்னும் நமது வாழ்க்கையில் 80 சதம் ஒட்டி

யிருந்தும் நாம் அதைப் பொதுக் கல்வியிலிருந்து பிரித்து விட்டோம்.

அமெரிக்காவும் ஒரு காலத்தில் விவசாய நாடாகத் தான் இருந்தது. அப்போது கல்லூரிகள் எல்லாம் அரசாங்க உதவியுடன் விவசாயக் கல்லூரிகளாகத்தான் திறக்கப் பட்டன. உயர்நிலைப் பள்ளிகளில் இன்றும் விவசாயம் ஒரு பாடமாகப் போதிக்கப்படுகிறது. நாமோ விவசாயம் படிப்பதற்குப் பதில் தத்துவம் படிக்கிறோம்; தமிழ்க் கவிதை படிக்கிறோம்.

சிறுவயதில் எனது அடுத்த வீட்டுக்காரர் சொல்லு வார், 'என்ன பள்ளிக் கூடத்தில் சொல்லிக் கொடுக்கிறார் கள்? கவைக்குதவாத படிப்பு' என்று.

கவைக்குதவாத படிப்பு என்று அன்று அவர் சொன்னதைத்தான் பெருங்குரலாக "கல்விக்கும் வாழ்க் கைக்கும் என்ன சம்பந்தம்?" (Relavance of Education) என்று கடந்த சில ஆண்டுகளாகக் கேட்கத் தொடங்கி இருக்கிறார்கள்.

*1957* - ல் ரஷ்யா, முதல் ஸ்புட்னிக்கை வானில் விட்ட வுடன் உலகம் அதைப்பெருஞ் சாதனையாகப் போற்றியது. ஆனால், அமெரிக்காவிலோ, பட்டி தொட்டிகளில் படித்தவர்கள், ஆசிரியர்கள், அரசியல்வாதிகள் எல்லாம் ஒரே கேள்வியைத்தான் கேட்டார்கள் : "ஏன் நாம் தோற்று விட்டோம்?ஏன் நாம் வானவெளி ஆராய்ச்சியில் முந்தவில்லை? எங்கே ஏற்பட்டது தவறு, நமது கல்வி முறையில் தான்" என்றார்கள்.

தொடர்ந்து கல்வியில் ஒரு புரட்சியே நடந்தது. ஆரம்பப்பள்ளிகளின் பாடதிட்டங்கள் மாற்றப்பட்டன. கணிதத்தில் எங்கும் அதிகக் கவனம் செலுத்தினர்.

பத்தாண்டுகளுக்குள் சந்திரனில் காலே வைத்த முதல் மனிதன் அமெரிக்கனுக மாறிய கதை உங்களுக்குத் தெரியும்.

இந்தியாவைச் சீனு தாக்கியது; பதைத்தோம். 'பாவி, நட்புத் துரோகி' என்று சபித்தோம். நமது ராணுவ வலிமையை அதிகப்படுத்திஞேம். வேறு ஏதாவது மாற்றம் நிகழ்ந்ததா? நமது அடிப்படையில் வேறுதேவை யான மாற்றங்களேத்தோற்றுவித்தோமா என்று எண்ணிப் பாருங்கள். ஏன் செய்யவில்லே? யார் செய்ய வேண்டும் ஆசிரியர்களா? மாணவர்களா? அரசியல் தலேவர்களா? கல்வித் தலேமையாளர்களா? எண்ணிப் பாருங்கள்.

பொது அறிவு பெறவும், ஒரு தொழிலேத் தெரிந்து கொள்ளவும் கல்வி தேவைப்படுகிறது. ஒரு ரசாயனப் பட்ட தாரியைப் படிக்க வைக்கும் செலவு சுமார் நாற்பதாயிரம் ரூபாய். ஒரு மருத்துவ மாணவனேப் படிக்கச் செல வழிக்கும் ரூபாய் சுமார் எண்பத்தையாயிரம். ஒரு சாதாரண பி. ஏ. மாணவனேப் படிக்கவைக்கும் செலவு, கல்லூரியில் சுமார் இருபதாயிரத்திற்கு மேலாகிறது.

ஒரு சாதாரண மனிதனுடைய வருமானம் ஆண்டுக்கு ஆயிரம் கூட இல்லாத ஓர் ஏழை நாட்டில், ஆயிரக் கணக்கில் செலவழித்து அரசாங்கம் மாணவனேக் கல்லூரி யில் படிக்க வைக்கிறது. தமிழ் நாட்டில் கல்விக்காகும் மொத்தச் செலவு நூறு கோடிக்கு மேல். இது நமது மொத்த வருமானத்தில் சுமார் நாலில் ஒரு பங்கு. 'பட்டி தொட்டிகளில், குப்பங்களிளெல்லாம் கல்லூரி நிறையத் திறந்திருக்கிறோம்' என்கிருர்கள். பாராட்ட வேண்டியது தான்.

ஆனல், நீங்களே இப்படி ஒரு பெரிய தொகையைப் போட்டு, ஒரு தொழில், ஒரு வியாபாரம், ஒரு பத்திரிகை

அல்லது ஒரு கடை வைத்து நடத்துகிறீர்கள் என்ருல் அதில் என்ன பயன் உண்டு, லாபம் உண்டு-என்று கணிக்க மாட்டீர்களா? ஆங்கிலத்தில் இதை Cost benefit analysis-செலவு—பயன் பட்டியல்—என்று சொல்வார்கள். இவ்வளவு பணத்தைக் கொட்டி மாணவர்களுக்கு இவ்வளவு செலவில் அறிவைப் போதிக்கிருேமே, அவர்களால் சமுதாயத்துக்கு என்ன நன்மை ஏற்பட்டிருக்கிறது; எப்படித் தொழில் மேம்பட்டிருக்கிறது; எப்படி வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறது என்று ஒப்பிட்டுப் பாருங்கள். இதை விடக் குறைந்த செலவில் அதிகப் பயனேப் பெற்ருர்கள் ஜப்பானியர்கள்.

கல்வியை நாம் ஒரு சடங்காக ஆக்கிவிட்டோம். படிக்க வேண்டியது ஒரு நெறிமுறை என்று, ஒரு கோவில் அர்ச்சனேயைப் போல ஆக்கிவிட்டோம். அங்கே ஆண்டவன் இல்லே; உயிரில்லே. நாமும் அதிகம் சிந்திக்காமல் பணத்தைக்கொட்டி வருகிருேம். பணத்தை இப்படி வாரி விடும்போது அமெரிக்கா போன்ற நாடுகளில் என்ருல், அந்த நிலேயில் உள்ளவர்களேப் பார்த்து "எங்கே ஐயா பலன்!" என்று கண்ணில் விரலே விட்டு ஆட்டிக் கேட்பார்கள்.

நாமோ, 'கல்விக்குச் செய்ய வேண்டியது நமது கடன்; நமது சம்பிரதாயம்; தர்மம்' என்று சமாதானம் சொல்லிக் கொள்வது போல் தோன்றுகிறது. இந்த ஏழை நாட்டில் இப்படி நாம் கண்ணே மூடிக் கொண்டு செலவு செய்யலாமா என்று நான் என்னேயே கேட்டுக் கொள்கிறேன். அரசியல் தலேவர்கள் செலவு செய்பவர்களேப் பார்த்துக் கேட்கும் நாளும், வரி கொடுக்கும் மக்கள் உணர்வு பெற்றுக் கேட்கும் நாளும் அதிகத் தூரத்தில் இல்லே.

நமது மாணவர்களுக்கு என்ன பாடம் சொல்லிக் கொடுக்கிறோம்? அவன் மன வளர்ச்சிக்கான கல்வியை நாம் அவனுக்குத் தருவதில்லை. அவன் வளர்ச்சிக்கு எது வேண்டும் என்பதை நாம் வரையறுத்து, அவன் மீது பாட திட்டம் என்ற பளுவை ஏற்றி வைக்கிறோம்.

உதாரணமாக இரசாயனம் படிக்கும் மாணவனுக்கு நாடகத்தில் ஆர்வம் இருந்ததென்றாலோ, மனோதத்துவத்தில் ஆர்வம் இருந்ததென்றாலோ, அவன் அந்த வகுப்புகளில் போய் அமர்ந்து தன் அறிவை விரிவு படுத்திக் கொள்ள முடியாது; தன் அறிவுத் தாகத்தைத் தணித்துக் கொள்ள முடியாது. கல்லூரியில் புகும் நிலையில் சுமார் 25 சதம்பேர் கூட தனக்கு எது வரும், தான் எப்படி வர வேண்டும் என்ற திட்டவட்டமான எண்ணம் கொண்டிருப்பதில்லை என்று கண்டிக்கிறார்கள். போகப் போகத் தங்கள் திறமையை, ஆர்வத்தைத் தாமேகண்டு அதில் இறங்குகிறார்கள்.

நமது கல்வி நிலையில் அதற்கு வழியே இல்லை. செக்கு மாடு போல அவன் எடுத்துக் கொண்ட பாடதிட்டத்தை அவன் சுற்றி வர வேண்டும். வேறு பாடத்தில் ஆர்வம் என்றால், மற்றொரு முறை மூன்றாண்டுக் காலம் அவன் சுற்ற வேண்டும்.

யாருக்காகப் பாடம்? யாருக்காக அறிவு? நமக்குச் சடங்குதான் முக்கியம். அறிவு பெறுவது இரண்டாம் பட்சம். அப்படி இருக்கிறது நமது கதை.

நமது பாடதிட்டங்களை— அசைக்க முடியாத இரும்பினாலான சிறைக்கம்பிகளை - பல்கலைக் கழகத்தின் தலைமைப் பீடத்தில் உள்ள ஆறு வயோதிகர்கள் தீர்மானிக்கிறார்கள். அவர்கள் முப்பது ஆண்டுகளுக்கு முன் என்ன படித்தார்கள் என்ற எண்ணத்தில் பாடதிட்டங்களை

அமைப்பதாகப்புலப்படுகிறதே தவிர, வெளி உலகின் நடப்பு என்ன என்று அதிகம் உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. நடக்கிற வழி முறைகளை மாற்றுவது என்றால், பாபகரமான செயலாகக் கருதும் ஒரு சனாதனக் கூட்டம் மேலே உட்கார்ந்திருப்பதைப் போல்தான் எனக்குத் தோன்றுகிறது.

இவர்கள் தீட்டிய பாடதிட்டத்தைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த மற்ற 30 கல்லூரிகளும் செயல் படுத்துகின்றன.

பாடத்தைச் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியருக்கு, மாணவனுடன் ஏதும் சம்பந்தமில்லை. இவர் தனக்குத் தெரிந்ததை அதிகமாகச் சொல்லிக் கொடுப்பதனால் மாணவனுக்கு ஏதும் தேர்வில் பலன் ஏற்படப் போவதில்லை.

தன்னிடம் பாடம் கற்கும் மாணவனது அறிவு வளர்ச்சியை மதிப்பிடும் வாய்ப்பும் இவருக்கு இல்லை. யாரோ பாடதிட்டத்தை அமைக்க, யாரோ கேள்வித் தாள்களைக் குறிக்க, யாரோ திருத்தி அதை மதிப்பிட, யாரோ சொல்லிக் கொடுக்கிறார்கள்.

இந்த முறை 'தபால் மூலம் கல்வி'க்கு மிக நல்ல முறை. நமது கல்வியாளர்களோ கடந்த கால் நூற்றாண்டுக்கு மேலாக அஞ்சல் வழிக் கல்வியைக் கேவல மாகக் கருதி வந்தார்கள்!

அமெரிக்காவிலும், ஜெர்மனியிலும், ஜப்பானிலும் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர், மாணவனின் வளர்ச்சியை மதிப்பிடுகிறார்.

என்று நாம் நமது ஆசிரியர்கள் மீது நம்பிக்கை வைப்போம்?

ஆசிரியர்களை நேரடியாக அவர்களது மாணவர்களை மதிப்பிடுமாறு சொல்லிவிட்டால் தரம் போய்விடுமாம். ஆசிரியர்கள் பணம் வாங்கிக் கொண்டு, தேர்ச்சி பெறச் செய்து விடுவார்களாம்.

இப்போது என்ன வாழ்கிறது? சென்னைப் பல்கலைக் கழக அமைப்பில் ஆசிரியராகப் பணியாற்றிய எனக் கல்லவா தெரியும், உள்ளே நடக்கும் விஷயங்கள்! அதிகாரத்தைக் காட்டியும் பணத்தைக் காட்டியும் பாசத்தைக் காட்டி நேசம்பேசியும் என் வீட்டில் என்னை அணுகியவர்கள் எத்தனைப்பேர்? என் சக ஆசிரிய நண்பர்கள் கூறும் கதைகள் எத்தனை எத்தனை?

## 6. எப்போது புறப்படப் போகிறோம்?

அமெரிக்காவில் ஒவ்வொரு கல்லூரிக்கும் தனித் தியங்கும் உரிமை உண்டு. கல்லூரித் தலைவர்களே அவர் களுக்குப் பிடித்த பாடதிட்டத்தை அமைப்பார்கள். அந்தந்த ஆசிரியர்களே அவர்களது மாணவர்களை மதிப் பிடுவார்கள். அவர்களே பட்டம் வழங்குவார்கள். மூன்றுண்டுக்கு ஒரு முறை ஒரு நிபுணர் குழு வரும். சம்பந்தப்பட்ட கல்லூரியின் பாடதிட்டம், பயிற்சி முறை, ஆசிரியர்களின் திறன் ஆகியவை பற்றியும் கல்லூரி நிர்வாகம் பற்றியும் மாணவர்களின் குறைகள் பற்றியும் அந்த நிபுணர் குழு ஆராய்ந்து, கல்லூரி தொடர்ந்து நடக்க அனுமதிக்கும்; அல்லது மறுக்கும்.

கல்லூரிகள் அங்கெல்லாம் தனித்து இயங்குவதனுல் மாணவனுக்குப் புதிய புதிய முறைகளில், புது உத்திகளை உபயோகித்து, நல்ல விதமான கல்வியைச் சிறப்பான முறையில் அளிப்பதில் ஒரு போட்டி மனப்பான்மையை உருவாக்கி யிருக்கிறுர்கள். அந்தக் கல்வியும் மனிதத் தன்மை வாய்ந்ததாய் இருக்கிறது.

நமது ஊர் கல்வியோ, தாசில்தார் உத்தரவு போடு வதை வெட்டியான் நிறைவேற்றும் தாலூகாபீஸ் கல்வி முறையாக இருக்கிறது.

பாடதிட்டங்களின் மூலம் நாம் எப்படிப்பட்ட மாணவனை உருவாக்க விரும்புகிறோம்? நமது குறிக்கோ

ளெல்லாம் நல்ல ஞாபக சக்தி உள்ளவனை—நினைவாற்றல் உள்ளவனை உருவாக்குவதாகவே இருக்கிறது. நமது கல்வி அமைப்பில் மாணவனது சிந்திக்கும் திறமையை, பிரச்சனைகளைத் தீர்க்கும் திறமையை (Problem Solving) நாம் வளர்ப்பதில்லை. நமது ஊரில் நெட்டுருப் போட்டு நினைவு வைத்துக் கொண்ட ஒரு மாணவன் சிறந்த மாணவனாக - முதல் மாணவனாக - வர முடியும்.

ஏன்?

நமது கல்வி எல்லாம் 'நீ, இவ்வளவு விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்' என்ற பொதியில், சுமையில், பாடபுத்தக எடையில்தான் குறியாயிருக்கிறதே தவிர "இதோ பாடம், பார், எப்படிச் சிந்தித்து இதை உருவாக்கி யிருக்கிறார்கள்? பிற சூழ்நிலையில் இந்த அறிவைக் கொண்டு நீ எப்படி நடந்து கொள்வாய்?" என்று மாணவனது சிந்திக்கும் சக்தியையோ, மாணவனது ஆரோக்கியமான மனோபாவத்தையோ வளர்ப்பதாயில்லை. 'கேள்வி - பதில்' இதுதான் கல்வி. பதிலும் முன்பே சொல்லிக் கொடுக்கப்படும். மாணவனின் பொறுப்பு, அதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது. அல்லது நெட்டுருப் போடவேண்டியது.

தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள், எத்தனையோ புத்தகங்களில் இருக்கின்றன. அவற்றை அவன் ஏன் மூளையில் சுமக்க வேண்டும்? அமெரிக்காவிலே மாணவனுக்குச் சிந்திக்கும் திறமையை வளர்க்க விரும்புகிறார்கள். அந்த மனப்போக்கில் கல்வி கற்றுக் கொடுக்கிறார்கள்.

நெட்டுரு முறையில் தேறிவந்த நமது ஊர் மாணவர்கள் எத்தனை பேர் இந்தச் சிந்திக்கும் முறையைச் சமாளிக்க முடியாதவர்களாகி - இங்கே (அமெரிக்காவில்)

டாக்டர் பட்டத்திலிருந்து தள்ளப் பட்டார்கள் என்பதை நானறிவேன்.

நாம் அப்படிப் பழக்கியிருக்கிறோம் நமது மாணவர்களை.

நமது ஊருக்குக் கோடையில் ஆசிரியர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க விஸ்கான்ஸிலிருந்து ஒரு பொறியியல் பேராசிரியர் வந்தார்.

"ஆசிரியர்களுக்கு வகுப்பில் சொல்லிக் கொடுத்த கணக்கையே திருப்பிக் கேட்டால் போட்டு விடுகிறார்கள். அதில் சில விஷயங்களை மாற்றி அவர்களைச் சிந்திக்குமாறு கணக்கை அமைத்தோமானால் அவர்களால் போட முடிவதில்லை. சமையல் செய்வதற்கு 'இது, இத்தனை வேண்டும்' (Cook Book Recipe) என்று இருப்பது போலத் தெரிந்து வைத்திருக்கிறார்கள்!" என்றார் அவர். இவர்கள் பொறியியல் ஆசிரியர்கள். இவர்கள் உருவாக்கும் மாணவர்கள் எப்படி இருப்பார்கள்?

இப்படிச் சுயமாகச் சிந்திக்க முடியாத தொழில் துறை மாணவர்களை நாம் உருவாக்கினால், எப்படிப் புதிய முறையில் சிந்தித்துப் புதுப் பொருள்களைக் கண்டுபிடிப்பார்கள் அவர்கள்?

இதுதான் நம் நிலை; இதில் ஆசிரியர்களைக் குற்றஞ் சாட்ட முடியாது. மாணவர்களைக் குற்றஞ் சாட்ட முடியாது. நமது கல்வி முறையைத்தான் குற்றஞ்சாட்டிக் கழுவிலேற்ற வேண்டும்.

பல்கலைக் கழகம் என்பது அறிஞர் கூடி - சிந்தனையாளர்கள் கூடி - விவாதிக்கும் இடம் என்று சொல்

வார்கள். இன்று நாம் அதைப் பெரும்பாலும் புத்தகங்களின் மறு பதிப்புகள் ஒன்று கூடும் இடங்களாக ஆக்கி வந்திருக்கிறோம்.

நமது கல்வி முறையில் விவாதத்திற்கு இடமில்லை நாம் விவாதத்தை வரவேற்பதில்லை. நமது பள்ளிகளில் மாறுபட்ட கருத்துக்கு வாய்ப்புக் கொடுப்பதில்லை. ஏதோ ஆசிரியரைச் சகலமும் தெரிந்த அறிவின் நீரூற்று என்றும் அதை அள்ளிக் குடிக்க வந்திருக்கும் பிஞ்சு உள்ளங்கள் மாணவர்கள் என்றும் கருதுகிறோம்.

அறிவு வளர்ச்சி ஓர் இரு பக்க நீரோட்டமாகும்.

நமது ஊரில் உயிர் வேதியல் (Bio - chemistry) என்ற பாடத்தை உயர் படிப்புக்கு—எம். எஸ்சி. படிப்புக்குப் பாடமாக உயர்த்தி வைத்திருக்கிறோம். அமெரிக்காவில் உயர்நிலைப் பள்ளிகளிலே கூட அது போதிக்கப் படுகிறது. இங்கு மனோதத்துவம் எல்லா மாணவருக்கும் தேவையான அறிவாக - பாடமாகக் கருதப்படுகிறது. நமது ஊரிலோ அது தனிப்பாடமாகி ஒருசில கல்லூரிகளில் போதிக்கப்படுகிறது. நமது ஊரில் இசையோ, நாட்டியமோ இன்னும் சரியான கல்வி அந்தஸ்தைப் பெறவில்லை. நாட்டியம் பற்றி எவ்வளவு உயர்வாகப் பேசுகிறோம்; நாடகத்தை விவாதிக்கிறோம்! ஆனால், அந்த அளவுக்கு அவற்றிற்குக் கல்லூரிகளில் இடம் கொடுத்திருக்கிறோமா? இங்கெல்லாம் சகஜமாக எல்லாக் கல்லூரிகளிலும் இசை, நாட்டியம், நாடகம் போதிக்கப் படுகிறது.

நம் நாட்டுக்கு ஒத்த—நமது பண்பாட்டுக்கு ஏற்ற கல்வியை அமைப்பதில் கூட நாம் இன்னும் முனையவில்லை.

'உயர் கல்வி என்ருல் இதுதான்' என்ற ஒரு நவருன ஓர் அமைப்பை நாமே கற்பனை செய்து கொண்டிருக்கிறேம். ஏதாவது மாற்றினுல் 'வெள்ளைக்காரன் கல்வி' குப்பத்து வாழ் மக்களுக்கான கல்வி ஆகிவிடுமோ என்று நாம் அஞ்சி வருகிறேம்.

நானும் என் அமெரிக்க நண்பர்களும் பல ஆசிரியர்களைச் சந்தித்தோம். என் அமெரிக்க நண்பர்கள் பெருமையுடனும் வருத்தத்துடனும் சொன்னுர்கள், "அறிவுத் திறத்தில் மற்றெந்த நாட்டிற்கும் கீழ்ப்படாத மனிதர்கள் கல்வி போதிக்கிருர்கள். ஆனுல், உங்கள் கல்வி அமைப்புதான் அவர்கள் கழுத்தை இறுக்குகிறது" என்று.

ஹிந்து பத்திரிகையின் துணைஆசிரியர் திரு. பலராமுடன் பேசிக் கொண்டிருந்தபோது கேட்டேன்: "வெறும் அரசியலையே பக்கம் பக்கமாக எழுதி நிரப்புகிறீர்களே! நீங்கள் சர்வதேச மனிதர். உங்கள் பத்திரிகையும் ஒரு சர்வதேசப் பத்திரிகை. ஒரு கல்லூரி ஆசிரியர் பேச்சையோ, கல்வி பற்றிய விமர்சனத்தையோ, பாடம் சொல்லிக் கொடுக்கும் புதிய வழிமுறைகளையோ, நமது கலாசாரப் பலவீனங்களைப் பற்றியோ கட்டுரைகளாகப் பிரசுரித்தால் என்ன? அப்போதல்லவா நாடும் மக்களும் விழிப்படைவார்கள்! அரசியல் அல்லாமல் பல முக்கிய விஷயங்கள் இருக்கின்றன என்ற முக்கியத்துவம் மக்களிடையே ஏற்படும்" என்றேன்.

அவர் கூறினுர்: "எங்களுக்குப் புதன் தோறும் அப்படி ஒரு சமூக இதழ் வெளியிடும் திட்டம் உண்டு. எத்தனை ஆசிரியர்கள் தைரியமாக எங்களுக்குக் கட்டுரை எழுத முன் வருவார்கள் என்று கேட்கிறேன்?" என்ருர்.

நமது ஊரில் படித்து விட்டு, கல்லூரியிலிருந்து வெளி வரும் மாணவன், தான் ஏதோ சமூகத்திற்கு அப்பாற்பட்ட மனிதனுய்த் தன்னை நினைக்கிருன். ஏதோ நகத்தில் அழுக்குப் படாத வேலை கொடுக்க, ஊதியம் கொடுக்க—சமுதாயம் கடன்பட்டிருக்கிறது என்று எண்ணுகிருன்.

இதன் மூலம் துரதிர்ஷ்டவசமாக சமுதாயத்தின் கீழ்நிலையில் வாழும் மக்களின் நிலை மேலும் கீழே போகிறது. படிப்பும் அறிவும் கீழ் மட்டத்தில் ஊடுருவிப் பலனளிக்கும் வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. மாணவன் பொது வாழ்க்கையில் தான் ஓர் அங்கம் என்பதை உணர வேண்டும்.

ஓராண்டு பொது நல சேவை என்று கிராமத்திலோ, சேரியிலோ ஒரு திட்டத்தில் அவனை ஈடுபடுத்தினல், இருவரும் முன்னேறுவார்கள். மற்ற மூன்ருண்டுகளில் பாடம் கற்றுக் கொடுத்துப் பட்டம் வழங்கலாம்.

''ஒரு சேரியைச் சுவீகாரம் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று கல்லூரிகளுக்குச் சவால் விடுத்தார் பம்பாய் கவர்னரின் மனைவி. அமெரிக்காவில், நீக்ரோ மக்களை முன்னேற்றவும், அமெரிக்க இந்தியர்களை முன்னேற்றவும், கிராமங்களில் சென்று உழைக்கும் கல்லூரி மாணவர்கள் ஏராளம். நாமோ இப்படி ஒரு திட்டம் பற்றிக் கடந்த இருபது வருஷ காலமாகப் பேசி வருகிறோம். இன்னும் எவ்வளவு காலம் பேசப் போகிறோமோ?

வெறும் கல்வியைச் சடங்காகப் பரப்புவதில், நாளை வேலை இல்லாத் திண்டாட்டம்தான் பெருகும். கல்வியின் மூலம் அவர்கள் தங்கள் எதிர் காலத்திற்கான ஒரு முடிவை அவர்களே எடுக்க உதவுவோமேயானுல் அக்கல்வி நாட்டிற்குப் பலன் தரும்.

நமது இன்றைய அரசியல் தலைவர்கள் இளைஞர்கள். துடிப்பும், வேகமும் அவசரமும் கொண்டவர்கள். தமிழ் நாட்டை முன்னணியில் வைக்க எதையும் பணயம் வைக்கும் சித்தமுடையவர்கள்.

அவர்கள் முன் பெரும் பொறுப்பு இருக்கிறது.

கல்வியில் நமக்கென்று ஓர் ஐந்தாண்டு, பத்தாண்டுத் திட்டம் வேண்டும். ஹைதராபாத்திலிருந்து வந்த நிர்வாகக் குழு நமது கல்வியின் நிலையைக் கோடி காட்டியது. நமக்கு ஒரு கல்விக்குழு தேவை. நமது கல்வி அமைப்பை மாற்றி அமைக்க ஒரு திட்டம் தேவை. இத்திட்டத்தை டாக்டர் மால்கம் ஆதிசேஷையா செய்து வருகிறார். அவர் கூறிய பல கருத்துக்களைக் காது கொடுத்துக் கேட்டேன். எதிர் காலத்தில் ஓரளவு நம்பிக்கை பிறந்தது. அவரது அறிவையும் அனுபவத்தை யும் நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

கல்வி இலாகா டைரக்டர்களுடனும் கல்வி பற்றிப் பேசினேம். வெளிநாடுகளில் என்ன நடக்கிறது, நாம் என்ன செய்ய வேண்டும் என்ற விழிப்புடனும் துடிப் புடனும் இருக்கும் இயக்குநர்களைக் கண்டேன். கல்லூரி மாற்றங்கள் பல, பல்கலைக் கழங்களைப் பொறுத்திருக் கின்றன. அதில் கல்வி இலாகா ஏதும் செய்வதற்கில்லை.

பதவிக்கு ஆசைப்படும் அரசியல்வாதிகள் என்னை அதிசயத்தில் ஆழ்த்துவதில்லை. பதவிக்கு ஆசைப்பட்டு, அரசியலை உபயோகிக்கும் கல்வியாளர்கள் என்னை அதிசயத்திலாழ்த்துகிறார்கள். இவர்களைக் கண்டு படித்தோர் உலகம் நகைக்கிறது. இவர்கள் தகுதி பற்றியும் சாதனை பற்றியும் ஆசிரியர்களும் மாணவர்களும் பேசுகிறார்கள்.

சில தனி மனிதர்கள், தங்களுக்குள்ள அரசியல் செல்வாக்கால் எப்படித் தமிழனின் எதிர்காலக் கல்வியில் கை வைக்கிறார்கள் என்பதைப் பார்க்கும் போது எனக்கு வியப்பு மேலிடுவதில்லை; வேதனை மேலிடுகிறது. எப்படி வலிமை படைத்த அரசாங்கங்கள்கூட செல்வாக்குள்ள சிலர் முன் மண்டியிடுகிறது என்பதை அறியும்போது, எனக்கு வியப்பு மேலிடுகிறது.

டில்லியில் சில துணை வேந்தர்களைச் சந்தித்தேன். சென்னையைப் பற்றிப் பேசியபோது அவர்கள் ஒரு புதுச் சொல்லை உபயோகித்துவிட்டுச் சிரித்தார்கள். அதுதான், 'எஜுகேஷனல் பாலிடிக்ஸ்' (Educational Politics)!

**சென்னைப்** பல்கலைக் கழகத்தின் வாயில் முன் நின்றேன். தமிழ்நாடு அரசாங்க விளம்பர நிலையத்தின் முன் வந்து விட்டோமா என்ற சந்தேகம் ஒரு கணம் ஏற்பட்டது. ஏனெனில், அமைச்சர்களின் சமீபத்திய போட்டோ படங்கள் அங்கே அலங்கரித்தன. அமைச்சர்களே கண்டிருந்தால் அகற்றுமாறு கூறியிருப்பார்கள். என்னுடன் வந்த நண்பரைக் கேட்டேன். அவர் நையாண்டியாகச் சிரித்துக் கொண்டே கூறினார்: ''அமைச்சர்கள் இப்படிச் செய் என்று கூறுவதில்லை. ஆனால், இப்படிச் செய்தால் அமைச்சர்களுக்குப் பிடிக்கும் என்று இவர்களே எண்ணிக் கொண்டு, சமயத்தில் தரங்கெட்ட காரியங்களெல்லாம் செய்கிறார்கள்'' என்றார் அந்தப் பிரமுகர்.

கற்பனையும், துணிவும், தீர்க்க தரிசனமும் நிறைந்த கல்வியாளர்கள் நமக்கு வேண்டும். ஒரு தலைவனது நிழல்தான் ஒரு ஸ்தாபனம் என்பார்கள். நமது கல்வித் தலைமையாளர்களுக்கு உயரமும், தோற்றமும் இருந்தால் அல்லவா நிழல் விழ; ஒரு நிறுவனத்தை ஏற்படுத்த.

'தகுதியும் பதவியும்' என்ற வார்த்தைகளும், 'வயோதிகமும் வாய்ப்பும்' என்ற சொற்களும், 'அரசியல் செல்வாக்கும் கல்வி இழப்பும் என்ற தொடர்களும் என் மனத்தில் மாறி மாறி வந்து கொண்டிருந்தன.

நாம் போக வேண்டிய தூரமோ வெகு தொலைவு. நாமோ இன்னும் புறப்பட ஆயத்தம்கூடச் செய்யக் காணோம்.

# 7. ''ஹீரோ ஒர்ஷிப்''

சுய முயற்சியால், தணியாத லட்சியத்தால், ஒருவன் அரசியலிலோ, கல்வியிலோ, தொழிலிலோ தலைவனானால், அவனைச் சுற்றி ஒரு கும்பல் உருவாகிறது. கொள்கைச் சித்தர்களைச் சபலச் சித்தர்களாகச் செய்யும் வலிமையும் நோக்கமும் கொண்ட கும்பல் இது. மனிதனது பலவீனங்களே இக்கும்பலின் கருவி.

இக்கும்பலின் தன்மையை உணர்ந்து இதற்குமேல் உயர்பவர்கள் அபூர்வம். இப்படிப் பாராட்டுரைகளையும் புகழ் மொழிகளையும் கேட்டு, பல நாட்டுத் தலைவர்கள் நாட்டின் நாடியைத் தவற விட்டிருக்கிறார்கள்.

நாம் நமது தலைவர்களை என்ன செய்கிறோம்? நாட்டை நடத்த நாம் தலைவனைத் தேர்ந்தெடுக்கிறோம். அப்பதவிக்கு வந்ததும்தான், அப்பதவியின் வலிமை அவனுக்குப் புலப்படுகிறது. உடனே பதவி காரணமாக அவனைப் பெரிய மனிதனாகப் போற்றத் தொடங்கி விடுகிறோம். அண்ணாவுக்கும் இதேதான். காமராஜருக்கும் அன்று இந்நிலைதான். நேரு, இந்திரா எல்லோரையும் நாம் இப்படித்தான் நடத்தினோம், நடத்துகிறோம். நாம் 'ஹீரோ ஒர்ஷிப்' (Hero Worship) செய்கிறோம். நாம் மனிதனை அதி உன்னதமான வனாக்கி வழிபடத் தொடங்குகிறோம்.

அண்ணுவின் நினைவு மண்டபத்தில் சிலர் கூறினுர்கள், 'அங்கே பலர் வந்து மொட்டையடித்துக் கொள்கிருர்கள்' என்று. அங்கே ஒரு குட்டித் திருப்பதி உருவாளுல் நான் ஆச்சரியப்படமாட்டேன். நாம் மனிதனைத் தெய்வமாக்குபவர்கள். இது நமது பரம்பரை. அண்ணு உயிருடன் இருந்தபோது அவரது அறுபதாம் ஆண்டு மலர் வெளியிட்டார்கள். அதிலே கண்டேன்; அண்ணுவைத் 'தென்னுட்டுக் காந்தி' என்ருர்கள். இந்தியாவின் ஏசு என்ருர்கள். தமிழ் நாட்டின் புத்தர் என்ருர்கள். வள்ளுவராக்கி ஒரு படம் வரைந்திருந்தார்கள். அண்ணுவே அதைக் கண்டு அதிர்ந்து போய் இருப்பார்.

"இவனில்லாமல் நாடு ஓடாது என்று சொல்லப்பட்ட முக்கியமானவனது எலும்பெல்லாம், மயானக் கரையில் அடுக்கப்பட்டிருக்கிறது" என்று ஆங்கிலத்தில் ஓர் அழகான வசனம் உண்டு.

நாம் மனிதர்களையும் அவர்களது கொள்கைகளையும் திட்டங்களையும் தனித்தனியே பிரித்துப் பார்க்க முடியாதவர்கள். மனிதன் நல்லவனுக யிருந்துவிட்டால் அவனது கொள்கைகளும் திட்டங்களும் சிறந்தவையா யிருக்கும் என்று எண்ணி விடுகிருேம். நாம் உணர்ச்சிவசப் பட்டவர்கள்; அறிவுவசப் பட்டவர்களல்லர். நாம் உணர்ச்சியைப் போற்றுகிருேம்; பகுத்தறிவை அன்று. நமது பரம்பரை அது.

அமெரிக்காவில் கென்னடி இறந்து போனபோது அங்கே ரேடியோ டெலிவிஷன்காரர்கள் அழவில்லை. அவன் தன் துக்கத்தைக் காட்டி அழுதுகொண்டே 'அன்னௌன்ஸ்' செய்திருந்தால், ஒரு நெருக்கடியான நேரத்தில் நிலைமையைச் சமாளிக்க முடியாதவன் என்று அவனை வீட்டுக்கு அனுப்பியிருப்பார்கள். நமது ஊரிலோ

எவன் அழுது கொண்டே குரல் கொடுக்கிறனே அவனையே பாராட்டுவோம். "ஆகா! என்ன மென்மை யான இதயம் கொண்டவன்!" என்று அவனைப் புகழ் வோம். உணர்ச்சியே நமக்கு முதல்.

அமெரிக்க ஜனதிபதி கென்னடி இறந்துபோனபோது ஜாக்குலின் கென்னடியைப் போய், "நீங்கள் தான் அவருக் குப் பதில் நிற்க வேண்டும்" என்று யாரும் கேட்கவில்லை.

சிலோனில் பண்டாரநாயகா இறந்ததும் அவரது மனைவி—முன்னுள் வரை குடும்பம் நடத்தி வந்த ஒரு பெண்மணியை—நாட்டின் தலைவராக்கினர்கள். நமது ஊரிலோ, நேருவின் மகள் இந்திரகாந்திக்குத் திறமை இருக்கிறது என்பதை இன்று பரிபூரணமாக ஒத்துக் கொண்டாலும், அன்று நேருவின் மகள் என்ற ஒரே காரணத்திற்காகத்தானே பதவியில் ஏற்றினர்கள்?

உணர்ச்சி காரணமாக நாம் நம் தலைவர்களைக் கண்ணை மூடிக்கொண்டு புகழ்கிறோம். உணர்ச்சி காரணமாக மாற்றானைக் கண்ணைமூடிக் கொண்டு இகழ்கிறோம்.

தலைவர்களைப் போற்றும் நமது மனோபாவத்தின் மறுபக்கம் பலவீனம். நம்மைப் பற்றி நாம் குறைந்த மதிப்புக் கொண்டிருக்கிறோம். நம்மால் முடியாது என்ற எண்ணம் நம்மில் ஊறிப் போயிருக்கிறது.

ஒரு நாட்டின் எண்ணங்களை அந்நாட்டில் நிலவும் இலக்கியங்களிலிருந்தும் நாடோடிப் பாடல்களிலிருந்தும் உணரலாம். நாடோடிப் பாடல்களுக்குப் பதில் இன்று சினிமாப் பாடல்களே எல்லோர் வாயிலும் ஒலிக்கிறது. நமது சொற்களில் இசைந்து, சிந்தனையில் ரீங்காரம் செய்து நமது ஆழ்ந்த எண்ணங்களில் நம்மை அறியாமலே புகுந்து நம்மை ஆட்டுவிக்கும் சக்தி படைத்தவை அவை.

ஓர் இசைத் தட்டில் :

**"கண்ணிலே நீரெதற்குக் காலமெல்லாம் அழுவதற்கு"**

என்று பாடுகிறார் கவிஞர்.

நான் இதையெல்லாம் எடுத்துக் காட்டும் போது சிலர், இப் பாடல்கள் ஏதோ சினிமாவில், ஏதோ கதையில் சம்பவச் சூழ்நிலையால் பாடப்படுபவை என்று பதில் கூறக் கூடும். ஆனால், மனோதத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள், "இப் பாடல்கள் பிரபலமடையும்போது, சம்பவம், கதை, சினிமா எல்லாம் அழிந்து விடுகிறது; எண்ணங்கள் மட்டுமே ஒலிக்கின்றன" என்று.

கஷ்டம் வரும்போது கண்ணீரைத் துடைப்பேன் என்று கூறி எழவில்லை கதாநாயகர். 'காலமெல்லாம் அழுவேன்' என்கிறான் தலைவன். சின்னக் குழந்தையா யிருக்கும்போது சில சமயம் கொஞ்சம் அழுதால் எல்லாம் நமக்குச் சரியாய்ப் போய்விடும். நமது தலைவன் இன்னும் குழந்தைப் பருவத்திலேயே இருக்கிறான்.

மற்றொரு புகழ்பெற்ற பாடல் :

**"போனால் போகட்டும் போடா"**

ஓர் ஆயிரம் பேரை நிறுத்தி வைத்து இதை யார் எந்தக் கட்டத்தில், எந்தச் சினிமாவில் பாடுகிறார் என்று கேட்டுப்பாருங்கள். பலருக்கு அந்தக் கதை மறந்து போயிருக்கும். எது மிஞ்சியிருக்கிறது? அந்தப் பாடல்— அந்த எண்ணம்!

இராபர்ட் புரூசும், சிலந்தி வலையும் பற்றிய கதையைப் படித்துவிட்டு "மீண்டும் முயல்வேன்" என்று தன்னம் பிக்கையோடு வெளிவந்த இளைஞனின் உள்ளத்தில் ஒரு தோல்விக்கப்புறம் எதிரொலிப்பது அப் பாடல். அந்த இளைஞன் எங்கே போவான்?

மற்ருெரு புகழ்பெற்ற பாடல் :

**"நினைத்ததெல்லாம் நடந்து விட்டால்**
**தெய்வம் ஏதுமில்லை."**

நினைப்பதெல்லாம் நடக்காது என்று முன்பே தடையை எழுப்பியிருக்கும் உள்ளத்தால் எப்படிக் காரியங்களைச் சாதிக்க முடியும் என்று மனோதத்துவ நிபுணர்களைக் கேட்டுப் பாருங்கள்.

கவிஞர் பாடுகிருர் : "நான் பிறந்த காரணத்தை நானே அறியுமுன்னே நீயும் வந்து ஏன் பிறந்தாய் செல்வ மகனே!" என்று.

நொந்த தந்தை, பாலோடு, பாசத்தோடு, தன் மனோபாவத்தையும் ஊட்டுகிருர். அவர் மகனும் நாளை அதே நொந்த, இயலாத வாழ்க்கை வாழ, உண்மையில் கையாலாகாத பரம்பரையை நாம் உற்பத்தி செய்து கொண்டிருக்கிருேம்.

அமெரிக்காவில் இரண்டாவது வகுப்புப் புத்தகத்தில் எழுதியிருக்கிறது :

"ஒரு காலத்தில் கப்பலும், காரும், விமானமும், வெறும் எண்ணங்களாகத்தானிருந்தன. மனிதன் தன் செயல் திறனுல் அவற்றை உருவாக்கினுன்" என்று.

நமது எண்ணங்களும், திரைப்படப் பாடல்களும் எப்படி ஒன்றையொன்று தழுவுகின்றன என்று கண்டோம். நமது சீர்தூக்கிப் பார்க்கும் திறனுக்கு நமது இலக்கியங்களைப் பார்ப்போம்.

அ. ச. ஞானசம்பந்தத்தின் 'இலக்கியத் திறனுய்வு' புத்தகம் வெளிவரும்வரை, ஜி. டி. நாயுடு, "திருக்குறளில் முப்பது போதுமே, மிகுந்தது எல்லாம் சொன்னதையே

தானே திருப்பிச் சொல்கிறது'' என்று கேட்கும்வரை, கம்பரைப் பெரியார் வம்புக்கிழுக்கும்வரை, புலவர் குழந்தை ராவண காவியம் பாடும்வரை, நம் இலக்கியம் எல்லாம் பாராட்டுரைதான்; போற்றிப்பதிகம்தான். சீர்தூக்கிப் பார்க்கும் திறனுய்வுக்கு நாம் அந்நியர் கள். ஆகவே, நமது வாழ்க்கை 'ஹீரோ ஓர்ஷிப்' பில் வழிபாட்டு மனோபாவமாய்ப் போய்விட்டது.

நமது வழிபாட்டு மனோபாவத்திற்குத் தமிழ்ப் புலவர் கள் அன்றிருந்தவர்களும் சரி, இன்றிருப்பவர்களும் சரி செய்திருக்கும் தொண்டு கொஞ்ச நஞ்சமல்ல. முற்காலத் தில் அரசர்களையும், இக்காலத்தில் மடாதிபதிகளையும், அரசியல்வாதிகளையும் நமது தமிழறிஞர்கள் தேவைக்கு மேல் புகழத் தவறுவதில்லை.

தமிழறிஞர்களின் வறுமையைக் குறை கூறுவதா? புகழை மறைமுகமாக, காசும் பதவியும் கொடுத்து வாங்கி வளர்க்கும் மனிதர்களைக் குறை கூறுவதா?

என்று மனிதனை மனிதனுகக் கருதுவோம்?

அறிவை முன் வைத்து, உணர்ச்சியைப் பின்வைத்து அரசியலை நோக்குவோம். வாழ்வாங்கு வாழ முயலு வோம்.

# 8. ஆபாசம் எது?

கடந்த இருபதாண்டுகளில் அமெரிக்காவில் பலவித மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. இனக் கவர்ச்சியைப் பற்றி இன்றைய அமெரிக்கச் சமூகம் கருதும் விதத்தையும், ஓர் இருபது ஆண்டுகளுக்கு முன் அது கருதிய விதத்தையும் படித்துப் பார்த்தால் வேடிக்கையாக இருக்கும். பாலுணர்ச்சியைப் பற்றிப் பேசுவது தரக்குறைவான காரியமாகக் கருதிய காலம் அப்போது. அப்போது ஒரு பார்ட்டி—ஒரு விருந்து என்ருல், ஆண் பெண்களுக்குப் பால் மாறுபட்ட உடற்பகுதிகள் உண்டு என்பதையே அறியாதவர்கள் போல் நடந்து கொள்வார்களாம்!

இதைப் படித்ததும் எனக்கு நமது சுகாதாரப் பிரச்சனைதான் நினைவுக்கு வந்தது. நான் தமிழ் நாட்டி லிருந்த போது மதுரைக் கோயிலுக்கும், சிதம்பரம் கோயிலுக்கும் போனேன். திருக்குற்ருலம் அருவியில் குளிக்கப் போனேன். அங்கெல்லாம் மனிதன் மலஜலம் கழிப்பதற்கென்று ஒரு வசதியும் கிடையாது. அப்படி வெளியே ஓர் இடத்தைத் தேட வேண்டுமானுல் நாம் மைல் கணக்கில் நடக்க வேண்டும். இதன் விளைவாகக் கோயிலுக்குள்ளும் வெளியேயும் மக்கள் ஆபாசப் படுத்தி யிருந்தார்கள். இதைப் பார்த்தபோது நமது மக்கள் மலஜலம் கழிப்பதைச் செய்யத் தகாத ஒரு காரியம்

போலவும், அருவருத்து, வெறுத்து ஒதுக்க வேண்டிய செயல் போலவும் கருதுவது புரிந்தது.

பொது இடங்களில் வெளியே போகவேண்டிய நிர்ப் பந்தம் ஏற்பட்டால், அது அவர்கள் குற்றம்போல் பட்டது. அதற்கு அவர்கள் அவமானப் பட வேண்டிய அவசியம் இருந்தது. ஏதோ மக்களுக்கு மலஜல உறுப்புக் ளே இல்லாதது போல் நாம் நம் சமூகத்தில் நடந்து கொள்கிறோம்.

சாப்பிடுவது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் உடலின் கழிவுப் பொருள்களை வெளியேற்றுவது. இல்லாவிட்டால் கழிவுப் பொருள்கள் உடலில் விஷப் பொருள்களாக மாறிவிடும். மலஜலம் கழிப்பது உடலின் இயற்கை. இதில் அவமானப்பட என்ன இருக்கிறது?

புனிதமான கோயில்களில் ஆபாசம்; முனிசிபல் பஸ் ஸ்டாண்டுகளில் இருக்கும் பொது இடங்களில் மனிதன் நுழைய முடியாத நிலை; ஓட்டல்களில் தவறி "எங்கே ஐயா இருக்கிறது இடம்?" என்று கேட்டுவிட்டால், ஏதோ சந்து பொந்துகளையெல்லாம் கடந்து ஆபாசம் நிறைந்த, குடலைக் குமட்டும் ஓர் இடத்தைக் காட்டுவார்கள். இந்த இடங்களை ஏதோ மனிதன் தண்டனை அனுபவிக்கப் பிறந்தவன்போல ஆக்கியிருக்கிறோம். தவறான மனோ பாவம் கொண்டிருக்கிறோம்.

நானும் என் நண்பர்களும் குடும்பத்துடன் திருக் குற்றாலம் சென்றோம். ஐந்தருவியில் குளிக்கப் போனோம். மக்கள் ஆயிரக் கணக்கில் இடித்துக்கொண்டு நின்றார்கள்; நடந்தார்கள்; குளித்தார்கள். அங்கே உடை மாற்றிக் கொள்ள 25 காசு வாங்கிக் கொண்டுதான் ஓர் ஈர அறைக்குள் அனுமதிக்கிறார்கள். ஆனால், அப்படிப்பட்ட

ஐந்தருவியில் மனிதன் மலஜலம் கழிக்க ஏதும் வசதி யில்லை. மனிதன் உடை மாற்றிக் கொள்ள ஒரு மறைவிடம் தேவை என்று தோன்றிய மகானுபாவர்களுக்கு, அதேபோல் மலஜலம் கழிக்க ஒரு சுத்தமான இடம் தேவை என்று தெரியாமல் போனதெப்படி என்று யோசிக்கிறேன். இதே கதைதான் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில், சிதம்பரம் நடராசர் கோவிலில்—மற்றெல்லாப் பொது இடங்களிலும்.

இதன் விளைவாக என்ன நேர்கிறது?

ஆபாசம். எங்கும், எவ்விடமும்.

காலை வைக்கக் கூசும் நிலை.

உடல் சிலிர்க்கும் உணர்ச்சி.

'கடவுளே! இந்தியாவில் வாழும் மனிதனுக்கு இத்தகைய உடல் உறுப்புக்களைப் போய் ஏன் படைத்தாய்' என்று புலம்ப வேண்டிய பரிதாப நிலை.

அமெரிக்காவிலும் மற்றெந்த நாடுகளிலும் மனிதனின் இயற்கை உடல் நியதிகளை அருவருப்புடன் கருதுவதில்லை. எங்குப் பார்த்தாலும் அதற்கான வசதி செய்திருக்கிறார்கள். ஜனங்களின் புழக்கத்திற்கேற்ப விடுதிகளின் எண்ணிக்கையை அதிகமாக்கிக் கட்டியிருக்கிறார்கள். எல்லாம் துப்புரவாக—சுத்தமாக இருக்கிறது.

நமது ஊரில் என்னவென்றால், நாம் குழந்தையைத் தெருவில் மலஜலம் கழிக்கப் பழக்கியிருக்கிறோம். நமக்குச் சுதந்தரம் வந்து 25 ஆண்டுகள் ஆகின்றன. நமது தலைவர்களும் மக்களும் படித்தவர்கள்தான். சுகாதாரத்தைப் பற்றி அறிந்தவர்கள்தான்.

எனினும் ஏன் இந்த நிலை?

இது எந்த இனத்தாருக்கும் ஏற்படும் தனிப் பிரச்சனை இல்லை.

அல்லது படித்தவர்களுக்கோ, படிக்காதவர்களுக்கோ ஏற்படும் புதுப் பிரச்சனை இல்லை.

இதற்கு அமெரிக்க உதவியும், வெளிநாட்டு நிபுணர்களும் தேவை இல்லை.

நமது சூழ்நிலையை நமக்காகவும், நம்மிடையே வாழும் மற்றவர்களுக்காகவும் சுத்தமாக வைத்துக் கொள்ள நமக்குக் கடமை இல்லையா?

பதினைந்து ஆண்டுகளுக்கு முன் சுவாமிமலை கும்பாபிஷேகம் காணச் சென்றேன். மக்கள் லட்சக்கணக்கில் வந்து குழுமி யிருந்தார்கள். கும்பாபிஷேகம் நடந்தது. ஆனால், காவிரிக் கரை ஓரம், கோயிலைச் சுற்றி எல்லாம் மனிதன் காலடி எடுத்து வைக்க முடியாத நிலை. எந்த இடங்களுக்குப் புனிதத்தையும் தூய்மையையும் நாடிச் செல்கிறோமோ, அங்கெல்லாம் ஆபாசத்தைச் செய்து விட்டு வருகிறோம்.

சுகாதார வசதி இல்லாத போது, ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேல் மக்கள் கூடக்கூடாது என்று சட்டம் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் சுகாதார நிலையங்களை நிறுவ ஊருக்குள் நுழைபவர்களுக்கு நிறைய வரி விதிக்க வேண்டும்.

மகாத்மா காந்தி ஒருமுறை மாயூரம் காவிரிக் கரை வழியே நடந்து சென்றார். அருகே ஓடுகிறாள் அன்னை காவிரி. மக்களுக்கு இன்னமும் ஊர் தோறும் குடிநீர் அளிக்கும் காவிரி; புனிதக் காவிரி. அதன் கரையோரத்தில் இருந்த ஆபாசத்தைக் கண்டு குமுறினார்

மகாத்மா. நாற்பதாண்டுகளுக்குப் பின் இன்று சென்று நடந்து பாருங்கள். அதே பாதையில். ஏதேனும் மாற்றம் இருக்கிறதா, சொல்லுங்கள்.

தமிழ்நாட்டுக்கு வந்தவுடன் ஒரு நாள் காலையில் சாந்தோம் பீச்சில் காலார நடக்கத் தொடங்கினேன் ஒட்டிஒட்டிக் கட்டியிருக்கும் ஓலைக் குடிசைகள் கண்களை நிறைத்தன. அந்த அழகு மிளிரும் அற்புதக் கடற் கரையில் காலை மேலே வைத்து நடக்க என் கால்கள் மறுத்தன. மக்கள் எங்கும் ஆபாசப் படுத்தியிருந்தார்கள். ஆண்கள் பெண்கள் என்ற வேறுபாடின்றி ஒருவரை. ஒருவர் கண்டுகொள்ளாது ஆபாசம் செய்துகொண்டிருப் பதைக் காண, உடல் கூனிக் குறுகியது.

எங்கே இது?

தரும மிகு சென்னையில்.

தமிழ் கூறும் நல்லுலகத்தின் தலைநகரில்.

உலகிலே புகழ் பெற்ற கடற்கரை என்று நாம் பெருமை பேசிக்கொள்ளும் மெரீனாவின் மணல் பரப்பில். "எத்தனை குடிசை வாசிகளுக்கு மெரீனா கழிப்பிடம்" என்றும், "எத்தனை லட்சம் சென்னை மக்களுக்கு அது சொந்தம்?" என்றும் கேட்டேன். "கேட்காதீர்கள். எல்லாம் அரசியல்!" என்றார்கள். ஆபாசம் செய்வதில் கூட அரசியல் இருக்கிறதென்றால், அது ஆபாச அரசிய லாகத்தான் இருக்க முடியும்.

அவர்கள் குடிசைகள் கட்டிக் கொள்ளட்டும். அதற்கென அவர்கள் ஆபாசம் செய்ய வேண்டுமா? அதற்கான ஒரு வழி காணோம். அரசாங்கம் அங்கே குடிசைகளை அனுமதிக்கலாமா?

முன்பெல்லாம் போலீஸ்காரர்கள் குதிரையில் சுற்றிக் கொண்டிருப்பார்கள், காலே மாலே வேளேகளில் யாரும் எங்கும் மெரீனுவில் அசுத்தம் செய்யாதபடி. இப்போது அங்கே எந்தப் போலீசும் இல்லே கண்காணிக்க. சுதந்தரம் வந்ததும், நாம் அசுத்தம் செய்வதற்குப் பர்மிட் வழங்கி விட்டோம். எங்கே போகிறேம்? முன்னுக்கா, பின்னுக்கா?

சாந்தோம் பஸ் ஸ்டாண்டிலிருந்து ஒருநாள் மாலே ராஜா அண்ணுமலேபுரம் பக்கம் நடந்தேன். நாற்றம் குடலேக் குமட்டியது. தெருவின் மறுபக்கம் நீர் தேங்கியிருந்தது; அதிலிருந்து நாற்றம். மேலும் அங்கே குப்பை—கழிவுப் பொருள்களேக் கொண்டு வந்து கொட்டு கிறுர்கள். சாக்கடை நீரை அங்கே திறந்து விடுகிறுர்கள். எல்லாம் கூடி ஒரு பர்லாங் தொலேவிற்கு ஒரே நாற்றம். இதற்கு எதிர்ச் சாரியில் வீடுகள் - அதில் மக்கள் குடியிருக் கிறுர்கள் .

அங்கே இருந்த ஒரு வீட்டுக்காரரைக் கேட்டேன் "எப்படிக் குடியிருக்கிறீர்கள் இங்கே?" என்று.

அவர் சொன்னுர். "இந்த நாற்றத்தால் என் மனேவிக்கு ஒருவித மூச்சுப் பிடிப்பு வருகிறது. அதனுல் இவள் கஷ்டப்படுகிறுள். என் குழந்தை சரும நோயினுல் கஷ்டப்படுகிறது. என் குழந்தையும் மனேவியும் வேறு இடத்தில்—கிராமத்தில் போய் இருந்தால் இப் பிரச்சனேகள் அவர்களுக்கு இருப்பதில்லை" என்றுர். வேறு ஒரு நாட்டில் இப்படி இருந்தால் கார்ப்பரேஷனேக் கோர்ட்டில் நிறுத்தியிருப்பார்கள். நஷ்டஈடு வழக்குத் தொடர்ந்திருப்பார்கள்.

சென்னேயில், தலேநகரில் ஒரு கார்ப்பரேஷனும், பெரிய சுகாதாரப் பிரிவும் இயங்கும் நகரில் எப்படி

இதைக் கவனிக்காமல் இருக்கிருர்கள் என்ற வியப்பு எனக்கு ஏற்பட்டது.

"தேங்கிக் கிடக்கும் தண்ணீர் நாற்றமெடுக்கும். வில்லை விட்டுப் புறப்படாத அம்பு ஒன்றும் செய்யாது" என்கிறது, அரேபியக் கதைகளில் வரும் ஒரு பொன்மொழி. பொது சுகாதாரத்தைப் பொறுத்த வரை தமிழ்நாடு தேங்கிக் கிடக்கும் குட்டையாகத் தானிருக்கிறது.

நாற்றமெடுக்கிறது.

நாற்றமெடுத்தால் என்ன?

'என் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்வேன்' என்று வீட்டுக் குப்பைகளைச் சாலையில் கொண்டு வந்து கொட்டினளாம் ஒரு மகராசி. அதேபோல் தெருவில் ஆபாசம் செய்கிருேம். செய்தால் என்ன?

எது எப்படி இருந்தால் என்ன?... வாழ்ந்து விட்டால்—சோறு தின்று விட்டால், சரிதான்.

இதுதாஞ நம் வாழ்க்கைத் தத்துவம்?

# 9. எழுத்தும் பயனும்

எழுதுவதனுல் - தொடர்ந்து பத்திரிகையில் எழுது வதனுல் ஏதாவது பயன் உண்டா என்று என்னே நானே கேட்டுக் கொள்கிறேன். கடந்த சில மாதங்களாக ஆசிரியரிடமிருந்தும் வாசகர்களிடமிருந்தும் பல கடிதங்கள் வந்தும் அதுவே நான் எழுதத் தயங்கியதன் காரணம். என்ன பயன்...என்ற கேள்வி என்னுள்.

இக் காரணத்தின் அடிப்படையின் ஊடே பெரும் விரக்தி எழுகிறது. கல்வியைப் பற்றி எழுதிஞேம்; என்ன ஆயிற்று? அரசியல் விழிப்பைப் பற்றி எழுநிஞேம்; என்ன நேர்ந்தது? கிராம வளர்ச்சி, நமது அரசியல்வாதிகளின் போக்கு, சமுதாய மஞேபாவம் என்று எல்லாவற்றையும் கவலேயோடு, அக்கறையோடு, நல்லெண்ணத்தோடு ஏதாவது நன்மை விளேயாதா? எங்காவது செயல்படும் நல்லோர் மனத்தில் பதியாதா' என்ற ஆதங்கத்தோடு நிறைய எழுதியாயிற்று. என்ன ஆயிற்று...?

'யாருக்கு ஐயா அக்கறை? என்ற ரீதியில் நாடு ஓடுகிறது. 'நடைமுறை உலகம் வேறு!' என்று அரசியல்வாதிகள் நம்மைக் கண்டு நகைக்கும் மஞேபாவம் தெரிகிறது. படித்தவர்களேயும், இளேஞர்களேயும், அனுபவசாலிகளே யும், பல்கலேக்கழகப் பேராசிரியர்களேயும் புறக்கணிக்கும் போக்கு, அவர்களேப் பயன்படுத்தாத போக்கு நாட்டின்

சாபமாக முன்நிற்கிறது. அறிவும் திறமையும் கொண்ட இளைஞர் கூட்டத்திற்கு வேலை, தொழில், சமுதாயத்திற்குப் பயன்படும் சந்தர்ப்பம் உருவாக்கப் படாமல், வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தேக்கி வைத்திருக்கிறோம். வேலை கிடைக்காது மனம் நொந்து ஓர் இளைஞன் தற்கொலை செய்து கொண்டான் என்று ஊரிலிருந்து உறவினரிடமிருந்து வந்த கடிதம் என் நெஞ்சைப் பிழிகிறது.

இந்த நாடும் ஆட்சியாளர்களும் நாட்டின் பிரச்சனை என்ன? நாட்டிற்கு எது நல்லது? உடனடியாக என்ன செய்ய வேண்டும் என்றெல்லாம் கருதுகிறார்களா அல்லது தங்கள் 'இமேஜை'க் கவனித்துக் கொள்கிறார்களா என்று கவனியுங்கள். ஆளும் கட்சி எதிர்க் கட்சியைப் பற்றி மிரண்டு கொண்டிருக்கிறது. எதிர்க்கட்சியோ ஆளுங் கட்சியை எப்படி அம்பலத்தில் நிறுத்தலாம் என்று திட்டமிட்டுக் கொண்டிருக்கிறது. அமைச்சர்களோ பதவியிலும் செல்வாக்கிலும் கவனமாயிருக்கிற அளவுக்கு ஏழை மக்களின் அடிப்படை வாழ்க்கையை முன்னேற்றுவதில் அக்கறை காட்டுகிறார்களா என்ற சந்தேகம் எழுகிறது.

பலருக்கும் பதவி பெரிதாகப் படுகிறதே ஒழிய கொள்கை பெரிதாகப் படுவதில்லை. பலருக்கும் தங்களுக்கு வேண்டிய சிறு சகாயங்கள் முக்கியமாகப் படுகின்றனவே தவிர நாட்டு நலன் பெரிதாகப் படுவதில்லை. எல்லாவற்றையும் உணரும் பலருக்குச் சோற்றுப்பாடு பெரிதாக இருக்கிறது; தைரியம் இருப்பதில்லை.

தெருவிலோ குப்பை கிடக்கிறது; கூளம் பறக்கிறது; ஓரத்தில் நரகல் நாற்றம். ஒரு பக்கம் சொறிநாயின். ஊளை; பிச்சைக்காரன் ஒதுங்கி நிற்கிறான்...

ஆனால், இதெல்லாம் அரசியல்வாதியின் கண்ணுக்குப் புலனாவதில்லை. அவர் கண்டு கொள்ள வில்லை. அவர் 'மீட்டிங்' போடப் போகிறார்!

நாட்டின் இன்றைய தலையாய பிரச்சனை வேலை யில்லாத் திண்டாட்டம். அரசியல் வாதியைக் கேட்டுப் பாருங்கள். இதை முக்கியப் பிரச்சனையாக, நாட்டுப் பிரச்சனையாக அவர் கருதியே இருக்க மாட்டார். நாட்டின் 80 சதவீதம் மக்கள் வசிக்கும் கிராமங்களில் எப்படிக் கிராமத்தொழிலை மேம்படுத்தலாம், சுயதேவைப் பூர்த்தியான அமைப்பாக்கலாம், எப்படிக் கிராம மக்களின் 'சும்மாக் குந்திக் கிடக்கும் ஆறுமாத கால உழைப்பை'ப் பயன் படுத்தலாம் என்று ஒரு திட்டமிடலாமே?

இயந்திரத் தொழிற்சாலைபோலப் பட்டதாரிகளை உருவாக்குகிறோமே, வெறும் கிளிப்பிள்ளை போல நெட்டுருப் போட்டுப் பரீட்சைகளில் மாணவர்கள் தேரும் படி செய்கிறோமே. அவன் அன்றாட வாழ்க்கைக்கும் சம்பாத்தியத்திற்கும் ஏற்ற ஒரு பயனுள்ள கல்வியைத் தன் காலிலே தானே நிற்கும் ஒரு தன்னம்பிக்கை நிறைந்த சமுதாயத்தை உருவாக்குகிறோமா என்று எண்ணிப் பார்க்கிறார்களா...? இல்லை.

ஏதோ எல்லாரும் சினிமாவில் நடித்துப் பணக் காரனாகி விடலாம், சினிமாவுக்குக் கதை எழுதிச் செல் வந்தராகி விடலாம், சினிமாப் படம் எடுத்துச் சொத்துச் சேர்த்து விடலாம், சினிமா கொட்டகை கட்டிப் பணம் சேர்த்துவிடலாம் என்று நாடு எண்ணுகிறதே தவிர, அந்த எண்ணத்திற்குப் பத்திரிகைகள் ஆலவட்டம் வீசு கின்றனவே தவிர, சினிமாத் தொழில் புதுப்பணத்தைக் கொண்டு வருவதில்லை. நாட்டு முன்னேற்றத்திற்கு உற்பத்தியைப் பெருக்கும் - பிற மாநிலங்கள், பிற நாடு

களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் நல்ல தொழிற் பொருட்களை உருவாக்க வேண்டும் என்ற அடிப்படைப் பொருளாதாரம் தெரிவதாகக் காணும்.

'விலைவாசி கூடுகிறது; வியாபாரிகள் விலைகளை ஏற்றுகிறார்கள்' என்று கண்மூடித்தனமாகப் பேசும் அரசியல் வாசாலகர்கள் எல்லாரும், 'போதுமான அளவுக்குப் பொருள் உற்பத்தி செய்யப் படவில்லை யென்றால் தேவை அதிகமாகும். அதனால் விலை ஏறத்தான் ஏறும்' என்ற பொருளாதார மூலப் பாடத்தை அறிந் திருப்பதாகக் காணும்.

கலையையும் இசையையும் காரணமில்லாமல் லெனினும் கம்யூனிசமும் திட்டவில்லை. மனித வாழ்க்கை யின் அடிப்படை பூர்த்தி செய்யப்படாத நிலையில் மானத்தை மறைக்கக் கந்தல் துணிக்கு வழியில்லாது மனிதர் உலவும் போது, ஒருவேளை உணவுக்கு வழியின்றி எலும்பும் தோலுமாகப் பிச்சைக்காரன் எதிரே வரும் போது, எப்படிப் போய் நாம் நாட்டியத்தை ரசிக்க முடி யும்? எப்படிப் போய் இசையைச் சுவைக்க முடியும்? உங்களை அந்த நிலையில் வைத்துச் சிறிது கற்பனை செய்து பாருங்கள். 'தனி ஒருவனுக்குணவில்லை எனில் இந்த ஜெகத்தினை அழித்திடுவோம்' என்றார் பாரதி.

ஆனால், நாடோ எருமைமாடு போல் போய்க் கொண் டிருக்கிறது. எத்தனையோ பேர் எழுதித்தான் என்ன? நாடு ஏதாவது லட்சியம் செய்கிறதா? நாட்டுத் தலைவர்கள்தான் அதனால் உந்தப்படுகிறார்களா...? இல்லை.

நாடு ஒரு நல்ல சக்தியை விரும்பும் எருமைமாடுபோல் அசை போட்டு நகருகிறது!

இதில் யார் எழுதினுல் என்ன?

எழுதாமலிருந்து விட்டால் என்ன? என்ற சோகம் மேலிடுகிறது. அதனூடே 'ஏன்? ஏன்?' என்ற கோபம் வீரக்கனலாக வெளிப்படுகிறது.

ஏன் சமுதாயம் மாறவில்லை...ஏன்? ஏன்? கொஞ்சம் கேட்டுப்பாருங்கள்.

## 10. அரசியல் கடிவாளம்

நெருக்கடி நிலைமையைக் காட்டி, அதனுல் விளைந்த பயன்களைக் காட்டி, ஏதோ தேசப் பற்றின் காரணமாக நாட்டை அவசர நிலைமைக்கு எடுத்துச் சென்றதாகச் சில அரசியல் வாதிகள் பகிரங்கமாகக் கூறும்போது, 'கேவலமான அரசியல்வாதி, சுயநல அரசியல்வாதி' நம் கண்முன் வருகிருர்.

எண்ணங்களில் தூய்மை இல்லாத போது, நாம் உண்மையை அடி மனத்தில் மறைத்து வைத்துக் காரியம் செய்கிருேம். தூய்மையற்ற எண்ணம்—சுயநலமான எண்ணம்—அதன் பலனைத் தோற்றுவித்துவிடும். சுயநல மான எண்ணம்—"இன்று இருக்கும் நிலைக்கு ஆபத்து வந்து விடுமோ" என்ற பயத்தில் முடிகிறது. அந்தப் பயமே அவர்களின் வீழ்ச்சிக்கு வித்தாகிறது. எண்ணங்கள் தனி மனித வாழ்விலும் சரி, நாட்டின் வாழ்விலும் சரி—அதற் கேற்ற பலனைத்தான் கொண்டுவரும். அதைத்தான் தலைவர்களுக்கு அது அளித்தது. இது தான் உலக நியதி. தலைவர்கள் என்ற பெரிய பட்டங்களை உதறி எறிந்து விட்டு, கெட்ட எண்ணங்களின்—சுயநல சிந்தனைகளின்— பலன் என்ன என்று எண்ணிப் பாருங்கள். எண்ணங்களுக் கேற்பதான் வாழ்க்கை அமைகிறது. "கெடுவான் கேடு நினைப்பான்" என்பவை எல்லாம் அடிப்படை மனோ தத்துவத்தில் பிறந்த உண்மைகள். "முற்பகல் செய்யின்

பிற்பகல் விளையும்'' என்ற வாசகங்கள் எல்லாம் ஒவ்வொரு காரியங்கள் அதற்கான பலனைக் கொடுக்கும் என்ற காரண காரியத் தொடர்பு கொண்ட (Law of cause and effect) உலக விதிகள். நியதிகள். இதை யாரும் மாற்றுவதற் கில்லை.

ஆனால், அதிகாரத்திற்கும், பதவிக்கும் அருகில் இருக்கும் போது, ''தானே எல்லாம்'' என்ற பிரமை தலைவர்களுக்கேற்பட்டு அடிப்படை உண்மைகளைத் தலைவர்கள் மறைக்கிறார்கள். ''எதையும் செய்யலாம் என்ற பிரமை, பொய் சொன்னால் மக்கள் கண்டு பிடிக்க மாட்டார்கள் என்ற பிரமை—'' இவற்றால் தலைவர்கள் மேலும், மேலும் தவறு செய்கிறார்கள். ''அரசனுக்கு ஆடையில்லை'' என்பதைக் கூற அஞ்சி, ''ஆகா...'' என்ன மெல்லிய ஆடை...? எத்தனை அழகாக இருக்கிறது!'' என்று கூட இருந்தோர் கூறிப் பாராட்டியது போல, தலைவனைச் சுற்றி ஒரு காக்காய்க் கூட்டம் உண்மையை மறைக்க உதவுகிறது. இந்தப் பிரமையில் தலைவனும் (தலைவியும்) கெடுகிறான்; கூடி இருப்பவர்களும் கெடு கிறார்கள்.

சில தலைவர்களுக்குப் புகழ்தான் குறி. தங்கள் புகழைப்—பெருமையைக் காப்பாற்ற அவர்கள் எதையும் செய்வார்கள். தங்கள் புகழ் மங்காமலிருப்பதுதான் அவர்கள் நோக்கம். அதில்தான் கருத்துச் செலுத்து வார்களே தவிர—அதன் மூலம்தான் நாட்டுப் பிரச்சனையைப் பார்ப்பார்களே ஒழிய—ஒரு பிரச்சனையால் நாட்டுக்கு நல்லதா கெட்டதா என்று பார்க்க மாட்டார் கள்! இதைச் செய்தால் தங்கள் புகழ், பெருமை என்ன ஆகும் என்றுதான் எதையும் சிந்திப்பார்கள். அவர்கள் புகழ்த் தாகத்திற்கு ஒரு நாட்டுத் திட்டம் பயன்

படும்போதுதான் அவர்கள் திட்டத்தைப் பற்றிப் பெரிது படுத்துவார்கள்.

மற்ருேர்வகைத் தலைவர்கள், தங்கள் செல்வாக்கிற் காக எதையும் செய்வார்கள். ஆணவம்—'தான் தலைவன்' என்ற ஆணவம்—உள்ளிருந்து இவர்களை ஆட்டிப் படைக்கும். மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவிப்பவர்களெல்லாம் எதிரிகள் என்று இவர்கள் கருது வார்கள். நல்லது, கெட்டது இரண்டிலுமே அதன் உச்சிக்குப் போய் தனது திறமையை—புலமையை இவர்கள் நிரூபிக்கப் பார்ப்பார்கள். அதிகாரம் இவர்கள் கையிலிருக்கிறது என்ற நினைவு இருபத்துநாலு மணி நேரமும் இவர்கள் நினைவில் இருக்கும். ஆகவே, ஆணவத் தினுல் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்ய இவர்கள் தயங்க மாட்டார்கள்.

மற்ருேர் வகைத் தலைவர்கள், ஆட்டுமந்தைப் புத்தி யுடையவர்கள். சாயிற பக்கமே சாயும் செம்மறியாட்டு மனேபாவம் இவர்களுடையது. எதையும் முன்னேக்கிப் பார்த்து முடிவெடுக்கும் தீர்க்க தரிசனம் இவர்களிடம் கிடையாது. விஷயங்கள் நேர்ந்த பிறகுதான் இவர் களுக்குச் சிக்கலில் மாட்டிக் கொண்டிருக்கிருேம் என்ற ஞானம் பிறக்கும்! பொது மக்களது அபிப்பிராயங் களாலும், பத்திரிகைகளாலும், கூடி இருக்கும் கும்பலாலும் நடத்திச் செல்லப் படுபவர்கள். இவர்களுக்குத் திட்ட மேதும் இருக்காது. அடிப்படைப் பயத்தினுல்—பதவி பறி போய்விடுமோ—என்ற பயத்தினுல் எல்லாரையும் இழுத்துக் கொண்டு, சரி செய்து கொண்டு செயலாற்றும் தலைவர்கள் இவர்கள்.

தலைவர்கள் பலவகையினர். அவன் வளர்ந்து வந்த முறையில், என்னென்ன அனுபவங்கள் அவனுக்கேற்

பட்டு—அவை எந்தவிதமான சிலிர்ப்பை ஏற்படுத்தி அவன் தன்னைக் காத்துக்கொள்ளச் செய்ததோ— அதைப் பொறுத்தே அவன் மனப்பழக்கம் அமைகிறது. பிரபல அரசியல் அறிஞர் பேபர் இப்படி அபிப்பிராயப் படுகிறார். உண்மை.

இன்றைய தலைவன், தனது இளவயதில் பிரச்சனைகளை எப்படிச் சமாளித்து மீண்டானோ, அதைப் போலவே பெரியவனான போதும் செயல்படுவான் என்பதுதான் அது. 'தந்திரமாக, எதிரியை மடக்கியிருந்தானானால்' அந்த நரிக்குணமே தலைவன் ஆன போதும் தெரியும். அடியாளாக இருந்து எதிர்ப்பவனை அடித்து நொறுக்கியே அப்புறப்படுத்தியிருந்தால் அந்தப் புலிக்குணமே அவன் ஆட்சியில் தெரியும். அவன் ஆட்சியில் எதிரிகள் மறைவார்கள்; கடத்திச் செல்லப்படுவார்கள். "மக்களே போல்வர் கயவர்" என்றார் வள்ளுவர். "அயோக்கியர்களும் மக்களைப் போலத்தான் தோற்றமளிப்பார்கள்" என்ற வள்ளுவர் கூற்றுத் தலைவர்களுக்கும் பொருந்தும். மக்களிலிருந்து, மக்களின் பிரதிநிதியாக வருபவர் தானே தலைவர்...? கயவனும், தலைவன் போலத்தான் வேஷம் போடுவான்.

உலகின் எல்லா நாடுகளிலும் இத்தகைய துர்பாக்கியம் நிகழ்கிறது. இத்தகைய தலைவர்கள் தோன்றுகிறார்கள். நேரு போலவும், லிங்கன் போலவும் நல்லவர்கள் ஆட்சி புரிகிறார்கள். 'நிக்சன்' போலவும், 'பூட்டோ' போலவும் ஆட்சி புரிந்து சரிவை எய்துகிறார்கள் சிலர்.

ஆகவேதான் தலைவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, நல்ல சரித்திர அறிவு பெறவேண்டும். காலம் என்ற பரந்த படுதாவில் தன்னைக்காணக் கற்றுக்கொள்ள

வேண்டும். சரித்திரம் என்ற திரையில் தன் பிம்பம் எங்கே இருக்கிறது என்று காண முயலவேண்டும். இல்லாதபோது தனக்கும் நாட்டுக்கும் அழிவைத் தேடிக் கொள்கிறுன். அதிகம் சாதிப்பதில்லை.

அதேபோல, பதவியேற்ற போது "எதற்காகப் பதவி யேற்ருேம்?" "எந்த லட்சியத்திற்காகப் பதவி ஏற்ருேம்?" என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சகஜமாக அன்ருட அலுவல்களில் ஈடுபட்டு லட்சியங்களை மறந்து விடும் வாய்ப்புத் தலைவருக்கு நிறைய உண்டு. அதே போல், 'எதிர்க்கட்சியை—எதிரியைத் தோற்கடித்து மேல்வருவதுதான் சிலருக்கு லட்சிய'மாயிருக்குமே தவிர, நாட்டுக்கு நன்மை எது, என்ன செய்ய வேண்டும் என்ற லட்சியங்கள்—திட்டங்கள் இருப்பதில்லை. நமது ஊரில் இது சகஜம். இதுதான் நியதி.

தலைவனின் எல்லாவிதக் குறைபாடுகளையும் சுயநலங் களையும் நாடு அனுபவிக்க வேண்டியிருக்கிறது. மக்கள் அனுபவிக்க வேண்டியிருக்கிறது.

"இதிலிருந்து மீள வழியே கிடையாதா? கிடைத்த தலைவனைப் பெற்று அவன் விட்ட வழியில் சென்று அனுபவிக்க வேண்டியதுதான...?" என்று கேட்கக்கூடும். இல்லை. ஜனநாயகம் என்பது கழுதையல்ல—பலரும் குறைப்படுவது போல! ஜனநாயகம் ஒரு குதிரை. ஒரு நல்ல கம்பீரம் நிறைந்த, லாகவம் கொண்ட குதிரை. அதற்குச் சரியான கடிவாளம் இருக்கும்போது, சரியான திசையில் செலுத்தப்படும்போது, நம் பயணம் சுகமாக இருக்கும்; விரைவில் ஊர் போய்ச் சேர்வோம்.

எது அந்தக் கடிவாளம்...?

படித்தவர்களின் விழிப்பு, அறிஞர்களின் அஞ்சா நெஞ்சம்—அதுதான் அந்தக் கடிவாளம். எந்த நாட்டில்

படித்தவர்களின் விழிப்பும் அறிஞர்களின் துணிவும் புறக்கணிக்க முடியாத மாபெரும் சக்தியாக உருவெடுக்கிறதோ, வழி காட்டுகிறதோ, தவறைத் துணிந்து கூறித் திருத்துகிறதோ அப்போது ஜனநாயகமும், தலைவனும் ஒரு நல்ல நாட்டை உருவாக்குகிறார்கள்.

ஜனநாயகத்தின் கடிவாளம் பொது மக்களல்ல. பொதுமக்கள் குடிமக்கள்; அன்றாடம் பிழைக்கும் வழியில் ஈடுபட்டிருப்பவர்கள். தங்களை நேரடியாகப் பாதிக்காத விஷயங்களில் அவர்களுக்குச் சிரத்தை குறைவு. 'இராமன் ஆண்டாலென்ன, இராவணன் ஆண்டாலென்ன?' என்றிருப்பவர்கள் அவர்கள், பொதுவாக.

ஜனநாயகத்தின் கடிவாளம் படித்தவர்கள்; அறிஞர்கள். அந்தப் படித்தவர்களும், அறிஞர்களும் எதிர்க்கட்சியில் தான் இருக்க வேண்டுமென்பதில்லை. ஆட்சியில் அமைச்சரவையில் இருக்கலாம்; பள்ளிகளில், பல்கலைக்கழகங்களில், பத்திரிகைகளில் இருக்கலாம். அத்தகைய கடிவாளங்களைத்தான் அமெரிக்க அரசியல் அறிஞர்கள், ''Checks & Balances'' என்கிறார்கள். அமெரிக்காவில் அத்தகைய கடிவாளம் சட்டசபை அமைப்பில் உறுப்பினர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. அத்தகைய கடிவாளம் அமெரிக்க நீதித்துறையில் நீதிபதிகளிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது.

நம் நாட்டிலும் அத்தகைய கடிவாளங்கள் இருக்கின்றன. நம் நாட்டில் சட்டமன்றமும், நீதித்துறையும் சரியான கடிவாளமாகப் பூரணமாகப் பயன்படவில்லை என்பது கண்கூடு.

அமெரிக்காவில் படித்தவர்களின் விழிப்பு, அறிஞர்களின் துணிச்சல் வியட்நாம் போரை நிறுத்தியது; ஜனாதிபதியையே பதவி இழக்கச் செய்தது.

நமது ஊரில் படித்தவர்கள், பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், பத்திரிகைக்காரர்கள், நீதித்துறை யாளர்கள் எத்தனைப்பேர் அந்த விழிப்புடன்—துணிவுடன் செயல்படுகிறார்கள் என்று எண்ணிப் பாருங்கள்.

ஒவ்வொரு சமயம் 'சோ'வின் குரல் தனித்து ஒலிக்கும். பல சமயம் அது மறுகோடியில் நின்று ஒலித்துத் தன்னையே காட்சிப் பொருளாக்கிக் கொள்ளும்.

நமது ஊரில் எத்தனையோ சங்கங்கள் உள்ளன. மாநில வழக்கறிஞர் சங்கம், மருத்துவர் கழகம், பேராசிரியர்கள் சங்கம், ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் சங்கம் என்று எத்தனையோ அமைப்புகளின் கீழ் அறிஞர் கூட்டங்கள் செயல்படுகின்றன. நமது மாநிலச் சங்கங்கள் தங்களுக்குள்ள வலிமையை உணரவில்லை; பிரயோகிப்ப தில்லை.

அமெரிக்க வழக்கறிஞர் சங்கம் நிக்சனின் வழக்கறிஞர் உரிமையைப் பறித்தது. 'வாஷிங்டன் போஸ்ட்' என்ற பிரபல பத்திரிகை ஒரு சின்ன 'வாட்டர் கேட்' திருட்டைப் புலனாய்ந்து ஜனாதிபதிக்கு வெடி வைத்தது. எத்தனைப் பத்திரிகைள் நம் ஊரில்—தமிழ் நாட்டில்—அதைச் செய்யும்...? பெண்களையும், சினிமா நட்சத்திரங்களையும், பற்றி எழுதுவதை விடுத்து எவை யாவது (Investigative Reporting) செய்கின்றனவா...? ஏன் நம்மிடம் தைரியம் இல்லை? ஏன் நம்மிடம் உண்மை நாடும்—நாட்டு நன்மை நாடும், தூய மனோபாவம்—துணிச்சல் இல்லை? ஏன், கடிவாளம் நம் ஊரில் செயல்படவில்லை...?

# 11. விழிப்பும் துணிவும்

"மனிதனுக்கு மனிதன்தான் எதிரி! மனிதன் தன் சிந்தனைகளாலும் செயல்களாலுமே தன்னை அழித்துக் கொள்கிறான்" என்று மனோதத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள். நாட்டின் நல்வாழ்விற்கும் நாட்டுமக்களேதான் எதிரிகளாயிருக்கிறார்கள். லஞ்சத்தையும் ஊழலையும் கண்டும் காணாமல் இருப்பதன் மூலம்; சர்வாதிகார மனப்பான்மையை வழிபட்டு, போற்றி வளர்ப்பதன் மூலம்; தீமையைத் தீமை என்று கூற அஞ்சி ஊமையாயிருப்பதன் மூலம்.

நாம் லஞ்சத்தை ஏற்றுக் கொள்கிறோம்; ஊழலை ஏற்றுக் கொள்கிறோம்; சர்வாதிகாரத்தைச் சகித்துக் கொள்கிறோம். தீமை இழைத்தாலும் ஒதுங்கி வாழக் கற்றுக் கொள்கிறோம். நமது உரிமையை, சுதந்தரத்தை, நமது தனித்தன்மையை நாம் பறிகொடுக்கிறோம். தெரிந்து பறிகொடுக்கிறோம். சிண்டைப் பிறன் கையில் கொடுத்து விட்டுச் சிண்டு பத்திரமாய் வரவேண்டுமே என்று புலம்புவதில் என்ன அர்த்தம்...? என்ன பயன்?

காந்தி இறந்து முப்பதாண்டுகள் ஆகிவிட்டன. அவர் கொடுத்த தன்னம்பிக்கை, ஒளி எல்லாம் மறைந்து விட்டன. பாரதியும், வ. உ. சி.யும் செத்துப்போனார்கள். அந்தத் தைரியமும் தீரமும், வீரமும், வேகமும்

கொப்பளித்த சூழ்நிலை மறந்து போய்விட்டது. இப்போது வீரம் சினிமாவில்தான் இருக்கிறது; போலி வீரம்.

தனிமனித எண்ணங்களின் கூட்டு எண்ணத்தொகுதி தான் நாட்டு மக்களது எண்ணமாகப் பரிணமிக்கிறது. நாட்டு நடப்பு, பண்பாடு, அரசியல் எல்லாம் கூட்டுமனித எண்ணச் சக்தியின் வெளித்தோற்றம்; அவ்வளவுதான். மனிதர்களின் நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும்தான் நாட்டின் கலாசாரமாகப் போற்றப்படுகிறது. நம்பிக்கைகளுக்கும், பழக்கவழக்கங்களுக்கும் அடிப்படை —தனிமனித எண்ணங்கள்.

தனிமனித எண்ணங்களை உருவாக்குபவர்கள்தான் நாட்டுச் சிந்தனைவாதிகள், அறிஞர்கள். எந்த நாட்டிலும் 'எண்ணங்களை உருவாக்கும் தலைவர்கள்' (THOUGHT LEADERS) என்று சில பிரிவினர் உண்டு.

யார் அவர்கள்?

அவர்கள்தான் — பள்ளி — கல்லூரி ஆசிரியர்கள் — மதபோதகர்கள் — கலைஞர்கள், கவிஞர்கள் — பத்திரிகையாளர்கள்—வழக்கறிஞர்கள் — மருத்துவர்கள்—தொழில் அதிபர்கள்.

எல்லா நாடுகளிலும் இவர்கள் அந்தந்தத் துறையில் ஒரு தனித்துவத்தை, ஒரு தலைமையை, நெறிமுறைகளைத் தோற்றுவிப்பார்கள். மேற்குறிப்பிட்ட பிரிவினரில் பலர் தங்களுக்கு உரிமை இருப்பதை—நாட்டின் நெறி முறைகளை வளர்ப்பதில் பங்கு இருப்பதை உணர்ந்திருப்பதாகவே காணோம்!

மக்கள் அபிப்ராயத்தை உருவாக்கும் பத்திரிகைகளை எடுத்துக் கொள்ளுங்கள். ஓர் அனுபவமிக்க எழுத்தாளர் அகிலன் சாடுகிறார்: 'பத்திரிகைகள் வெறும் சதை

உணர்ச்சியை வளர்க்கின்றன' என்று. அதுவும் எந்தச் சதை உணர்ச்சி என்கிறீர்கள்...? ஆண்கள் உலகிலிருந்து பார்க்கும் ஆண் மகனுக்குத் தேவைப்படும் சதைஉணர்ச்சி. பெண்மையை வெறும் விளையாட்டுப் பொருளாக, இன்பப் படுக்கையறைப் பொருளாகப் பார்க்கும்—பெண்மையை விற்க முயலும்—ஓர் ஆணின் தேவை சதை உணர்ச்சி. சொன்னல் அதை 'தாய்க்குலம்' என்பார்கள்; 'கற்பு' என்பார்கள். இப்படிப் பெண்மையைப் பகடையாக வைத்து விளையாடும் பத்திரிகை உலகிற்கெதிராக, என்று விடுபட்ட பெண்ணுலகம் வீறு கொண்டெழப் போகிறது...? எங்கே இருக்கிறது பெண்ணுலகம்? பெண்கள் கல்லூரிகளில் படிக்கிறர்களா...? பெண் என்ன கவர்ச்சி எனும் பேரில் காசு பெற உதவும் காமப் பொருளா...? தாய்க்குலம், தாய்க்குலம் என்னும்போது என்ன நேரிடுகிறது? தங்கையைத் தங்கையாகவும், அத்தையை அத்தையாகவும், பாட்டியைப் பாட்டியாக வும் அவனல் பார்க்க முடிவதில்லை! ஒன்று அவனுக்குத் தன் ஒழுக்க நெறிகளைப் பற்றியே சந்தேகம் இருக்க வேண்டும்; அல்லது முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முயல்பவனக இருக்க வேண்டும். நமது தாய்க் குலத்தை வீட்டில் வேலைக்காரியாகவும், சமையற்காரி யாகவும், துணி துவைப்பவளாகவும்தானே நடத்தும் றேம் என்ன 'தாய்க்குலம்' வாய்ச்சவடால் வேண்டியிருக் கிறது' தாய்க்குலம், கற்பு என்பதெல்லாம் அவர்களை அதே இடத்தில் வைக்க நாம் உபயோகிக்கும் தந்திரங்கள்; மயக்கு மொழிகள்.

அமெரிக்காவில், 'பாலை அருந்துங்கள்' என்ற விளம்பரப் பேனரில் ஒரு பெண்மணியை நீந்தும் உடையில் பிரசுரித்திருந்தார்கள். மறுநாளே ஊருக்கு ஊர் பெண்கள் போராட்டம்; மறியல்; ஊர்வலம். போராட்டத்தை

டெலிவிஷனில் காட்டினார்கள். மூன்றும் நாள் விளம்பரப் பேனர்கள் அகற்றப்பட்டன.

நமது ஊரில் எத்தனை ஆண்டுகாலமாக 'குமுதம்' அழகான பெண்களை வழவழப்பான அட்டையில் அளித்து வருகிறது? இப்போது 'இதயம்' தொடங்கியிருக்கிறது! இது ஆண்களின் தாகம்.

'குமுதமும்' 'இதயமும்' எத்தனையோ நல்ல விஷயங்களைத் தாங்கி வருகின்றன. உண்மை. 'குமுதம்' 'இதயம்'—பண்பு மிக்க ஆசிரியர்களால் நடத்தப்படு கின்றன; உண்மை. ஆனால், பத்திரிகைகள் எதை Focus செய்கின்றன? முக்கியத்துவம் கொடுக்கின்றன என்பதைப் பாருங்கள்?

என்ன நெறிமுறைகளை வளர்க்கிறோம் என்று எண்ணிப் பாருங்கள்? எத்தகைய கலாசாரப் பண்பாட்டை உருவாக்குகிறோம் என்பதை எண்ணிப் பாருங்கள். யார் நமது சிந்தனைப் போக்கைச் சீர்ப்படுத்தும் தலைவர்கள் (Thought Leaders) என்று எண்ணிப் பாருங்கள்? நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம் என்பது விளங்கும்.

சிந்தனைத் தலைவர்கள் பலரிடையே தங்கள் வலிமைதனை அறியாமை ஒருபுறம். கொஞ்சம் அறிந்தவர் வர்கள் இடையேயோ, 'நாடு எந்தத் திசை நோக்கிச் சென்றால் நல்லது' என்பதில் தெளிவின்மை; அக்கறை யின்மை.

"ஏன், "சோ" போன்ற சிலர் கரடியாய்க் கத்திக் கொண்டுதானே இருக்கிறார்கள்? என்ன ஆயிற்று ..?" என்று சிலர் கேட்கக்கூடும்.

நாட்டின் எண்ண ஓட்டம் 'சோ' போன்ற ஒருவரால் உடனடியாகத் திசை திருப்பி விடக்கூடிய ஒன்றன்று!

நாட்டில் கலை மறுமலர்ச்சியைத் தோற்றுவிக்கப் பத்தாண்டு காலத்திற்கு மேல் தேவைப்பட்டது கல்கிக்கு. நாட்டில் சமுதாயச் சீர்திருத்தத்தை மலர்விக்கப் பெரியாருக்கும், அண்ணாவுக்கும் இருபத்தைந்து ஆண்டுகளும், பெரிய போராட்ட அமைப்பும் (கட்சிஅமைப்பும்) தேவைப்பட்டது.

இது 'சோ'வோ, அகிலனோ மற்றும் என்னைப் போன்ற சிலரோ தந்துவிடக்கூடிய தலைமை அன்று. அறிஞர்களிடம், படித்தவர்களிடம், நாட்டின் நலனில் அக்கறை கொண்டவர்களிடம் எல்லாம்—உள்ளிருந்து புறப்பட்டு அவரவர்கள் துறையைத் தொட வேண்டிய எண்ண ஓட்டம்—துணிச்சல்—இது. 'தோரோ' என்ற அறிஞன் அடிமைகளுக்கு இழைக்கும் அநீதிகளை எதிர்த்து நாட்டு வரியைக் கொடுக்க மறுத்தான். அவன் பெரும் இயக்கத்திற்காகக் காத்திருக்கவில்லை. அந்த விழிப்பு வேறொருவருக்காகக் காத்திருக்காமல் நம் படித்த மக்களிடையே கிளம்பும்போது—கடிவாளம்—அரசியலை நெறிப்படுத்தும் உடனடியாக.

இப்படிப்பட்ட விழிப்பு என். ஜி. ஓ. சங்கம் போன்ற 'பேபியன் சங்க'த்தில் (Fabian Society) இங்கிலாந்தில் ஏற்பட்டது. அதன் விளைவாக ஒரு சோஷலிச சமுதாயம் அங்கே மலர்ந்தது. நமது ஊர் என். ஜி. ஓ.வினர் அறிவிலும், திறமையிலும், துணிவிலும் ஒன்றும் குறைந்தவர்களல்லர். நாட்டு நலனைப் பற்றிய அக்கறையில் அரசியல்வாதிக்கு எந்தவிதத்திலும் தாழ்ந்தவர்களல்லர். விழிப்பு இருக்கிறது; விழிப்பு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. கடமை உணர்வு என்ற திரியும், துணிவு என்ற பொறியும்தான் தேவை

# 12. ஜனநாயக நெறிகள்

கண்டிப்பவனை, எதிர்ப்பவனை, மாறுபட்ட கருத்தைத் தெரிவிப்பவனைக் 'கட்சிக் கட்டுப்பாடு' என்ற பெயரில் தலைவன் ஒழித்துக்கட்ட முயலக்கூடும். இராஜாஜிகூட அப்படி அப்புறப்படுத்தப் பட்டார். எனினும் தன் தொண்டைத் தைரியமாகச் செய்தார். அவரை யாரும் எதுவும் செய்யமுடியவில்லை.

'கட்சிக் கட்டுப்பாட்டை ஒவ்வொரு எம். எல்.ஏ.யும், ஒவ்வொரு எம்.பி.யும், ஒவ்வோர் அமைச்சரும் மீறினல் நாடு எப்படி நடக்கும், ஒழுங்கு எப்படி நிலவும், நிரந்தர அரசு எப்படி அமையும்' என்று கேட்கலாம். உண்மை.

பேச்சுச் சுதந்தரத்திற்கும் கட்சிக் கட்டுப்பாட்டிற்கும் ஒரு வரையறை இருக்க வேண்டும். ஒரு வரம்பு இருக்க வேண்டும். அந்த வரம்பு மீறப்படும் போது நாடும்—தலைவனும் அல்லலுறுவார்கள். அந்த வரம்பு ஒரு நெறி. ஒரு ஜனநாயக நெறி. அந்த நெறியை நாம் மிகக் கவனத்துடன் வளர்க்க வேண்டும். பேசத் தைரியமில்லாத போது 'தான்தோன்றித் தலைவனை' உருவாக்குகிறோம். வரம்பு மீறிப் பொறுப்பற்று எதிர்க் கட்சித் தலைவன் பேசும் போது ஒரு 'குழப்பவாதியை' நாம் உருவாக்குகிறோம்.

இந்த நெறியை, ஜனநாயகப் பண்பை நம் சட்ட மன்ற உறுப்பினர்களுக்கும், பாராளுமன்ற உறுப்பினர் களுக்கும், தேர்ந்தெடுக்கப்பட்டத் தலைவர்களுக்கும் ஒரு பள்ளிக்கூடம் வைத்துச் சொல்லித் தர வேண்டும். நமது ஜனநாயக நெறி, ஏதோ இருக்கிற நிலைமையைப் பார்த்து அவரவர்கள், தங்களுக்குத் தெரிந்த விதத்தில் புரிந்து கொள்ளும் முறையாக இன்று வளர்ந்திருக்கிறது. இது போதுமானதன்று.

ஜனநாயகம் வேர்விடாத நம் நாட்டில், பிறநாட்டு ஜனநாயகப் பாரம்பரியங்களைக் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகளாகப் பள்ளிக்கூடம் வைத்துச் சொல்லித் தருவதில் தவறில்லை. யாரும், எந்தத் தலைவனும், எதிர்க்கட்சித் தலைவனும் தெரிந்து கொள்ள வேண்டிய தேவையில்லாத அளவுக்கு வளர்ந்து விட்ட பெரிய மனிதர்களல்லர்! இதன் மூலம், அர்த்தமற்ற நம்பிக்கையில்லாத் தீர்மானம், போலி வெளிநடப்பு, பொறுப்பற்றுப்பேசுதல், ஏகவசனத் தில் திட்டுதல்,கைகலத்தல் போன்றவை சட்டசபைகளில் நிகழாமல் நாம் ஜனநாயக நெறிகளைக் காப்பாற்றலாம்.

நாட்டின் வாழ்வில் சில நெறிமுறைகள் இருக்க வேண்டும். அவற்றை எல்லாரும் கடைப்பிடிக்க வேண்டும். பத்திரிகைச் சுதந்தரம், பத்திரிகைக்கு வாய்ப்பூட்டுப் போடுதல் என்ற இரண்டிற்குமிடையே ஒரு நெறிமுறை பத்திரிகை யாளர்களிடமும் — ஆட்சியாளர்களிடமும் இருக்கவேண்டும். அடிபட்டால் வாயைப் பொத்திக் கொள்வதும், அவிழ்த்துவிட்டால் தலைதெறிக்க ஓடுவதும் போன்ற பத்திரிகைச் செயல்கள் பத்திரிகைத் தர்ம மாகாது. படித்த பத்திரிகையாளர்கள் தங்களிடையே ஒரு பரஸ்பர கண்காணிப்புக் குழுவை நிறுவித் தங்களைத் தாங்களே நிர்வகித்துக் கொள்ளவேண்டும்.

அதேபோல் பொதுமக்கள் தங்கள் குறைகளைத் தெரிவித்து நியாயம் பெறுவதற்கும்; வன்முறை மூலம்தான் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்பதற்கும் இடையே இருதரப்பாரிடையும் சில ஜனநாயக நெறிமுறைகள் நிலவ வேண்டும். நிகழ்கின்ற சம்பவங்களைப் பார்க்கும்போது நாம் ஜனநாயகத்திற்கு லாயக்கற்றவர்கள் என்றே அடிக்கடி எண்ணத் தோன்றுகிறது. அதற்குமாற்று, தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்குத் தங்கள் பொறுப்பைப் பற்றிய, உரிமை பற்றிய, ஜனநாயக நெறிகள் பற்றிய அறிவு இல்லாமையே.

ஜனநாயகம், தானே தோன்றுவதன்று; நாம் வளர்க்கும் நெறிமுறைகளிலிருந்து பிறந்து வளர்வது. நமது அறிவு நடைமுறையில் எப்படி அப்பியசிக்கப் படுகிறது என்பதன் உறைகல் நமது ஜனநாயகம். தனிமனித குணங்களின்—சமுதாய குணநலன்களின்—உறைகல் ஜனநாயகம். நாம் நமக்காகவும் நாளைவரப் போகும் நமது சந்ததியின் நன்மைக்காகவும்—நல்ல ஜனநாயக நெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். வளர்க்க வேண்டும்

# 13. சமுதாய மனோபாவம்

அமெரிக்காவில் இந்தியாவைப் பற்றி என்ன நினைக்கிறார்கள்?

இதன் விடை உங்களைப் பெருமை கொள்ளச் செய்யப் போவதில்லை.

சில படித்தவர்கள்—விஷயம் தெரிந்தவர்கள்—"இந்தியா பழம்பெரும் கலாசாரம் கொண்ட நாடு. மிகப் புராதன அறிவு கொண்ட நாடு. வாழ்வின் மூலங்களின் இருப்பிடம்" என்று எண்ணுகிறார்கள். இவர்கள் மிகச் சிலர். விரல் விட்டு எண்ணக்கூடிய மக்கள் இவர்கள்.

"இந்தியாவைப் பற்றி எண்ணும்போது அதன் ஏழ்மைதான் என் கண்முன் வருகிறது. கோடானுகோடி மக்கள், இருக்க இடமில்லாமல், உண்ண உணவில்லாமல், பிதுங்கிய விழிகளுடன் எலும்பும் தோலுமாகக் கப்பரையை ஏந்திய வண்ணம் என் கண்முன் வருகிறார்கள். ஏன் இப்படி? இந்தியாவில் ஜனப்பெருக்கம் அதிகம்தான். எனினும், போதுமான பொருட்களை உற்பத்தி செய்ய வயலும் நிலமும், இயற்கைத்தாதுப் பொருட்களும் இருக்கின்றனவே நிறைய... பின் ஏன் இந்த வறுமை? பிற நாடுகளுடன் ஒப்பிடும்போது இந்தியர்கள் புத்திசாலித் தனத்தில் ஒன்றும் குறைந்தவர்களல்லர். பின் ஏன் இப்படி

வறுமை? தொடர்ந்தவறுமை, இல்லாமை, கஷ்டங்கள்?''— இப்படிக் கேட்கிறார்கள் நாட்டில் அக்கறை கொண்டோர்.

நாம் சுதந்தரமாக நம்மை நாமே ஆளத் தொடங்கிச் சுமார் 30 ஆண்டுகள்—ஒரு தலைமுறைக்கு மேல்—ஓடி விட்டது.

பெல்ஜிய நாட்டில் நம்மைவிட ஜனநெருக்கம் அதிகம். அங்கே ஏழ்மை இல்லை.

கிழக்கத்திய நாடான ஜப்பான் இன்று பொருளாதார ஏற்றத்தில் அமெரிக்காவை மிஞ்சிவிட்டது. சின்னஞ் சிறிய தீவான சிங்கப்பூர் ஓர் அழகான லட்சிய நாட்டை—பொருளாதார வளம் கொண்ட தேசத்தை— உருவாக்கி இருக்கிறது. மலேசியா, இந்தோனேஷியா— என்று எந்த நாட்டை எடுத்துக் கொண்டாலும் நம்மைவிட வாழ்க்கை நிலை நன்றாக இருக்கிறது.

சைனா, தொழில் அளவில் பெரிதாக முன்னேறா விட்டாலும், வளத்துடன், தன்னிறைவுடன் தன்மானத் துடன் வாழ்கிறது.

ஆப்பிரிக்க நாடுகள்கூட பின்தங்கிய நாடுகள் என்று பேசப்படுகின்றனவே தவிர, அவை வறுமையின் உருவ மாகத் தங்களைப் பிறர் கருத இடமளிக்கவில்லை.

ஆனால், இந்தியாவோ, "வறட்டுக் கௌரவம் பேசும், புத்திசாலிகள் நிறைந்த ஏழ்மை நாடு'' என்கிறார்கள். என்ன கொடுமை!

மேற்கூறிய கூற்றில் முழு உண்மை இருக்கா விட்டாலும் பெரும்பாலான உண்மை அதில் இருக்கிறது என்று கருதுகிறேன்.

'மாந்தர்தம் உள்ளத் தனையது உயர்வு' என்றார் வள்ளுவர். மனிதன் தான் கொண்டுள்ள எண்ணங்களுக்

கேற்ப உயர்கிறுன். நல்லெண்ணங்கள், உழைக்கும் மனேபாவம், எந்த நிலேயையும் சமாளிக்கும் தன்னம் பிக்கை, புதிய புதிய சிந்தனேகள், முன்னேறத் துடிக்கும் உள்ளம், வாழ்வில் வளம் பெற விரும்பும் ஆசை, அதற்கேற்ற செயலேத் துவக்கும் சிந்தனே—இப்படியுள்ள மனிதனே எந்த நாடும், எந்தச் சூழ்நிலேயும், எந்தக் கடவுளும் நிறுத்த முடியாது. அவன் தன் வாழ்வில் ஒரு புதிய உலகை நிர்மாணிக்கிறுன். அவனேப் போல எண்ணங்கள் அதிகம் நிறைந்த ஒரு சமுதாயம் வளமான சமுதாயமாக மலர்கிறது. வசதிகள் கொண்ட நாடாக வாழ்கிறது. வலிமை மிக்க தேசமாக உலக அரங்கில் பவனி வருகிறது.

சமுதாயம் என்பது தனி மனிதர்களாலான கூட்டம். நம்பிக்கையும், முயற்சியுங் கொண்ட தனிமனிதர் களாலான சமுதாயம் பாலேவனத்தைக் கூட பசுஞ்சோலே வனமாக்கி வாழ முடியும். உதாரணம்: அரேபிய மணலில் பொட்டல் வெளியில் குடியேறி இன்று வலிமை மிக்கச் சமுதாயமாக வாழும் இஸ்ரேல் நாடு. அந்த யூதர் சமுதாயத்திடம் தன்னம்பிக்கை, மனத்திட்பம், உறுதி, வலிமை, காரியங்களேச் சாதிக்கும் திறமை நிலவுகிறது. இத்துடன் நம் நாட்டில்—நம் சமுதாயத்தில்—பல்வேறு துறைகளில் நிலவும் எண்ணங்களே ஒத்திட்டுப் பார்ப்போம்.

ஆரம்பப் பள்ளிக் கூடத்திலிருந்து பார்ப்போம். கிராமத்து ஓர் ஏழை மாணவனும் ஒரு பணக்காரச் சிறுவனும் படிக்கிறுர்கள் என்றுல், இருவருக்கும் படிப்பு வரவில்லே என்றுல் - பணக்காரச் சிறுவன் வீட்டில் 'ட்யூஷன்' சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்கிறுர்கள். வசதியிருக்கிறது. ஏழைகள் வீட்டில் அந்த வசதியில்லே.

''அவ்வளவு தான் நம் விதி.'' என்று ஏழை விதியை நொந்து கொள்கிறான். அவன் உள்ளத்தில் காசு பண மில்லாததால் நாம் புறக்கணிக்கப் பட்டவன் என்ற எண்ணம் வேரூன்றுகிறது. அடுத்து அவன் செய்யும் எந்தக் காரியத்திலும் இத்தகைய எண்ணமே அவன் தைரியத்தைச்—சுய முயற்சியைப் பாழடிக்கிறது.

எல்லாம் 'இல்லாத கொடுமை' என்று பதில் அளிக்க முடியும். அதைவிடச் சமுதாய ஏற்றத்தாழ்வுகள் எவ்விதம் மன எண்ணங்களைப் பாதிக்கின்றன, என்பதைக் கவனியுங்கள். செல்வாக்கும் பணமும் ஆரம்பப் பள்ளியி லிருந்து உயர்நிலைப் பள்ளி, கல்லூரி, வேலை பெறுதல், திருமணம் செய்து கொள்ளுதல் என்ற எல்லா நிலையிலும் நம் சமுதாயத்தைப் பாதிக்கிறது. ஏழைகளையும் செல்வாக்கில்லாத கிராம மக்களையும் பாதிக்கிறது. நமது நாட்டில் 85 சத மக்கள் கிராமவாசிகள். ஆகக்கூடி 85 சத மக்கள் ''ஏழை ஏழையாய் இருக்கவேண்டியது தான்'' என்ற ஒரு மனோபாவத்தில் ஊறி வளர்ந்து வாழ்க்கையைத் தொடங்கினால் அந்த வாழ்க்கை - அந்தச் சமுதாயம்—எப்படி இருக்கும் என்று எண்ணிப் பாருங்கள். அதுதான் நமது நிலை.

எல்லாரும் 'கியூ'வில் உணவுக்கு நிற்கும்போது கடைசியில் வந்த சிலருக்குத் தனி மரியாதை—முக்கியத் துவம் கொடுக்கப்பட்டு அவர்களுக்குச் சலுகைகள் கிடைக் கின்றன. ஏன் ? கடைசியில் வந்தவர் ஒரு எம். எல். ஏ. யாக, மந்திரியாக, பணக்காரராக உணவு வழங்குபவருக்கு உறவினராக இருக்கக் கூடும்!

இதே கதிதான் வாழ்க்கையில் எல்லா நிலைகளிலும் 'கியூ'வில் நிற்பவர்களுக்கு ஏற்படுகிறது. பணம் உள்ளவர்கள், செல்வாக்கு உள்ளவர்கள் — பள்ளி

யிலும், கல்லூரியிலும், தேர்வு பெற முடியும்; அதிக மார்க்குப் பெற முடியும், நல்ல வேலை பெற முடியும்.

படிக்கும் மாணவனுக்குப் பள்ளியில் என்ன சொல்லிக் கொடுக்கிறோம்...? நேர்மை, நியாயம், சமதர்மம், உண்மை, சத்தியநெறி என்பது போன்றவற்றைப் பாடங்கள் மூலமாகவும் கதைகள் மூலமாகவும் சொல்லிக் கொடுக்கிறோம்.

அந்த மாணவன் நேர்மையைப் பற்றிச் சொல்லிக் கொடுக்கும் தன் கல்லூரியிலே காண்பதென்ன?... தன்னை விடத் திறமையில் குறைந்தவன் மருத்துவக் கல்லூரிக்கு, பொறியியல் கல்லூரிக்கு, வாணிபக் கல்லூரிக்குத் தேர்ந் தெடுக்கப்படுவதை, தன்னைவிடத் திறமையில் குறைந் தவன் எடுத்தவுடன் பெரிய வேலைக்கு எடுத்துக்கொள்ளப் படுவதை. தன்னைவிடத் திறமையில் குறைந்தவனின் மாமா பெரிய அதிகாரிக்கு, பெரிய அமைச்சருக்கு வேண்டியவராயிருப்பதனால் அவன் வேலை உயர்வு பெறுவதை...

ஆகக்கூடி மாணவனும், இளைஞனும் ஒரு நேர்மை யில்லாத - நியாயத்திற்கு அப்பாற்பட்ட - ஒரு சமுதாயம் செயல்படுவதைக் காண்கிறார்கள். ஒரு குடும்பத்தை ஏற்றுக் கொண்டு, சோற்றுப்பாட்டைக் கவனித்துக் கொண்டு வாழ்க்கையைத் தாலுக்கா ஆபீஸ் எழுத்த ராகத் தொடங்கும் ஒரு மனிதர் உள்ளத்தில் இதையெல் லாம் மீற வரலாம் என்ற நம்பிக்கைத் தீபமே அணைந்து போய் விடுகிறது. இருப்பவற்றை ஏற்றுக்கொள்பவர்கள் அவர்கள். இருப்பவற்றை ஏற்றுக்கொள்ளும் மக்களால் எந்தப் புதுமையையும் செய்ய முடியாது. அவர்கள் தேங்கிக் கிடக்கும் குட்டைக்குச் சமானம். தேங்கிக்

கிடக்கும் குட்டை நாற்றமெடுக்கும். வில்லை விட்டுப் புறப்படாத அம்பு எதையும் செய்யாது.

ஆனால், அவ்வப்போது சில நாடுகளில் மாணவர் போராட்டங்கள் வெளி வருகின்றன. மாணவர்கள் பொதுவாக லட்சியவாதிகள். மாணவர் போராட்டங் களில் என்றும் பெரும் அடிப்படைக் காரணம் இருக்கும். ஆனால், அதைச் சகஜமாக அரசியல்வாதிகளால் புரிந்து கொள்ள முடிவதில்லை.

மாறாகக் குடும்பச் சுமையை ஏற்றுக்கொண்ட - ஒரு வேலை பார்க்கும் சமுதாயம்-அநியாயங்களுக்கு எதிராகப் புரட்சி செய்ததாக யாரும் படிக்க முடியாது.

குற்றஞ் சாட்டப்பட்ட ஒரு பெரிய மனிதர், பணத் தாலும், செல்வாக்காலும், தந்திரத்தாலும் குற்றங்களி லிருந்து தப்பிவிடுகிறார் என்றால், எத்தகைய நீதிமுறை அங்கு நிலவுகிறது என்று எண்ணிப் பாருங்கள். நீதியில், நீதித்துறையில் நம்பிக்கை யில்லாதபோது ஒரு சமுதாயம் எதை நம்பி வாழும் என்பதை யோசித்துப் பாருங்கள். ஒருவருக்கு யாரைத் தெரியும், அவருக்கு என்ன செல்வாக்கு இருக்கிறது. அந்தச் செல்வாக்கை வைத்துக் கொண்டு என்ன செய்ய முடியும்; என்ன செய்துகொள்ள லாம் என்று சிந்திக்கும்—செயல்படும்—சமுதாயம் அது. என்று உழைப்பில் நம்பிக்கை வைக்கப் போகிறது? என்று உழைக்க முற்படப் போகிறது?

"நியாயமான வழியில் பாடுபட்டால் ஒன்றும் நடக்காது" என்று சொல்லிக்கொண்டு, நேர்மை பிறழ்ந்து நடக்கும் சமுதாய மனோபாவம் நம்முடையது. பின் எப்படி அது முன்னுக்கு வரும்...?

# 14. நாட்டில் நிலவும் எண்ணங்கள் - 1

நமது சமுதாயத்திலுள்ள பல மட்டங்களையும் எடுத்துக் கொள்ளுங்கள். அங்கு நிலவும் மனப் பான்மையைப் பாரபட்சமில்லாமல், அலசிப் பாருங்கள். அந்த மனப்பான்மை நாட்டு வளத்திற்கு, நாட்டு முன்னேற்றத்திற்கு எந்த வகையில் உதவுகிறது என்று யோசித்துப் பாருங்கள்.

அரசாங்க யந்திரத்தை இயக்கும் சமுதாயம்—அதன் மனநிலை என்ன? பொதுமக்களுக்குப் பாடுபடுவதற்காகச் சம்பளம் பெறும் அதிகாரிகள், பொது மக்களது வாழ்வுடன் தங்களைப் பிணைத்துக் கொண்டிருக்கிறார்களா? அல்லது தாங்கள் தனி வர்க்கம்—ஆளப் பிறந்தவர்கள் பொதுமக்களுக்கும் தங்களுக்கும் எந்தவிதச் சம்பந்தமுமில்லை என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்களா? என்று யோசித்துப் பாருங்கள். "அரசாங்க வேலை, அரசாங்க வேலை" என்று எல்லோரும் அரசாங்க வேலையாளர்களாகப் போனால் அவர்களுக்கு எங்கிருந்து யார் சம்பளம் கொடுப்பார்கள்? ஒரு விரிவடையும் அரசாங்க அமைப்பால், நமது வரிகள் அதிகமாகாமல் என்ன செய்யும் என்பதை எண்ணிப் பாருங்கள். அரசாங்க யந்திரம் சமுதாயத்தின் உற்பத்தி செய்யாத பகுதி; சமுதாயத்தை நெறிப் படுத்தும் பகுதி. அரசாங்க யந்திரம் புதுப் பொருளை

உற்பத்தி செய்து வருமானத்தை ஈட்டுவதில்லை. பொது உற்பத்தி அதே நிலையில் இருக்கும்போது, அரசாங்க யந்திரத்தையும் செலவினங்களையும் அதிகரித்துக் கொண்டே போகும்போது சமுதாயத்தின் சுமை அதிகமாகிறது; வரி அதிகமாகிறது. அரசாங்க யந்திரத்தின் மனநிலைதான் இதில் மிக முக்கியமானது.

தனிப்பட்டோர் முயற்சிக்கு, தொழிலுக்கு, மக்கள் வாழ்க்கைக்கு உதவுவதாக, இணைந்து செயல்படுவதாக அரசாங்க யந்திரம் இருக்கிறதா; அல்லது, என்னிடம் அதிகாரம் இருக்கிறது. அந்த நிபந்தனைகட்கு உட்பட்டு இயங்குமாறு நிர்ப்பந்திப்பதில் ஏற்படும் மனத்திருப்தியில்—மனப்போக்கில்—இயங்குகிறதா என்பதை யோசித்துப் பாருங்கள்.

அரசாங்க யந்திரம் சரிவரச் செயல்படாததற்குப் பல காரணங்கள் உள்ளன.

அரசியல்வாதிகளின் தலையீட்டினால், 'எது செய்வது' 'சரி' என்பதில் கருத்துக் குழப்பத்துடன் இயங்கும் நிலை.

நிரந்தரச் சம்பளத்துடன், அரசாங்க அதிகாரமும் இருப்பதால் தங்களைத் தனி ஆளும் வர்க்கமாக எண்ணக்கூடிய ஓர் அபாயம்.

அறிவையும் திறமையையும் சோதிக்கும் புதிய சூழ்நிலைப் பஞ்சத்தினால் வாழ்க்கையை - அலுவலை - செக்கு மாடாக ஓட்டிக் கொண்டிருக்கும் ஓர் இடர்ப்பாடு.

அரசாங்க வேலையிலிருந்து தொழில் துறைக்கும்; தொழில் துறையிலிருந்து சுய தொழிலுக்கும் மாறக்கூடிய வாய்ப்புக்கள் இல்லாததால், சோற்றுக்கு அரசாங்க வேலையையே நம்பிக் கொண்டிருக்கும் துர்ப்பாக்கியம்.

அரசாங்க அதிகாரிகள் உழைக்கிறார்கள் என்றால் இதையும் மீறி நாட்டுக்காகப் பாடுபடுபவர்களைத்தான் குறிப்பிட வேண்டும்.

ஜப்பானிலும், சிங்கப்பூரிலும், அமெரிக்காவிலும் அரசாங்க யந்திரம் தவறு செய்யும்போது—தனி மனிதர்கள் அரசாங்கத்தையே மிரட்டுவார்கள். ஆனால், நம் ஊரில் தனிமனிதன் அரசாங்க யந்திரத்தை மிரட்ட முடியுமா என்பதை நடைமுறை அனுபவக் கண்கொண்டு யோசித்துப் பாருங்கள். ஒரு தனி மனிதர் ரால்ப் நேடர், பெரிய தொழில் நிறுவனமான ஜெனரல் மோட்டார் கம்பெனியையே ஆட்டிவைத்தார். பின் அரசாங்க யந்திரத்தை ஆட்டினார். ஒரு தனி மனிதர் டாக்டர் டேனியல் எல்ஸ்பர்க், அமெரிக்க நாட்டின் உள்நாட்டுப் பாதுகாப்பு யந்திரத்தையே கோர்ட்டிற்கு இழுத்து வந்து நிறுத்தினார்.

ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு அங்கு நிலவும் எண்ணங்களே காரணம் என்றால், நமது சமுதாயத்தின் ஒரு பகுதியான அரசாங்க யந்திரத்தின் மனோபாவம் எப்படி இருக்கிறது என்பதை நீங்கள் யோசித்துப் பாருங்கள்.

சமுதாயம் என்பது பல உறுப்புக்களால் ஆன ஒரு பேருருவம். அதில் ஓர் உறுப்புச் சரிவர இயங்கவில்லை என்றால் சமுதாயத்திற்கு மூச்சுப்பிடிப்பு ஏற்படும். அந்த மூச்சுப்பிடிப்பின் நிலைமையைத் தொழில் துறையிலுள்ளோர் இன்று நம் நாட்டில் அனுபவிக்கின்றனர்.

இலக்கியம் வாழ்க்கையின் கண்ணாடி என்பார்கள். அதாவது ஊர் உலக வாழ்க்கையை, வாழ்க்கை நெறியை, வாழ்க்கை வளத்தை—அந்தக் காலத்தில் எழுதப்படும்

கவிதை, நாடகம், நாவல், சிறுகதை இவற்றிலிருந்து தெரிந்து கொள்ளலாம் என்பதுதான் அதன் பொருள்.

நம் நாட்டில் நல்ல எழுத்தாளர்கள் இல்லாமலில்லை; நல்ல கதைகள் வராமலில்லை. ஆனாலும் பொதுக் கண்ணோட்டத்தில், நாடும்—கதைகளும் எந்தப் போக்கில் செல்கின்றன என்று கவனியுங்கள்.

காதலும், காமமும், உடலுறவும் மனிதன் தோன்றிய திலிருந்து நம்முடன் பிறந்த உணர்வுகள். அதை எழுதாத காவியமில்லை; பாடாத கவிஞனில்லை; அதில் தன்னை மறக்காத மேதை இல்லை. நம் நாட்டில் வளர்க் கப்பட்டிருக்கும் பண்பாடு காரணமாக அவை பின்னுக்குத் தள்ளப்பட்டிருக்கின்றன. இதன் காரண மாக இளைஞருள்ளத்தில் 'பெண்மை' ஒரு புதுமை நிறைந்த இனிமையாக உருவெடுக்கிறது என்பது உண்மை. அதனால் அந்தப் பாதையில் நம் இளைஞர்களை நாம் ஆசைகாட்டி அழைத்துச் சென்றால், நமது வருங்கால இளைஞர் சமுதாயத்தைப் பாழடித்தவர்களாவோம்.

நமது பத்திரிகைகள் சினிமாவையும், அரசியலையும் முன்வைத்து வியாபாரம் செய்கின்றன. தமிழ்நாட்டு இளைஞர்களின் முன்னின்று கவனத்தை ஈர்க்கும் இரு பெரிய காந்த சக்திகள் சினிமாவும், அரசியலும் ஆகும்.

நாட்டு இளைஞர்கள் எல்லாரும் பெரிய சினிமா நடிகர்களாகவும், சினிமா நடிகைகளாகவும், ஆகி முன்னுக்கு வந்து விடலாம் என்றால், அதன் மூலம் நாடு வளம்பெற்றுவிடும் என்றால், உலகம் பூராவும் நம் தமிழ் நாட்டுப் படங்களே ஓடிக் கொண்டிருக்கும் என்றால் நாம் வாதிட வேண்டியது அவசியமில்லை. அதேபோல எல்லா மக்களும் அரசியல்வாதிகளாவதன் மூலம், நாட்டின்

வளம் பெருகும், உற்பத்திப் பெருக்கெடுத்தோடும் என்று யாராவது கூற முன்வருவார்களானல் நாம் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை.

ஒரு நாடு, தொழிலாலும், உழைப்பாலும், தொழில் சிந்தனையாலும்தான் வளம்பெற முடியும். சினிமாவும், அரசியலும், சமுதாயத்தின் வெவ்வேறு சிறு பகுதிகள். அமெரிக்கா விஞ்ஞான அறிவாலும், தொழில் வளத்தாலும்தான் முன்னேறியிருக்கிறது. சிங்கப்பூர் வாணிபத்தால்தான் முன்னேறியிருக்கிறது. ஜப்பான் உடலுழைப்பாலும், அறிவாலும்தான் முன்னேறியிருக்கிறது.

ஆனல், நமது கவனமோ, நம் நாட்டில் பெரும்பாலான மக்களின் கவனமோ, சினிமாவினல், அரசியலினல் திசை திரும்பியிருக்கிறது. இதற்கு யார் காரணம்? பொதுவாக நாமேதான் காரணம். அதே சமயம், நாடு பூராவும் ஒரே சமயத்தில் தங்கள் எண்ணங்களைப் பரப்பும் வசதி படைத்த பத்திரிகையும், சினிமாவும் அரசியல்வாதியும்தான் காரணம்.

தமிழ்நாட்டின் நிலைபற்றிக் கவலைப்படுபவர்கள் தமிழ் நாட்டின் பத்திரிகைப் போக்கைப் பார்த்தால் போதும்! பொழுதுபோக்குத் கதைகள், கவர்ச்சிப் படங்கள், சினிமா கிசுகிசுப்புகள் இப்படி...

தொழில் கட்டுரை என்றல் அதுவும் சினிமாத் தொழிலைப் பற்றிய கட்டுரைதான்! தமிழ்நாட்டின் எந்த எந்த ஊரில் எந்த எந்தத் தொழில்கள் இயங்குகின்றன என்றல் நம் மாணவனுக்கும், நம் பொது ஜனங்களுக்கும் தெரியாது. ஆனல், எந்த நடிகை அல்லது நடிகருக்கு என்ன 'மார்க்கெட்,' எந்த ஊறுகாய் பிடிக்கும் என்பதெல்லாம் சுவையான செய்திகளாகப் படித்து வைத்திருப்பார்கள்.

பத்திரிகைகளில் எத்தனையோ நல்ல விஷயங்கள் வருகின்றன. மறுக்கவில்லை. ஆனால், பத்திரிகையின் பொது ஓட்டம் எதை நாடி இருக்கிறது என்பதுதான் பிரச்சனை. அது அப்படி இருக்கும்போது மக்கள் எண்ண மும், சிந்தனையும் வேறு எப்படி இருக்கும் என்பதுதான் கேள்வி.

'எது விற்கும்?' என்று தாங்களே தங்கள் சுவையைக் கொண்டு அனுமானித்துக் கொண்ட வியாபார நோக்கு, தைரியமில்லாமை, சுய சகாயம் தேடும் போக்கு, ஜர்ணலிசம் என்பதை முறையாகப் பயிலாததன் விளைவாகப் பத்திரிகை தர்மத்தை உணர முடியாமை— இப்படி எத்தனையோ இடர்ப்பாடுகளால் நம் பத்திரிகைகள் அலைக்கழிக்கப்படுகின்றன. அந்தத் துர்ப்பாக்கியம் சமுதாயத்தின் மீது விடிகிறது.

இதற்குக் கீழ்நிலையில் அரசியல் சக்தியில் இருந்து கொண்டு ஏக வசனத்தில் பேசும் பத்திரிகைகள் வேறு. ஒவ்வோர் அரசியல் தலைவனுக்கும் ஒவ்வொரு பத்திரிகை என நமது ஊரில் தனி மனிதர்களுக்காகக் கொள்கைகள் இயங்குகின்றனவே தவிர, தர்மத்திற்காக, நீதி நேர்மைக் காக இயங்குகிற தன்மையில்லை.

'ஜனரஞ்சக'மான பத்திரிகைகள் சில, ''இதைத்தான் மக்கள் விரும்புகிறார்கள் ஆகவே, அவற்றை மக்களுக்கு வழங்குகிறோம்'' என்று கூறிக் கொள்கிறார்கள். மக்கள் ஆசைகளால் கீழ்த்தர உணர்வுகளினால் நடத்தப்படுவது வேறு; 'மக்களுக்கு இது நல்லது' என்று மக்களுக்கு வழி காட்டுவது வேறு. உண்மையைச் சொல்லப்போனால், பேராசிரியர் 'கல்கி'க்குப் பிறகு பொது மக்களுக்கு வழி காட்டியாக விளங்கிய பத்திரிகையை—விளங்கும் பத்திரிகையை நாம் இன்னும் காணவில்லை.

# 15. நாட்டில் நிலவும் எண்ணங்கள் - 2

ஒரு முன்னேறும் சமுதாயத்தை அங்கு நிலவும் எண்ணங்களிலிருந்து அறிந்து கொள்ளலாம். அரசியல் வாதிகள் எதைப்பற்றிப் பேசுகிறார்கள், கல்வியாளர்கள் எதைப்பற்றி விவாதிக்கிறார்கள், தொழிலதிபர்கள் எதைப்பற்றிக் கவலைப்படுகிறார்கள், இளைஞர் உலகத்தின் சிந்தனை என்ன, போக்கென்ன என்பவற்றிலிருந்து அந்நாடு எங்கே போய்க் கொண்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்.

காமத்தையும்—மோகத்தையும் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்த—அதில் தன்னை மறந்த—ரோம் சாம்ராஜ்யம் இன்று இருந்த இடம் தெரியாமல் அழிந்து போயிற்று. இன்று அந்நாட்டு மக்கள் ஏழைகள். காமத்தையும், கவர்ச்சியையும் மறைமுகமாக நாட்டின் முன் வைக்க விரும்புபவர்கள் அதன் விளைவு என்ன ஆகும் என்றும், அதன் விளைவு எதைக் கொண்டு வந்தது என்பதையும் பின்னோக்கிப் பார்க்கவேண்டும்.

சர்வாதிகாரத்திலும், தான்தோன்றித்தனத்திலும் வாழ்ந்த ஸ்பெயின் — முசோலினியால் அத்தகைய எண்ணங்களில், ஊறி வளர்க்கப்பட்ட நாடு—இன்று தன் தனித்தன்மையை இழந்து நிற்கிறது; கட்டுப்பாடே கதி என்று மக்கள் வாழத் தொடங்கிவிட்டார்கள். மக்கள்

தங்களது சுதந்தர மனப்போக்கைப் பறிகொடுத்து எண்ணங்களால் கட்டுண்டார்கள். சர்வாதிகாரப் போக்கையும், தனிமனித வழிபாட்டையும் பாராட்டும்—ஆராதிக்கும் மக்களும், அறிஞர்களும் பத்திரிகைகளும் அது எங்கே போய் முடியும் என்பதைத் தீர சிந்தித்துப் பார்க்கவேண்டும். சர்வாதிகாரத்தின் மூலம் நாட்டில் சுபிட்சத்தைக் கொண்டுவந்து விடலாம் என்று எண்ணிய பாகிஸ்தானத்துத் தலைவர் அயூப்கானும், எகிப்து நாட்டுத் தலைவர் கமால் அப்துல் நாசரும் என்ன சாதிக்க முடிந்தது என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும்.

ஊழலும் லஞ்சமும் சமுதாயத்தின் கேடுகளாக நாட்டில் நிலவியிருக்கும் போது—அத்தகைய எண்ணங்கள் மக்கள் கவனத்தைக் கவரும்போது—நாட்டின் நெறி முறைகள், கற்பு, எல்லாம் காற்றில் பறக்கிறது. தர்மம் சரிகிறது. நியாயம் தோற்கிறது. அந்நாடு தன்னைத் தானே அழித்துக்கொள்கிறது.

ஒரு நாடு முன்னேற வேண்டுமானால் அந்நாட்டில் அதற்கான எண்ண விதைகள் காற்றில் பரவ வேண்டும். நல்லெண்ணம், திட்டம், தன்னம்பிக்கை, தளர்வின்மை, உறுதி, தர்மம், நியாயம், உழைப்பு, லட்சியம், பொது நன்மை என்ற மகத்தான எண்ணங்கள் எங்கு நோக்கினும் எதிரொலிக்க வேண்டும். சமுதாயத்தின் ஒவ்வொரு பகுதியும் அஞ்சாமல், சுயநலத்தைப் பின்னுக்கு வைத்து, நாட்டு நலத்தை முன்னுக்கு வைத்துப் பாடுபட வேண்டும். எழுதுகிறவர்கள் எழுத வேண்டும். பேசுகிறவர்கள் பேச வேண்டும். பாடுபவர்கள் பாட வேண்டும். உழைப்பவர்கள், நெறிப்படுத்துபவர்கள் என்று எல்லாரும் அந்த ஒரு லட்சியத்திற்காகப் பாடுபட வேண்டும்.

அத்தகைய ஒரு மலர்ச்சி—எண்ணப் புரட்சி—இரண்டு வழிகளில் ஏற்படலாம்.

ஒன்று: மகத்தான தலைவன் மூலம். லட்சியவெறி கொண்ட தலைவன் தன் லட்சியங்களைத் தன் சொல் என்கிற மந்திரக்கோலால்—தன் நல்லெண்ணம் என்ற மந்திரக்கோலால்—தன் உழைப்பு என்ற மந்திரக்கோலால் ஒரு நாட்டின் கோடானுகோடி மக்களையும் உசுப்பி எழுப்பிவிட முடியும். உதாரணத்திற்கு நாம் வேறு எங்கும் போக வேண்டாம். ஒரு மகாத்மா காந்தி போதாதா...? படிப்போ, ஊர் உலக ஞானமோ இல்லாமல் இருளில் வாழ்ந்து கொண்டிருந்த நாற்பது கோடி மக்களையும் தன் லட்சியத்தால், 'சுயராஜ்யம் நமது பிறப்புரிமை' என்ற உண்மையால், சத்திய நெறியால் உசுப்பி எழுப்பிவிட வில்லையா...?

காந்தியின் காலத்தில் நாட்டில் எத்தகைய எண்ணங்கள் நிலவின என்று எண்ணிப் பாருங்கள். ஒரு பொக்கை வாய்க் கிழவர் இடுப்பில் முழங்கால் உயர வேஷ்டி கட்டியவர்; ஒரு பெரிய தோற்றமோ எதுவுமோ இல்லாதவர்; உண்மை, லட்சியம் என்ற இரண்டின் துணைகொண்டு—சரித்திரத்திலே நிகழ்ந்திராத வண்ணம்—சாத்வீக முறையால் நாட்டின் விடுதலைக்குப் போராடினார். படித்தவர்கள், வக்கீல்கள், மருத்துவர்கள் எல்லாரும் தங்கள் தொழிலைத் துறந்தனர். 'நாடு, விடுதலை' என்பதே அவர்களின் சிந்தனை. நாட்டு எண்ணங்களிலெல்லாம் தியாகம், பொதுநலம் என்ற சொற்கள்தான் அடிபட்டன. மனிதர்கள் தங்கள் பெயருக்காக, புகழுக்காக, வருமானத்திற்காக வாழவில்லை. உண்மை, தியாகம், விடுதலை என்ற மாபெரும் லட்சியங்கள்—மாபெரும் எண்ணங்கள்—சமுதாயத்தில் மேவின. தியாகத்தின் மூலம் காலணா காசு

சம்பாதிப்பதை யாரும் கனவில்கூட நினைத்துப் பார்க்காத நிலைமை.

தூங்கிக் கிடக்கும் எந்த நாட்டையும் ஒரு தனி மனிதன்—தலைவன்—தன் லட்சிய வெறியால் மகோன்னத நிலைக்கு அழைத்துச் செல்ல முடியும். தலைவர்களுக்கு மகத்தான லட்சியம் தேவை; தலைவர்களுக்கு அந்தத் தன்னம்பிக்கை தேவை. 'அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்' என்பது போல, தலைவனின் எண்ணங்களுக் கேற்ப ஒரு நாடும் அதன் மக்களும் நடந்து கொள் கிறார்கள். தலைவனின் எண்ண உயரத்திற்கு நாட்டு மக்களின் எண்ணங்களும் வாழ்வும் உயர்கின்றன.

அதற்குக் காந்த சக்தி படைத்த தலைவர்கள் (Charismatic Leaders) வேண்டும் என்று சிலர் கூறக் கூடும். அது உண்மையன்று. தென்னாப்பிரிக்கப் போராட்டத்தின் போது எடுத்த மோகன்தாஸ் காந்தியின் படத்தைப் பாருங்கள். ஒரு சாதாரண மனிதரைத்தான் காண்பீர்கள்; அங்கே எந்தக் காந்த சக்தியும் இல்லை. ஒரு மனிதன் உயர் லட்சியங்களால்தான் காந்த சக்தி பெறுகிறான். உயர் லட்சியங்கள்தான் மனிதனைத் தேவதூதனுக்கு கின்றன.

ஒரு நாட்டின் எண்ணங்களை மாற்றுவதற்கான இரண்டாவது வழி, அங்குள்ள படித்த மக்கள் ஒவ்வொரு துறையிலும், அஞ்சாமல், ஒரு குறிப்பிட்ட லட்சியத்தை நோக்கித் தங்கள் எண்ணங்களை மலர விடுவதுதான். இங்கிலாந்தில் சோஷலிசப் புரட்சி நடந்தது, படித்தவர் களாலும், பெர்னாட்ஷாவாலும்தான். அமெரிக்காவில் வளமான வாழ்வை நோக்கி எண்ணங்கள் மலர்ந்ததற்கு அங்குள்ள விழிப்பு பெற்ற மக்களிடம் நிலவிய எண்ணங் தான் காரணம்.

இன்றைய உலகில் மனித முயற்சியால் செழிப்புடன் வாழும் நாடுகள் சிலவற்றைக் குறிப்பிட வேண்டுமானுல் அமெரிக்காவையும், ஜப்பானேயும்தான் குறிப்பிட வேண்டும். அந்த நாட்டில் கடந்த ஐம்பதாண்டுகளாக என்ன எண்ணங்கள் நிலவின, என்ன எண்ணங்கள் இன்று நிலவுகின்றன என்று பார்க்கலாம்.

அமெரிக்காவில் சின்னஞ்சிறு குழந்தைக்கு, முதல் பருவப் படிப்பிலேயே சொல்லிக் கொடுக்கப்படுவது, 'எப்படித் தன் செயலுக்குத் தானே பொறுப்பு' (Self Reliance) என்பதுதான். கல்லூரிகளிலும் பள்ளிகளிலும், பாதிப்பேருக்கு மேல் வாணிபம் சம்பந்தமான பாடங் களேப் படிக்கிருர்கள். நினேவில் கொள்ளுங்கள். பாதிப் பேருக்கு மேல் படிப்பது வாணிபம்; 'பிசினஸ்' சம்பந்த மான, தொழில் செய்யும் முறை சம்பந்தமானபடிப்பு. பின் ஏன் பள்ளியிலிருந்தும், கல்லூரியிலிருந்தும் வெளிவரும் மாணவன்—தொழில் சம்பந்தமான எண்ணங்களில் மனத்தை ஊறப் போட்டவன்—சொந்தமாக ஒரு பிசினஸ் செய்வதைப்பற்றிச் சிந்திக்காது இருப்பான்? ஒவ்வொரு கல்லூரியிலும் அனேகமாக வாணிபப் படிப்புச் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. பல்கலைக் கழகங்களில் வாணிபம் சொல்லித்தரும் பேராசிரியர்கள் தொழில் உலகிற்கு ஆலோசகர்களாக இருக்கிருர்கள்.

## 16. நாட்டில் நிலவும் எண்ணங்கள்-3

அரசியலுக்கு வந்தால், அரசியல் வாதியின் முதற் கடமை; எப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதியில் தொழில்வளத்தைக் கூட்டலாம். வேலை வாய்ப்பை அதிகப் படுத்தலாம், என்பதாகும். அமெரிக்கச் சட்டசபை தன்னைத்தான் முழுவதும் ஈடுபடுத்திக் கொள்ளும் ஒரு விஷயம், நாட்டுப் பொருளாதாரம். எந்தச் சட்டத்தைச் செய்தாலும், இது எப்படி நாட்டுப் பொருளாதாரத்தைப் பாதிக்கும் என்பது பற்றி அரசியல்வாதிகளும் பேராசிரியர் களும், தொழில் தலைவர்களும், குடும்பஸ்தர்களும் சதா பத்திரிகையிலும் டெலிவிஷனிலும் விவாதிக்கிறார்கள். நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் 8 சதமா யிருந்த போது (நமது நாட்டில் 32 சதத்திற்கு மேல்) அது தான் தேர்தல் பிரச்சனையாயிற்று. எந்தத் தலைவரால் வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்க முடியும் என்று எண்ணி, அவருக்கு ஓட்டுப் போட்டார்கள். ஜனாதிபதி கார்ட்டரின் வெற்றிக்கு ஒரு காரணம், அவரும் ஒரு பணக்கார விவசாயி; ஆகவே, தொழில் துறைக்கு ஊக்கமளித்து நாட்டின் வளத்தை அதிகப்படுத்துவார் என்பது.

அத்துடன் நம் நாட்டில் "பணக்காரன் ஒரு பாவி" "ஏழையின் உழைப்பில் வளர்ந்தவன்" என்பன போன்ற வாய்ப்பேச்சுச் சோஷலிசத்தால் நாட்டில் வளம் பெருகும்

வாய்ப்பையே மூடிவிட்டோம். பணக்காரர்கள் பெருகும் போதுதான் நாட்டில் வளம் பெருகும்; பணம் எல்லா ரிடையேயும் புழங்கும். தொழில்கள் வளரும். அண்ணுவின் வார்த்தைகளில், 'பணக்காரர்கள் பணமிருக்கும்போது வைரத்தில் வறுவல் செய்து சாப்பிடுவதில்லை...'; சாப்பிட முடியாது.

நம் நாட்டில் பணத்தைப் பெருக்குவதற்குப் பதில், எல்லாரும் வளமான வாழ்வு வாழ வேண்டும் என்ற லட்சியத்திற்குப் பதில் இருப்பதைப் பகிர்ந்து கொடுத்து எல்லாரையும் ஏழையாக்கும் லட்சியமே சோஷலிசமாகக் கருதப்படுகிறது. பொருள் உற்பத்திக்குமுன் தன் ஊதிய உயர்வைப்பற்றித் தொழில் தலைவர்கள் பேசும் எண்ண நிலை—வறுமை நிலை—நம்முடையது.

நமது ஊரில் அரசியல்வாதிகள் ஏதோ அரசாங்கம் திறந்து போடப்பட்ட கஜானு என்ற நினைப்பில் சட்டம் இயற்றுகிருர்கள்; பணம் பற்ருதபோது, வரியாகப் போட்டுத் தள்ளுகிருர்கள். அமெரிக்காவிலுள்ள கலிபோர்னியாவில் இப்படி வரிகள் அதிகமானபோது அந்த மாநிலத்து மக்கள் வரி கொடா இயக்கம் நடத்தினர்கள். உடனே மாநில கவர்னர் (முதல்வர்) அரசாங்கச் சம்பளப் பட்டியலிலிருந்து தேவையில்லாத 2 லட்சம் பேர்களையும் பதவிகளையும் நீக்குவதாக அறிவித்தார்.

அரசாங்கம், உழைப்பவர்களின்—பாடுபடுபவர்களின் வரிப்பணத்தால் நடத்தப்படுவது. 'ஊருக்கு ஊர் கல்லூரி வைப்போம், நம் வருமானத்தில் 24 சதத்தைக் கல்விக்குச் செலவழிக்கிருேம்,' என்று பெருமைப்படும் மந்த ஆசாமிகள்—இல்லாதோருக்கு வீடு கட்டித் தருவோம் என்று ஆசை காட்டும் அரசியல்வாதிகள்—பணம் எங்கிருந்து வரும் என்பதைப் பற்றி யோசித்துப்பார்க்க

வேண்டும். பொன் முட்டையிட்ட வாத்தை வெட்டிய கதையாக, தொழில் உலகம் இன்று வரியால் அல்லல் படுகிறது. வரி அதிகப்படும்போது, தொழில் தொடங்க மூலதனமில்லை. தொழில்கள் தொடங்காதபோது வேலை வாய்ப்புக்கள் இல்லாது போகிறது. இதனால் சம்பாதிப் பவர்களின் வரிப்பளு அதிகமாகிறது.

சொல்லப் போனால் பொருளாதாரக் கொள்கை ஏது மின்றி, தொழிலைப்பற்றி அதிகம் அறியாத அரசாங்க அதிகாரிகளாலும் அரசியல் வாதிகளாலும்—பொருளா தார ஞான சூன்யங்களாலும் நமது தொழில் கொள்கை கள் நிர்வகிக்கப்படுகின்றன. "அரசாங்க நெருக்கடியும் கெடுபிடிகளும் மனித முயற்சியையே அழித்துவிட்டன. நிலைமை இப்படி இருக்கும் போது எப்படிப் பொருளுற் பத்திப் பெருகும்? தொழில் வளர்ச்சிக்கேற்ற சூழ்நிலையும், ஊக்கமும் அமைக்காமல், வாய்கிழியப் பொருளுற்பத்திப் பெருக வேண்டும் என்று பேசுகிறார்கள்" என்று கூறுகிறார் நம் நாட்டுப் பொருளாதார நிபுணர் ஒருவர்.

நிலவும் எண்ணங்களையும், அதன் விளைவுகளையும் பாருங்கள். எண்ணத்திற்கேற்பதான் வாழ்வு இருக்கும். வெறும் கெடுபிடிகளால் உற்பத்திப் பெருகுவதில்லை; வறுமையும், ஜபர்தஸ்தும்தான் பெருகுகின்றன. அதுதான் நமது நிலை.

அமெரிக்காவில், அனேகமாக ஒவ்வொரு துறையிலும் பல பத்திரிகைகள் இருக்கின்றன. குழந்தைகளுக்கான பத்திரிகை, இளம் பெண்களுக்கான பத்திரிகை, குடும்பப் பத்திரிகை, தொழில் பத்திரிகை, விவசாயிகளுக்கான பத்திரிகை என்று பல இருக்கின்றன.

அமெரிக்காவில் மிக அதிகமாக விற்பனையாகும் ஒரு தேசிய பத்திரிகை 'வால் ஸ்டிரீட் ஜர்னல்' என்பதாகும்.

அது வியாபார சம்பந்தமான—வாணிபம், தொழில், ஸ்டாக் மார்க்கெட்—சம்பந்தமான நாளிதழ். நாட்டில் எல்லாருடைய கருத்தும் எங்கிருக்கிறது என்று கவனியுங்கள். தொழிலில், வியாபாரத்தில், பொருளாதார நிலைமையை மேம்படுத்துவதில். அடுத்து அதிகம் விற்பனை ஆகும் ஒரு குடும்பப் பத்திரிகையை எடுத்துக் கொள்ளுங்கள். அதன் பெயர் 'ரெட்புக்'. பெயர்தான் சிவப்புப் புத்தகமே தவிர, அது குடும்ப சம்பந்தமான கட்டுரைகளை—குழந்தை வளர்ப்பு, மார்க்கெட்டில் பொருள்களின் தராதரம்—விலை விவரம், வீட்டை அழகாக வைத்துக் கொள்ளுதல், தோட்டம் போடுதல், மேக்கப் செய்து கொள்ளுதல் என்று கட்டுரைகளை வெளியிடுகின்றது. மருந்துக்கு ஒரு சிறுகதை இருக்கும். மற்றப்படி நல்ல புதிய புத்தகங்கள் வெளியானால் அதன் சுருக்கங்களை வெளியிடுவார்கள். சினிமா, டிராமாவைப்பற்றிச் சினிமா நட்சத்திரங்களைப்பற்றி ஏதும் இருக்காது. அரசியல் இருக்காது. எல்லாம் பயனுள்ள கட்டுரைகள்; உபயோகப்படும் சுவையான விஷயங்கள். குடும்பப் பத்திரிகைகள் எனப்படும், மெக்கால் (Mccalls) உமன்ஸ் டே (Womans day), குட் ஹவுஸ் கீப்பிங் (Good House keeping), லேடீஸ் ஹோம் ஜர்னல் (Ladies Home Journal), என்று எந்தக் குடும்பப் பத்திரிகையை எடுத்துக் கொண்டாலும் இதே அமைப்புதான்.

முன்னேற விரும்பும் குடும்பஸ்தர்கள், இல்லத்தரசிகள் எதைப் படிக்கிறார்கள் என்ற ஆர்வத்தோடு அடிக்கடி அக்குடும்பப் பத்திரிகைகளை வாங்குவதுண்டு. தொழில் சம்பந்தமான, வாழ்வு முன்னேற்றம் சம்பந்தமான, மனித உறவுகளை எப்படிக் கையாள்வது?...என்பது போன்ற எண்ணங்கள், சிந்தனைகள்தான் பொதுவான நிலைமை. சினிமாவுக்கென்றும், மஞ்சள் பத்திரிகை என்றும் சில

இருக்கின்றன, ஆனல். அவற்றை நூற்றுக்கு 5 பேர் வாங்கிஞல், படித்தால் பெரிய விஷயம். அமெரிக்க நாட்டு மக்களின் எண்ணங்கள் தங்களை உயர்த்திக் கொள்ளும்— வளப்படுத்திக் கொள்ளும் சிந்தனைகள்.

நமது ஊரில் அத்தகைய சூழ்நிலை நிலவ வில்லை என்பது மட்டுமன்று, நம் சிந்தனைகள் திசை திருப்பி விடப் படுகின்றன. செக்ஸ் என்பது அமெரிக்காவில் அடைய முடியாத விஷயமன்று. நமது ஊரில் அது ஏதோ அடைய வேண்டிய லட்சியமாகப் பத்திரிகைகளில் படம் பிடிக்கப் படுகிறது.

நமது ஊரில் இருப்பதுபோல அமெரிக்காவில், காலமான புலவர்களுக்கு யாரும் விழா எடுப்பதில்லை; நானூறு ஆண்டுக்குமுன் சிவப்பிந்தியனின் நாட்டுக்குள் அமெரிக்கன் அடியெடுத்து வைத்தான் என்று யாரும் பத்தினிக் கோட்டம் கட்டுவதில்லை. பட்டிமன்றம் இல்லை. அதெல்லாம் ஒரு குறிப்பிட்ட இலக்கியக் கழகங்களின் வேலைகள். நமது ஊரிலோ இவை எல்லாம் பொதுவாழ்வை நிறைக்கும் அளவு முக்கியத்துவம் பெற்றிருக்கின்றன. ‘கற்பில் சிறந்தவள் கண்ணகியா, மாதவியா’ என்றும், ‘சிறந்த சகோதரன் லட்சுமணஞ, பரதஞ’ என்றும், ‘‘அண்ணலும் நோக்கிஞன்; அவளும் நோக்கிஞள்’’ என்றும் நம் பொது மேடைகள் முழங்காத நாளில்லை.

## 17. நாட்டில் நிலவும் எண்ணங்கள்-4

நமது பொதுவாழ்வின் சிந்தனைகள் தனிமனித முன்னேற்றத்தைப் பற்றியும், நாட்டு முன்னேற்றத்தைப் பற்றியும் இருக்க வேண்டும். தொழில் வளம் கூட்டுவதைப் பற்றி; இளைஞர்களுக்கு இருக்கும் வாய்ப்புக்களைப் பற்றி ஆண்டு 2,000 யிரத்தில் தமிழ் நாட்டின் நிலை எப்படி இருக்கும் என்பது பற்றி—வருங்காலம் பற்றி—இருக்கவேண்டும். நம் கண்முன்னே நம் லட்சியம் தெரியும்போது நமது செயல்கள் அனைத்தும் அதை அடைவதில் செல்லும். இப்போதோ நாம் பின்னோக்கிப் பார்த்துக்கொண்டு சங்க காலத்தை—சேர, சோழ, பாண்டியன் காலத்தைப் பார்த்தவண்ணம் உட்கார்ந்திருக்கிறோம்.

"பழமையை மெல்லுபவர்கள், எதிர்காலத்தைக் கண்டு பயப்படுபவர்கள்; புதுமைகளுக்கு ஈடு கொடுக்க முடியாதவர்கள், அவர்கள் வாழ்க்கை முடிந்து போன வாழ்க்கை" என்று மனோதத்துவ ஆராய்ச்சிகள் கூறுகின்றன.

இந்த மனோதத்துவ விளக்கங்களுடன் சிலப்பதிகாரக் கூடத்தையும், வள்ளுவர் மாடத்தையும், மெரினாவில் நிற்கும் சிலைகளையும் பார்க்கிறேன். தமிழ்ச் சமுதாயம் ஏன் பழமையை மென்று அசைபோடுகிறது...? தமிழ்ச்

சமுதாயம் வருங்காலத்தைக் கண்டு பயப்படுகிறதா என்ற அச்சம் மனத்தில் தோன்றுகிறது.

'தமிழன்னையின் கையிலே சிலம்பும், சிந்தாமணியும், வளையாபதியும், குண்டலகேசியும்' என்று எத்தனை நாளைக்குக் கூறிக்கொண்டு அன்றாடப் பிரச்சனைகளை, வருங்காலச் சமுதாயத்தை ஒதுக்கித் தள்ளப் போகிறோம்?

இன்று தமிழன்னையின் கையிலே, கழுத்திலே, காதிலே, மடியிலே எல்லாம்—தமிழ் மக்களின் வாழ்வை வளமான வாழ்வாக ஆக்கும் வழிகள் பற்றிய புத்தகங்கள் தான் தேவைப்படுகின்றன. நாம், நம்மை நாமே மட்டும் ஏமாற்றிக் கொள்ளவில்லை. நமது சந்ததிகளின் வாழ்க்கையினையும் எங்கோ தள்ளிக்கொண்டு போகிறோம்.

"அடுத்த சில ஆண்டுகளில் நாட்டின் எந்தெந்தப் பிரச்சனைகளைக் கவனிக்கப் போகிறோம்? அவற்றிற்கு எப்படிப் பரிகாரம் காணப்போகிறோம்? அதற்கான திட்டமென்ன?—இதுபற்றி ஏன் நாட்டில் பேசப்படவில்லை. அன்றாடங் காய்ச்சியாக ஏன் நாடு ஓடிக் கொண்டிருக்கிறது? இவை எல்லாவற்றிலும் மிக முக்கியமாகச் சிந்திக்கப்பட வேண்டிய அவசரப் பிரச்சனை என்ன? அதை எப்படிக் கையாளப் போகிறோம்?

நமக்குத் தெளிவு வேண்டும்; திட்டம் வேண்டும். அதை யார், எப்போது செயல்படுத்துவார்கள் என்கிற நிர்ணயம் வேண்டும்.

நாட்டின் இன்றைய தலையாயப் பிரச்சனை வேலையில்லாத் திண்டாட்டம். வேலையில்லாத படித்தவர்களை, பட்டதாரிகளை நாம் நாளும் உற்பத்தி செய்த வண்ணம் இருக்கிறோம். ஒரு மருத்துவ மாணவனைத் தயாரிக்க இரண்டரை லட்சம் ரூபாய் செலவாகிறது என்கிறார்கள்.

அவர்களுக்கு வேலை இல்லை. வேலையில்லாதோரின் எண்ணிக்கை 30 சதத்திற்கு மேல் என்கிறார்கள்.

அதாவது மனித சக்தி வீணாகிறது! அதுவும் தொழில் துறையில் பயின்ற மனித சக்தியை நாம் வீணடிக்கிறோம். அவர்களை நமது சமுதாய மேம்பாட்டிற்கு நாம் பயன் படுத்திக் கொள்ளவேண்டும். அவர்களை நாம் பயன் படுத்திக் கொள்ளவில்லை.

இவர்கள் நிலை, கேவலம் பிச்சைக்காரர்கள் நிலையை விடக் கீழாயிருக்கிறது. ஏன்` திறமை, தகுதி, இளமை இருந்தும் இவர்களை "இல்லை போ" என்று கூறுகிறோம். என்ன கொடுமை! இதைவிட உலகில் பெரிய கொடுமை இருக்க முடியாது!

அவர்கள் பிச்சை கேட்கவில்லை; திறமைக்கு, உழைப்பிற்கு வாய்ப்புக் கேட்கிறார்கள். அவர்களுக்கு ஏதும் வழி தெரிவதாக இல்லை.

நமது தலைவர்கள் யாராவது அவர்களைப்பற்றிப் பேசு கிறார்களா, ஏதாவது திட்டம் தீட்டுகிறார்களா? கவனி யுங்கள்.

வேலையில்லாத் திண்டாட்டம் ஒரு பலமுனைப் பிரச்சனை. நாம் தொழில் வளர்ச்சிக்கான சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும். அதன்மூலம் பல தொழில்கள் பெருக, பலருக்கும் வேலை வாய்ப்பும் ஏற்படும். கிராம வளர்ச்சியில் நாம் நம் பட்டதாரிகளின் திறமைகளைப் பயன்படுத்த வேண்டும். அதன்மூலம் வேலை வாய்ப்புடன் கிராம வளர்ச்சியும் ஏற்படும். இது நம் நாட்டின் உடனடியான பிரச்சனை.

நமக்குத் திட்டக்குழு இருக்கிறது; அங்கே கெட்டிக் காரர்கள் இருக்கிறார்கள். நமக்குப் பல்கலைக்கழகங்கள்

இருக்கின்றன; அங்கு அறிஞர்கள் இருக்கிறார்கள். நாட்டு நன்மை நாடும், சுயலாபம் கருதாத தலைவர்கள் இப்போது இருக்கிறார்கள். டில்லியிலும், தமிழ் நாட்டிலும் தேவைப்படுவது; இவற்றை எல்லாம் ஒரு குறிக்கோளை நோக்கி நெறிப்படுத்தும் ஒரு தொடக்கம். அதற்காக நாடு காத்திருக்கிறது.

அத்துடன் நமது புலன்களுக்குக் கட்டுப்பட்டு வராத சில விஷயங்களை நீண்ட கால நோக்கில் நாம் அணுக வேண்டும். 'வெற்றியுடனும், பொருளாதார வசதியுடனும் வாழும் அமெரிக்காவிலும், ஜப்பானிலும் என்ன மனோபாவத்தில் குழந்தைகள் வீட்டில் வளர்க்கப்படுகின்றன—என்ன பாடங்களின்மூலம் சுயமுயற்சியையும், தன்னம்பிக்கையையும் அவை பள்ளிகளில் பெறுகின்றன—எந்த எண்ண ஓட்டங்களினால் சமுதாயம் ஒரு பெருந் துடிப்புடன் இயங்குகிறது...? என்பன போன்றவற்றை நாம் நம் சமுதாய இயல் நிபுணர்களையும், மனோதத்துவ வல்லுநர்களையும் கொண்டு ஆராய்ச்சி செய்யவேண்டும். பின் நம் அடிப்படையை அவர்களது சிபாரிசுகளுக்கேற்ப மாற்ற முயலவேண்டும். அப்போதுதான் நாம் நம் வருங்காலச் சந்ததியினருக்கு உதவியவர்களாவோம். இது ஒரு நீண்டகாலத் திட்டம்.

நாம் புத்திசாலிகள் என்று சொல்லிக்கொண்டிருப்பதில் ஒன்றும் பயனில்லை. அறிவை நாம் பயன்படுத்த வேண்டும். கம்பர் மாநாடு கூட்டுபவர்கள், சிலப்பதிகாரம் பேசுபவர்கள், மாவீரனுக்குச் சிலை எடுக்கும் செல்வந்தர்கள்—நாட்டுப் பிரச்சனைகளை விவாதிக்க, வழி காண மாநாடு கூட்டினால் நல்லது. அது அரசியல் மாநாடாகத்தான் இருக்க வேண்டும் என்பதன்று. எல்லாப் பிரச்சனைகளும் அரசியல் பிரச்சனைகளல்ல,

பல பிரச்சனைகளுக்கு அரசியல் வழிகாட்டும்—உதவும். ஆனால், நம் நாட்டை அலைக்கழிக்கும் இன்றைய பிரச்சனைகள், பொருளாதாரப் பிரச்சனைகள், கல்விப் பிரச்சனைகள், நிர்வாகப் பிரச்சனைகள். இவை அனைத்தையும் அரசியலாக்காமல், அமைதியாகச் சிந்தித்து, விவாதித்து நாம் வழிகாண முடியும்.

நாம் நமது அறிஞர்களைப் பயன்படுத்த வேண்டிய தருணம் வந்துவிட்டது. நாம் விஷயங்களை வேறுவிதமாக. புதிய நோக்கில் அணுகி வழி காணவேண்டிய தருணம் வந்துவிட்டது. ஓர் அவசரம் வந்துவிட்டது.

## 18. நாட்டின் தொழில்துறை அறிஞர்கள்

நமது நாட்டிலுள்ள ஒரு சில பெரிய சங்கங்களை (Associations) எடுத்துக்கொள்ளுங்கள். தமிழ்நாடு மருத்துவர்கள் சங்கம்; தமிழ்நாடு வழக்குரைஞர் சங்கம்; தமிழ்நாடு பள்ளி ஆசிரியர்கள் சங்கம்; தமிழ்நாடு கல்லூரிப் பேராசிரியர்கள் சங்கம்; தமிழ்நாடு தொழிலதிபர்கள் சங்கம்; தமிழ்நாட்டுப் பொறி இயலாளர் சங்கம்; தமிழ்நாட்டுத் தொழிலாளர் சங்கம்.

தொழிலாளர் சங்கங்களை விட்டு விடுவோம். அவை போராட்டங்கள் மூலமும், கட்சி சார்பின் மூலமும் ஆட்சியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றன. தொழிலாளருக்கென்றே ஒரு தனி அமைச்சரே—தொழிலாளர் நல அமைச்சர் என இருக்கிறார். இவர்களுக்குச் சமமாக, இவர்களைவிட, பல்வேறு நிலையில் மேம்பட்டவர்களாக மற்றச் சங்கங்களும் அவற்றின் உறுப்பினர்களும் இருக்கிறார்கள். அவர்கள் எல்லாரையும் கூட்டினால் அவர்கள் தொகை தொழிலாளர் சங்க உறுப்பினர் தொகையை விடக் கூடுதலாக இருக்கும். எனினும் அவர்களுக்கு ஓர் அமைச்சர் இல்லை. அவர்களைக் கவனிப்பார் இல்லை. பொதுவாக இந்தத் தொழில்துறை நிபுணர்களின் அறிவும் ஆலோசனையும் அரசாங்க நிர்வாகிகளின் முடிவுக்குட்பட்டு வெறும் ஜபர்தஸ்தில் சிக்கி விரயமாகிறது.

இவர்கள் வருமான அளவில் ஒரு குறிப்பிட்ட நிலையிலுள்ளவர்கள். சொல்லப் போனல் இவர்கள் தான் நாட்டின் வருமானத்தை உண்டுபண்ணும், அதிகப் படுத்தும் அறிவும் திறமையும் கொண்டவர்கள். பொறியிய லாளரும், விஞ்ஞானிகளும், பேராசிரியர்களும், தொழிலதிபர்களும்தான் ஒரு நாட்டின் பொருளாதார வளத்திற்கு வித்தாக இருப்பவர்கள். அத்தகைய முக்கியத்துவம் பெற்ற ஒரு கூட்டம் இன்று நம் நாட்டில் இருக்கும் இடம் தெரியாமல் முடங்கிக் கிடக்கிறது.

மனிதன் தன் அறிவாலும் திறமையாலும்தான் முன்னுக்கு வருகிறுன். அறிவும் திறமையும் கொண்ட படித்தவர்கள்தான் ஒரு நாட்டின் சொத்து. மருத்து வர்களும், பொறியியலாளர்களும், விஞ்ஞானிகளும், பேராசிரியர்களும், பள்ளி ஆசிரியர்களும், தொழில் அதிபர்களும்தான் அந்தந்தத் துறையில் மிக அதிகம் படித்தவர்கள். அவர்கள் அதிகம் செலவு செய்து, பயிற்சி பெற்றுத் தியாகங்களையும் சிரமங்களையும் மேற்கொண்டு தங்களை உருவாக்கிக் கொண்டவர்கள். இவ்வளவு படித்த ஒரு கூட்டத்தினருக்கு ஆட்சியில் ஏதாவது ஒரு குரல் உண்டா, ஆட்சியாளர்கள் இவர்கள் சங்க அபிப் பிராயத்தை மதிக்கிருர்களா என்று எண்ணிப் பாருங்கள்; ஒரு நாட்டின் மேல்தளத்தில் தங்கள் திறமையாலும் அறிவாலும், பயிற்சியாலும், அனுபவத்தாலும் சிறப்புப் பெற்ற ஒரு மக்கள் கூட்டத்தின் வலிமை, ஆட்சியைப் பொறுத்தவரை என்ன என்று யோசித்துப் பாருங்கள்.

அதேசமயம், இதற்கு நேர்மாருக அறிவோ, அனுபவமோ, திறமையோ, பயிற்சியோ இல்லாத ஓர் அரசியல்வாதி தனது வெறும் வாய்ச் சாலத்தின் மூலம் பதவிக்கு வந்து படித்தவர்களை மதிக்காத—உதாசீனம்

செய்யக்கூடிய நிலை ஒரு நாட்டில் இருந்தால் அந்நாட்டைப்பற்றி என்ன சொல்வீர்கள்?

வெறும் அரசியல்வாதியும், ஒரு தொழிலாளர் சங்கமும் இயங்கும் அளவுக்கு, மதிக்கப்படுமளவுக்கு, அதிகம் படித்த தொழில்துறை நிபுணர்கள் கூட்டம் மதிக்கப்பட வில்லை. அவர்கள் கருத்துக்கள் நாட்டுக்குப் பயன்பட வில்லை என்றால், நாம் எதற்காக ஐயா இவ்வளவு கஷ்டப் பட்டு, இவ்வளவு செலவழித்து இவர்களை உருவாக்கினோம்? வெறும் காட்சிப் பொருளுக்கா? கைப் பொம்மையாய் ஆட்டுவதற்கா? சாணையை வீட்டில் வைத்துக் கொண்டு, வெறும் மழுங்கிய கத்தியை உபயோகிப்பதை என்ன வென்று சொல்வீர்கள்? சாணையைப் பயன்படுத்த வேண்டாமா? கூரிய கத்தி கொண்டல்லவா அறுவையி லிருந்து, எதிரியைத் தாக்குதல்வரை நாம் உபயோகிக்க வேண்டும்...?

'நல்லதோர் வீணை செய்தே அதை நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?' என்று பாடினான் பாரதி. முப்பதாண்டுகளுக்குப் பின்னும் நாம் நல்ல வீணைகளை எல்லாம் நலங்கெடத்தானே அலட்சியப் படுத்தி வருகிறோம்?

எதைப் போற்றுகிறோமோ, எதற்கு முக்கியத்துவம் கொடுக்கிறோமோ, அதுதான் வளரும். பொய்ம்மையில் தன்னை மறக்கச் செய்யும் கலைகளுக்கும், வெறும் அலங்கார மேடைப் பேச்சுக்கும் நாம் முக்கியத்துவம் கொடுத்தோமானால் அவைதான் வளரும். நாடு எங்கே முன்னேறும்? வெறும் தமிழால், கலையால், நாட்டியத்தால், சினிமாவால் புதிய பணம் வரும், உற்பத்தி பெருகும், ஏழை மக்களின் வாழ்வு வளம்பெறும் என்று நம்

அரசியல்வாதிகள், ஆட்சியாளர்கள் சொல்வார்களேயா ஞல், அவர்களை ஆண்டவன் காப்பாற்றட்டும்!

"படித்தவர்களை, பயிற்சி பெற்றவர்களை, தொழில் துறை நிபுணர்களை நாம் உபயோகப் படுத்தாமலா இருக் கிறோம்? அவர்கள் கூறுகிற மாதிரிதான் வீடு கட்டுகிறோம்; அணை கட்டுகிறோம்; கல்லூரி, பல்கலைக்கழகங்கள் அமைக் கிறோம்'' என்று பொறுப்பிலுள்ளோர் கூறுவது காதில் விழுகிறது.

நாம் வளர வேண்டுமாஞல், வளம் பெற வேண்டு மாஞல் நாம் வளர்ந்து நிற்கும் பெரிய நாடுகளை முன்ஞேடியாகக் கொள்ளவேண்டும். அமெரிக்காவில் அந்தந்தத் தொழில்துறை அனுபவம் பெற்றவர்களை அமைச்சர்களாக (செயலாளர்களாக) ஆக்குகிருர்கள். அமெரிக்காவின் இன்றைய பாதுகாப்புச் செயலாளர் இராணுவத்தில் வேலை பார்த்தவர். இன்றைய தொழில் துறை செயலாளர் அதற்கு முன் ஒரு பெரிய கம்பெனியை நிர்வாகம் செய்தவர். நிதி இலாகா செயலாளர் பல பாங்குகளின் நிர்வாகியாக இருந்தவர். இப்படியே பட்டியல் நீள்கிறது. நாட்டின் தலைசிறந்த மேல் மட்டத்தில் உள்ள மனிதர்கள் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் படுகிருர்கள்.

நம் நாட்டில் அதுபோல் செய்ய முடியாது. பெரும் பாலும் அமைச்சர் பதவி அரசியலில் பங்கு கொண்டோ ருக்கே போகவேண்டும். எனினும் ஆலோசனைக்கு, யோசனை சொல்வதற்குத் திட்டம் வகுக்க இந்தத் தொழில்துறை மேல்மட்டத் திறமையை உபயோகிக் கலாம் அல்லவா? உபயோகிக்கிருேமா...?

அடுத்து பெரிய பெரிய பல்கலைக் கழகங்கள் ஒவ்வொரு துறையிலும் அரசாங்கத்தோடு இணைந்து ஆராய்ச்சி

செய்து ஆலோசனை கூறிச் செயல்படுகிறது. இங்கே, பல்கலைக்கழகங்கள் அறிஞர்கள் கூடும் இடம். நாம் நம் நாட்டில் எந்த ஆட்சித் துறைக்கு எந்தப் பல்கலைக் கழகத்தை உபயோகிக்கிறோம்?

மூன்றாவதாக, 'மருத்துவர் கழகம்'. இதுபற்றி என்ன அபிப்பிராயப்படுகிறது, வழக்குரைஞர் கழகத்தின் நிலை இதுபற்றி என்ன, நாட்டுப் பல்கலைக்கழகப் பேராசிரியர் கள், கல்லூரி நிர்வாகிகள் என்ன அபிப்பிராயப்படுகிறார் கள்? என்று அந்தந்தச் சங்க அமைப்புகளுடன் கூடி ஆலோசனை பெற்று அரசு வேறு நாடுகளில் செயல்படு கிறது. நம் நாட்டிலோ ஒரு வீராணம் ஏரியின் நீர் சென்னைக்கு வருவது சாத்தியமா என்பதை ஒரு பொறி யியல் நிபுணர் நிர்ணயிப்பதில்லை. எல்லாம் தெரிந்த அரசியல்வாதி தன் ஆசையை முன்வைத்துத் தீர்மானம் செய்கிறார்.

தொழில்துறை நிபுணர்கள் நிறைந்த சங்கங்கள் செல்வாக்கு ரீதியில் தங்கள் தலைவர்களைத் தேர்ந்தெடுப் பதன் மூலம் தங்கள் தலைமை வலிமையை இழந்து நிற் கின்றன. சரியான தலைமையின்மையின் மூலம் தங்களை நாட்டின் பொது ஓட்டத்திலிருந்து அப்புறப்படுத்திக் கொண்டுவிடுகிறார்கள். துணிவின்மை, பயம், அக்கறை யின்மை இவற்றின் மூலம் தங்கள் உரிமையையும் குரலை யும் இழந்து நிற்கிறார்கள். இது மாற வேண்டும்.

'இனியொரு விதி செய்வோம்' என்று நம் தொழில் துறை அறிஞர்கள் விழித்தெழ வேண்டும். 'நாட்டின் மீது எனக்கில்லாத அக்கறை எந்த விதத்தில் அரசியல்வாதிக்கு அதிகம்?' என்று தொழில்துறை நிபுணர்கள் தங்களைக் கேட்டுக் கொள்ளவேண்டும்.

நான் வேலை பார்த்த கல்லூரியில் கல்யாணராமையர் எழுத்தராக வேலை பார்த்துவந்தார். ஒரு நாள் ஏதோ அவர் வேலையில் தவறு கண்டு கல்லூரி முதல்வர் அவரைக் கூப்பிட்டார். "எத்தனை நாட்களாக இங்கு வேலை பார்த்து வருகிறீர்?" என்று அதட்டிக் கேட்டார். அதற்குக் கல்யாணராமையர் பதில் கூறினார்: "இக்கல்லூரியில் நான் பார்க்கும் 17-வது முதல்வர் தாங்கள்!" என்றார்.

அரசியல்வாதிகள் வருவார்கள்; போவார்கள். அரசியல் தலைவர்கள் தோன்றுவார்கள்; மறைவார்கள். ஆனால், தொழில்துறை நிபுணர்கள் நிரந்தரமாக இருப்பவர்கள். அவர்கள் யாருக்கும் பயப்படக் கூடாது. மனச்சாட்சியும், நாட்டு நன்மையும் மட்டுமே கருத்தாக இருக்கவேண்டும். நாட்டு நலத்தில் நமக்கும் பங்குண்டு.

# 19. சமுதாயத்தில் அடிமைப்புத்தி

எந்தக் காரியமும் தானே நடப்பதில்லை. வித்திட்டு, நாற்று நட்டு, நீரிட்டு, பயிர் வளர்த்து அறுவடை செய்யும்போதுதான் நெல் கிடைக்கிறது. சொந்த விஷயத்தில் இதைப் புரிந்துகொள்ளும் நாம், அரசியல் விஷயத்தில் எல்லாம் தானே நடக்கும் என்று எப்படி நினைக்க முடியும்?

சமுதாயத்தில் சிலர் தானே நடக்கும் என்று காத்திருக்கிறார்கள். இவர்கள் காலமெல்லாம் காத்திருப்ப வர்கள். சிலர் நாம் சொல்லி என்ன நடக்கப் போகிறது என்று தன்னைப்பற்றியே நம்பிக்கை இல்லாமல், இராமன் ஆண்டாலென்ன இராவணன் ஆண்டாலென்ன என்று வழியோரத்தில் நின்று வேடிக்கை பார்ப்பவர்கள். மிகப் பலர் — படித்தவர்கள் — 'இவர் நன்றாக நாட்டை ஆள்வார் என்று எதிர்பார்த்தோம். இன்று இப்படிச் செய்கிறாரே' என்று மனம் புழுங்குபவர்கள். நம் சிண்டைப் பிறன் கையில் கொடுத்துவிட்டு, பின் சிண்டு பத்திரமாக வரவேண்டுமே என்று கவலைப்பட்டவன் கதை இவர்கள் கதை. இதில் நாம் பிரசித்தி பெற்ற வர்கள். நம் சிண்டை வடக்கத்தியான் கையில் கொடுத்து விட்டு, ''ஐயா, கொஞ்சம் தமிழைக் காப்பாற்று. தபால் கார்டில் போட்டுக்கொள் இந்தியை. இரயில்வே

நிலையத்தில் வேண்டாம். பாராளுமன்றத்தில் இந்தியில் தான் பதில் தருவேன் என்று சொல்லாதே. மக்கள் பிரதிநிதி என்று சொல்லிக் கொண்டு ஊருக்குப்போனால் என்மீது கல்லை விட்டு எறிவார்கள்'' என்று ஓலமிடும் பண்பு நம்முடையது. சிண்டைப் பிறன் கையில் கொடுத்து விட்டு, ''ஐயோ சிண்டு சிண்டு!'' என்று ஓலமிடுவதில் நாம் வல்லவர்கள்.

நம்மிடை அச்சம் மேவிப் போயிருக்கிறது. பொது வாழ்வில் அசிரத்தை கூடிப்போயிருக்கிறது. நாம் சொல்லி என்ன நடக்கும் என்ற தன்னம்பிக்கையின்மை கையாலாகாத்தனமாய் மலிந்து விட்டது.

சொல்லப்போனால் தனி மனிதன் தனது உயர்ந்த பண்புகளை இழந்துவிட்டான். ஏதோ வாழ்ந்தால் போதும் என்ற நிலைக்கு வந்துவிட்டான். தலைவர்கள் முன் தங்களைத் தாழ்த்திக் கொள்ளும் ஒரு போக்கை அமைச்சர்களிலிருந்து தொண்டர்கள்வரை கவனியுங்கள். நாம் இப்பண்பை ஒரு கலையாக வளர்த்து விட்டோம்.

நாடு மாற வேண்டுமானால் நமக்கு அப்படி ஓர் எண்ணம்—மாற வேண்டும் என்ற எண்ணம் வேண்டும்; கொஞ்சம் தைரியம் வேண்டும்; ஒரு திட்டம் வேண்டும்; நம்மால் முடியும் என்ற தன்னம்பிக்கை வேண்டும்; எதிர்ப்பு கண்டு சளைக்காத மனம் வேண்டும்; திட்டத்தைச் செயலாக நிறைவேற்றும் செயல்திறம் வேண்டும்.

இவை அனைத்தும் வாழ்வதற்கு வேண்டிய தனி மனிதப் பண்புகள். நாம் அடிப்படையில் சூறை போய் விட்டோம். இவை எல்லாம் நம்மிடம் திரும்பவும் வரும் போதுதான், நாம் பெரியமனிதனாக உயரமுடியும்; நமது சமுதாயம் ஒரு வளமான லட்சிய சமுதாயமாக உயரும்.

சூழ்நிலையும், வறுமையும் மனிதனின் தன்னம்பிக்கையை நாசஞ்செய்து விட்டன. இல்லாமைக் கொடுமை நமது தைரியத்தைக் குழிபறித்து எல்லாருக்கும் தலைவணங்கும் நிலையில் நம்மை வைத்துவிட்டது.

தனிமனித நிலையே இப்படி என்றால், தனி மனிதர்களாலான சங்கங்கள் என்ன செய்யும்? அவையும் தனி மனித பயத்தையே பிரதிபலிக்கின்றன.

காமராஜர் முதல்வராயிருந்தபோது என். ஜி. ஓ. வினர் சம்பள உயர்வு கேட்டு, கூட்டம் நடத்துகிறார்கள். அதற்குக் காமராஜர் தலைமை வகிக்கிறார். என். ஜி. ஓ. சங்கத்தலைவர் தன் குடும்ப வறுமையைக் கௌரவமாகக் கூறிவிட்டுச் சொல்கிறார்: "நாளைக்கு வீட்டுக்குப் போய் இவ்வளவுதான் உயர்வு கொடுத்திருக்கிறார்கள் என்று சொன்னால் அவள் என்ன பதில் சொல்வாள் என்று எண்ணிப் பார்க்கிறேன்" என்று சோகத்தை ஹாஸ்யமாக விவரிக்கிறார். காமராஜர் சொல்கிறார்: "உங்க சம்சாரம் திருப்திப்படுகிற அளவுக்கு இங்கே கஜானாவில் இல்லை. அப்புறம்ணேன்..." என்கிறார்

அவ்வளவுதான். கப்சிப். ஓர் மயான அமைதி. கூட்டம் தலைவரைக் கோபமூட்டி விட்டோம் என்ற குற்ற உணர்வுடன் கலைகிறது.

நமது என்.ஜி.ஓ. சங்கத் தலைவரின் பொறுப்பையும் பதவியையும் பிரதிநிதித்வத்தையும் பாருங்கள். அதை ஒரேயடியாக அடித்துத் தூக்கி எறியும் தலைவர் காமராஜின் போக்கையும் பாருங்கள். அவர் தன் தலைமைப் பதவியைச் செய்யும் அளவுக்கு ஒரு என். ஜி. ஓ. குமாஸ்தா தன் வேலையைச் செய்யவில்லை என்று கூற முடியுமா? என். ஜி. ஓ. வினர் என்ன, சமுதாயத்தின் சம அந்தஸ்துள்ள பிரதிநிதி இல்லையா?"

முதல்வர் காமராஜரிடம் கோபித்துக் கொள்ளக் கூடாது. கோபித்துக்கொண்டால் நம்மைக் குப்பாஞ் சேரிக்கு மாற்றிவிடுவார் என்ற பயமா! 'இல்லே... அவ்வளவுதான் நம் தலேவிதி...இல்லாவிட்டால் ஆண்டவன், இந்த என்.ஜி.ஓ. பதவியைவிட வேறு பெரிய பதவி தந்திருக்க மாட்டானு?' என்று தன்னேயே நொந்து ஓடிந்து உட்கார்ந்துவிட்ட மனமா?

கன்னிமரா ஒட்டலில் ரோட்டரிச் சங்கத்தில் பேசச் சொல்கிருர்கள்: "படித்தவர்கள் தங்களேப் புறக்கணிக்க முடியாத அளவுக்குத் தங்களேப் பெருஞ்சக்தியாக உருவாக்கிக்கொள்ள வேண்டும்" என்று பேசுகிறேன். கை தட்டுகிருர்கள். கூட்டம் முடிந்ததும் ஒரு டாக்டர் வந்து கூறுகிருர்: "நமது மருத்துவக்கல்வி படுமோசமாக இருக்கிறது. மேனுடுகளுடன் ஒப்பிடும் அளவில் நாம் பல ஆண்டுகள் பின்தங்கி விட்டோம். இதை மாற்றி அமைக்க வேண்டும் என்று கூறினேம். என்ன ஆயிற்று? வேலேயே அவர்கள் தயவில்தான் பார்க்க வேண்டியிருக் கிறது. எதிர்த்துச் சொன்னுல் எதிர்கட்சிக்காரன் என்கிருர்கள். அவர்களுக்கு ஒத்து நாம் போகவேண்டி யிருக்கிறதே தவிர, நல்ல கருத்துக்களே அவர்கள் லட்சியம் செய்வதில்லே."

ஒரு புனிதமிக்க மருத்துவத் தொழில்; வருமான மிக்க ஒரு மருத்துவத்தொழில். அவர்கள் நிலே அப்படி. ஒத்துப் போகிருர்கள். ஒத்துப் போக வேண்டியிருக் கிறது. ஒத்துப்போய் எந்த உலகம் முன்னேற்றம் கண்டது?

ஒரு பணம் படைத்த சமயப் பெரியாருடன் பேசுகி றேன்: "ஐயா, சைவமும் தமிழும் போதும். இளேஞர் களுக்கு வேலே வாய்ப்புத் தரும் வழியில் மடத்துப்

பணத்தை முதலீடு செய்து தொழில் தொடங்குங்கள்'' என்கிறேன்.

அவர் கூறுகிறார்: ''தமிழ் மாநாடு கூட்டி அமைச்சருக்கு மாலை போடுகிறோம் என்று குற்றம் சாட்டு கிறீர்கள். 'பூனை, இடமும் போகவேண்டாம். வலமும் போகவேண்டாம். மேலே விழுந்து பிடுங்காமல் இருந்தால் போதும்' என்கிற நிலைமை என்னுடைய நிலைமை. வேறு என்ன செய்யமுடியும்'' என்கிறார்.

ஆத்மீகத்தில் அரசியல்! சன்னியாசத்தில் சாணக்கியம் புரியும் சமயப் பெரியார்! துறவு பூண்ட இவரே இப்படி என்றால் சம்சாரத்தில் வாழும் சாதாரண மனிதன் எம்மாத்திரம்?

ஓர் ஆராய்ச்சி செய்தார்கள். அதிகாரத்தைத் தானே எடுத்துக்கொள்பவன் பொல்லாதவனா? அல்லது பிறன் தன்மீது அதிகாரம் செய்யத் தன்னை அனுமதிக்கும், தாழ்த்திக்கொள்ளும்—மனிதன் கேவலமானவனா, குற்றம் சாட்டப்பட வேண்டியவனா என.

அறிஞர்கள் கண்ட முடிவு; ''முதுகெலும்பில்லாது அதிகாரத்தை ஏற்றுக்கொள்பவனே அடிமை. அவன் அடிமைப்புத்தியே அதிகாரம் வளர இடம் கொடுக்கிறது.''

## 20. நமது பாரம்பரியமும் இன்றைய நிலையும்

நமது பாரம்பரியம் மிகப் பெரியது. நம் பாரம்பரியத்தின் பெருமைக்கேற்ப இன்று நாம் வாழவில்லை.

நமது சங்ககாலப் பாடல்களையும், தேவார, திருவாசகப் பாடல்களையும், இந்து சமயத்தின் ஆழ்ந்த உண்மைகளையும், உபநிடதங்களையும் படிக்கும்போது எத்தனை ஞானிகள்; பெரியவர்கள் நம் முன்னோர்; எத்தனை பெரிய உண்மைகளைக் கண்டிருக்கிறார்கள் அவர்கள்; 'ஆகா நமது பாரம்பரியச் சொத்து தான் என்ன...!' என்று பெருமை அடையாமல் யாரும் இருக்க முடியாது. நமது பாரம்பரியமும் சரித்திரமும் மிகப் பெரிது.

அதேபோல் இன்றைய தமிழ்நாட்டில் ஒரு கலை நிகழ்ச்சியை, நாட்டியத்தை, நாடகத்தை, சினிமாவை, ஒரு தமிழ்க் கவிதையை, கதையை அனுபவிக்கும் போதும், நம் மனிதமனத்தை உயரத் தூக்கிச் செல்லும் அபார சக்தி பெற்ற கலைஞர்களை நாம் பெற்றிருப்பது குறித்து நான் இறுமாப்பு அடைவதுண்டு.

அதேபோல, நாம் பிறந்த மண்ணும் ஒன்றும் வளம் குறைந்ததன்று, பாலைவனத்தில் வந்து குடியேறிவிடவில்லை நம் மூதாதையர். காவிரி விரித்த பூஞ்சோலை வனத்தில் தான் வந்து வாழவைத் தொடங்கினர்கள்.

இத்தனை பெற்றிருந்தும், நமது நடைமுறை உலகம் ரசிக்கத் தகுந்ததாக இல்லை. வாழ்வு அங்கே ருசிக்கத் தகுந்ததாயில்லை. பொழுதுபோக்குக்காக, ரசனைக்காக நாம் கலையை அனுபவிக்கவில்லை. நடைமுறை உலகி லிருந்து தப்பிப்பதற்காக அங்கே செல்கிறோம். ஏனெனில் நடைமுறை உலகம், அதில் அன்றாடம் வாழ்வது அத்தனை கொடுமையாய் இருக்கிறது. இல்லாமை, வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம், அதிகார நெருக்கடி, மனிதன்—நாயினுங் கீழாகத் தன்னை ஆக்கிக் கொள்ளும் அவலம்...

பாரம்பரியமும், திறமையும், நல்ல பொன் விளையும் பூமியும் இருக்கும் போது, ஏன் நாம் கஷ்டப்படுகிறோம்? அல்லலுறுகிறோம்...? எத்தனையோ சிறிய நாடுகள்—நம்மைவிட மக்கள் தொகை பெருகிய நாடுகள் மலையை யும், பாறையையும் பூமியாகக் கொண்ட நாடுகள், இன்று உலகில் பெருமையுடன் தலைநிமிர்ந்து வாழ்கின்றன. யுத்தத்தால் நாசஞ் செய்யப்பட்ட ஜப்பான் கடந்த முப்பதாண்டுகளில் அமெரிக்காவே அஞ்சும் வண்ணம் பொருளாதார வளம் பெற்று விட்டது. ஜப்பானியரும் நம்மைப் போன்ற ஆசியரே.

நாம் எங்கே தவறு செய்தோம்...? ஏன் ஏழ்மை யிலிருந்து விடுபட முடியவில்லை? ஏன் நம்மால், நமது இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பளித்து நம் நாட்டு உற்பத்தி வளத்தைப் பெருக்க முடியவில்லை. வசதியான வாழ்க்கை நமது பிறப்புரிமையாக இருக்கவேண்டும். சுகமாக வாழ்வது, பொருளீட்டுவது நேர்மையாய் வாழ்வது ஏன் நமக்கு முடியாது போய்விட்டது? கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்.

ஒரு நாடு எந்தக் காலத்தில் சிறந்து விளங்கியிருக் கிறது என்று பார்த்தால் அந்த நாட்டின் ஆட்சியும்,

அந்த நாட்டின் தலைவனும் எப்போது சிறப்பாகச் செயல் பட்டிருக்கிறார்களோ அப் போதுதான். 'தலைவன் எவ்வழி அவ்வழி குடிகள்' என்ற பேருண்மைக் கேற்ப ஒரு நாட்டின் தலைவனது கற்பனையும், துணிவும், அறிவும், திறமையும், தீர்க்கதரிசனமும், செயலும்தான் ஒரு நாட்டின் பொற்காலத்தை மலர்விக்கிறது.

ஆனால், இன்றைய ஜனநாயக அமைப்பில் சிலை செதுக்கினாற் போல நாம் விரும்பும் தலைவனை நாம் விரும்புகிற மாதிரி செதுக்கி அரசேற்ற முடிவதில்லை. தேர்தலில் இரண்டு சாதாரணர்கள் நின்றால் அவர் களுக்குள் எந்தச் சாமான்யர் வேண்டும் என்பதில் நாட்டின் கதை முடிந்து விடுகிறது. நிற்கும் இருவரும் அயோக்கியர்கள், திறமை யற்றவர்கள் என்றால், நம் தலைவிதி, 'அதோ கூரைமீது நின்றுகொண்டு கொள்ளி யைச் சுற்றுகிறானே அவனே பார்ப்பதற்கு நன்றாயிருக் கிறான்' என்பதில் முடிந்து விடுகிறது. இதை எல்லாம் மீறி நாட்டுக்கு ஒரு மூதறிஞர் இராஜாஜியும், பேரறிஞர் அண்ணாவும் தலைவராகக் கிடைத்துவிடுகிறார்கள்.

சகஜமாக, ஓர் அரசியல் கட்சியின் கட்டுக்கோப்பும், அது போடும் சத்தமும், அதன் பணக் கையிருப்பும், அது எழுப்பும் மேடையும், ஒளி விளக்கும், ஆடம்பரமும், அது தூண்டி விடும் வெறுப்பு—பய உணர்ச்சிகளுமே தேர்தல் களின் முடிவைத் தீர்மானித்து விடுகிறது.

ஒரு நல்லவன் அல்லாதவனோ அல்லது ஆட்டுமந்தைத் தலைவனோ வருவது நாட்டிற்கு ஆபத்துதான் என்றாலும், இன்றைய ஜனநாயக அமைப்பின் மற்ற ஸ்தாபனங்கள் விழிப்புடன் இருக்கும் போது—மற்ற இயக்கங்கள் ஆட்சியை நெறிப்படுத்தும் போது—நாடு தீமையிலிருந்து-

முட்டாள் தனத்திலிருந்து—விடுபடவும். நன்மை பெறவும் வாய்ப்புண்டு.

அந்த மற்ற ஸ்தாபனங்கள்—இயக்கங்கள், நீதித் துறை, சட்டசபை, பத்திரிகைகள், படித்தவர்களின் தொழில் துறை, சங்க அமைப்புகள் ஆகியவைகள் ஆகும்.

நீதித்துறையில் நல்லவர்களும், நேர்மையானவர் களும், நாட்டின் மீது அக்கறை கொண்டவர்களும் இருக்கும்போது சட்டம் ஆட்சியாளருக்காக வளைவ தில்லை. பொதுமக்கள் அரசாங்கத்திற்கெதிராக வழக்குத் தொடரும்போது நீதித்துறை, தடம்புரளும் ஆட்சியை நெறிப்படுத்துகிறது.

அதேபோல் சட்டசபை உறுப்பினர்கள் துணிச்சலை முன்னுக்கு வைத்துச் சுயநலத்தைப் பின்னுக்கு வைத்து, பயத்தையும் கட்சிக் கட்டுப்பாட்டையும் பின்னுக்கு வைத்து, இது நாட்டிற்கு நல்லதா என்று ஆராய்ந்து முடி வெடுப்பதன் மூலம்—ஒரு பத்துப் பதினைந்து சட்டசபை உறுப்பினர்கள்—நாட்டின் மகத்தான ஆளும் சக்தியாக விளங்கலாம். நாட்டைச் சரியான கதியில் இயக்கலாம்.

'குணம்நாடிக் குற்றமும்நாடி' என்று வள்ளுவர் கூறியது போலப் பாராட்ட வேண்டிய இடத்தில் பாராட்டி, கடிய வேண்டிய இடத்தில் கடிந்து, திருத்திப் பொதுமக்களது அபிப்பிராயத்தை உருவாக்க முடியு மானால் ஒரு நாட்டு ஆட்சி, பத்திரிகைகளுக்கும் பொது மக்கள் அபிப்பிராயத்திற்கும் பயப்படும்; ஆட்சி நெறிப் படும். நாட்டில் இப்போதோ போற்றிப் பதிகமும், இல்லாவிட்டால் தூற்றும் நாற்றமும் பத்திரிகை தர்மமாக வளரும் கொடுமை அதிகம் நிலவுகிறது.

இம்மூன்று ஸ்தாபனங்களையும் மீறி ஒரு தனிமனிதன் தன் துணிச்சல் மூலம், கொள்கைப்பிடிப்பின் மூலம், தேசப்பற்றின் மூலம் நாட்டின் போக்கைத் திருப்பலாம். அமெரிக்காவில் ஒரு தனிமனிதன் வரிகொடா இயக்கம் நடத்தினான். (இன்றும் இங்கே நடத்துகிறார்கள்.) அவன் காட்டிய வழியே பின்னால் மகாத்மா காந்திக்கு வழி காட்டி, வரிகொடா இயக்கம், உப்புச் சத்தியாக்கிரகம் செய்ய அவரைத் தூண்டியது. அந்த அறிஞன் பெயர் 'தோரோ'. தனிமனிதனுக ஒரு பொட்டி ஸ்ரீ ராமுலு ஆந்திரப் பிரிவினைக்காக உண்ணாவிரதமிருந்தார்; உயிர் நீத்தார். தனி ஆந்திரம் உருவாகியது. தனி மனிதனின் துணிவு எந்நாட்டிலும் வீண்போவதில்லை.

நமது ஊர் என்.ஜி.ஓ. சங்கத்திற்குச் சமமான ஓர் அமைப்பின் மூலம் இங்கிலாந்து அரசாங்க ஊழியர்கள் ஒரு சோஷலிச சமுதாயத்தை உருவாக்கினார்கள். அணு சக்தி நிலையங்களால் ஏற்படக்கூடிய பெருவிபத்துக்களை யும் கேடுகளையும் உணர்ந்த சில மக்கள் ஒன்றுசேர்ந்து அமெரிக்க அணுசக்தி நிலையங்களின் எதிர்கால அமைப்பு களுக்கு ஒரு முடிவு கட்டி விட்டார்கள். அமெரிக்காவில் மருத்துவர் கழகமும், பள்ளி ஆசிரியர் கழகமும், தொழி லாளர் சங்கங்களும் மகத்தான வலிமை பெற்று, தமது சக்தியை நல்ல திசையில் திருப்பி ஆட்சிக்கு உதவியும் திருத்தியும் நெறிப்படுத்துகின்றன.

## 21. நமக்குத் தெரியாத நம் சக்தி!

ஒரு சமயம் ஒரு பல்கலைக்கழகப் பேராசிரியருடன் பேசிக் கொண்டிருந்தேன். அவர் பொருளாதாரப் பேராசிரியர். மிக்கப் படித்தவர். அவர்பால் எனக்குப் பெருமதிப்பு உண்டு. "நாட்டின் முக்கியப் பிரச்சனை வேலையில்லாப் பிரச்சனை; இளைஞர் பிரச்சனை. இதைத் தீர்க்க முதலில் ஒரு வழி வகுக்கவேண்டும். அவர்களை நாட்டு முன்னேற்றத்திற்குப் பொருளாதார உற்பத்திக்குப் பயன்படுத்த வேண்டும்" என்று புள்ளி விவரங் களுடன் தெளிவாகக் கூறினார். நான் கூறினேன்: "ஐயா! நீங்கள் தனியே ஒரு திட்டமெழுதி நாட்டுத் தலைவருக்கு அனுப்ப வேண்டாம். ஏதோ நீங்கள் சுயலாபம் தேடிப்போனதாக—எழுதியிருப்பதாக— நினைக்கக்கூடும். நீங்களோ கல்லூரிப் பேராசிரியர்கள் சங்கத்தில் மிகவும் செல்வாக்குள்ளவர். ஏன் உங்கள் சங்கச்சார்பில் அப்படி ஒரு திட்டத்தைச் சமர்ப்பிக்கக் கூடாது?" என்றேன்.

அவர் சிரித்தார். பின் கூறினார்: "நான் கொடுத் தாலும்சரி எங்கள் சங்கத்தின் சார்பில் கொடுத்தாலும் சரி, எல்லாவற்றிற்கும் ஒரே கதிதான்! என்று சொல்லிக் கலகலவெனச் சிரித்தார். குப்பைத் தொட்டிப்பக்கம் கையைக் காட்டினார். "எவன் படித்தவனை உபயோகிக் கிறான். படித்தவர்கள், விஷயம் தெரிந்தவர்கள், இதிலே ஆராய்ச்சி செய்தவர்கள் பல்கலைக்கழகங்களிலே இருக்

கிறுர்கள். அவர்களைப் பயன் படுத்தவேண்டும் என்ற உணர்வே இல்லாதபோது, நாம் சொல்லி என்ன கேட்கப் போகிறுர்கள்...?சொல்வதும் ஒன்றுதான். சொல்லாததும் ஒன்றுதான். அரசியல் வாதியும், அதிகாரியும் ஏதோ செய்கிறுர்கள். காலம் போகிறது. விட்டுத் தள்ளுங் கள்!" என்றுர் விரக்தியுடன்.

எனக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. சோகம், கோபம், செய்ய முடியாத இயலாமையின் அவலம் எல்லாம் என்னை ஆட்கொண்டது. அந்த உணர்வுகள் அங்கிருந்த எல்லார் மனத்திலும் நிரம்பி வழிந்து நாங்கள் உட்கார்ந் திருந்த ஹாலை நிறைத்திருந்தது.

அதேபோல் சில தொழிலதிபர்களுடன் பேசிக் கொண்டிருந்தேன். "நாட்டுக்குத் தேவையான சில நல்ல திட்டங்களை எடுத்துக் கொண்டு பெரியவரிடம் போகக் கூடாதா...?" என்றேன். "பெரியவரா...? சிறியவர்கள்! நாட்டுக்கான திட்டம் கொண்டு போனுல், அதில் இவனுக்கென்ன அக்கறை...? அதில் இவன் எவ்வளவு பணம் பண்ணத் திட்டமிடுகிறுன்...? கட்சிக்கு எவ்வளவு இவன் தருவான்...?' என்று எதிர்பார்க் கிறுர்கள். நாடு, வளர்ச்சி, உற்பத்திப் பெருக்கம் என்று தொழிலதிபர்களைக் கூட்டி ஒரு மாநாடு, ஒரு ஆலோசனை —ஒரு திட்டம் ஒன்றும் கிடையாது. ஏதோ நாடு ஓடிக் கொண்டிருக்கிறது. இருக்கிற 'பிசினஸை' வைத்துக் கொண்டு, காலத்தை ஓட்டினுலே போதுமென்றிருக் கிறது. விட்டுத் தள்ளுங்கள்... குப்பை!"...என்றுர் அவர்.

ஒரு நாட்டின் மூலதனம் அந்நாட்டின் மக்கள்; அதுவும் அந்நாட்டின் மேல்மட்டத்து மக்கள்; அறிவும் திறமையும் அனுபவமும் பயிற்சியும் பெற்ற மக்கள். அவர்களிடத்திலேயே இப்படி ஓர் அவநம்பிக்கை, ஓர்

இயலாமை, ஒரு விரக்தி எழுகிறது என்ருல் அடுத்த தலைமுறைக்கு நாடு எங்கே போகும்...என்று சொல்லச் சோதிடன் தேவை இல்லை. எந்நாட்டு மேல் மட்ட மக்கள் தன்னம்பிக்கை இழந்து ''நான் என்ன செய்ய முடியும்...? எங்கள் சங்க அமைப்புக்கள் என்ன செய்ய முடியும்?'' என்று கையாலாகாத்தனத்திஞல் கையை விரிக்கிருர்களோ அது, நாட்டிற்குக் கெடுதல். நாட்டின் எதிர்காலத்திற்கு நல்லதன்று.

தன்னம்பிக்கையை இழந்த சமுதாயம் எதையும் சாதிக்கப் போவதில்லை. எந்தச் சமுதாயம் ''என் எதிர் காலம் என் கையிலில்லை.'' என்று கூறுபவர்களால் நிறைந் திருக்கிறதோ அந்தச் சமுதாயத்தின் எதிர்காலம் இருளடைந்தது என்று சமுதாயஇயல் பேராசிரியர்கள் அபிப்பிராயப்படுகிருர்கள்.

ஏதோ குறிப்பிட்ட ஆளுங்கட்சியை நான் குற்றஞ் சாட்டுவதாக யாரும் நினைக்க வேண்டாம். அது என் நோக்கமன்று. பல ஆண்டுகாலமாகவே இப்படியோர் நிலை நாட்டில் நிலவுகிறது. இது மாறுவதற்குப் பதில், மேலும் மேலும் அதே திசையில் கனிந்து கொண்டு வருகிறது.

ஆட்சியிலுள்ளோரும் சரி, ஆட்சியில் இல்லாதவர் களும் சரி, பொதுமக்களும் சரி, படித்துவிட்டு மேல் மட்டத்தில் பணியாற்றுபவர்களும் சரி, ''இது நாட்டுக்கு நல்லதா?'' என்று சிந்திக்க வேண்டும். உண்மையை ஒத்துக்கொள்ளவேண்டும். பிரச்சனை இதுதான் என்று ஏற்றுக்கொள்ள வேண்டும். வியாதி இல்லை என்று வாதாடுபவன்—எண்ணிக் கொண்டிருப்பவன்—நோய்க்கு மருந்து தேடமாட்டான்; நோயிருந்தாலும், நோயில்லை என்று பிறரை நம்பவைக்க முயல்பவன்—மருத்துவரின்

யோசனையை அணுக மாட்டான். நாம் நம் நோயைப் புரிந்து கொள்ளவேண்டும்.

போராட்டங்கள் ஆட்சியாளரின் சக்தியை வடிப்பவை. திசை திருப்புபவை என்று எண்ணுபவன் நான். சில சமயமோ, போராட்டம் இல்லாமல் ஆட்சியாளர்களின் கவனத்தைக் கவரமுடியாது போலிருக்கிறது. காமராஜ் அழுகும் பொருளுக்கு விற்பனைவரி விதித்தார். கொத்தவால் சாவடிக்காரரர்களும், காய்கறிக் கூடைக்காரர்களும் போராட்டம் நடத்திய பின்தான் அழுகும் பொருளுக்கு விற்பனைவரி விதிப்பது தவறு என்று புரிய வந்தது.

பெரும்பாலான படித்த மக்கள், விஷயம் தெரிந்த மக்கள் திறமை சாலிகள்—இவர்களது பல்வேறு சங்கத் தொகை (என். ஜி. ஓ. சங்கம், கல்லூரிப் பேராசிரியர் சங்கம், தொழிலதிபர் சங்கம், வழக்கறிஞர்கள் சங்கம், மருத்துவர் சங்கம், பொறியியலாளர்கள் சங்கம்) மொத்தத்தில் பெரிய தொகையுடையது எனினும், எண்ணிக்கை வலிமை கொண்டது எனினும், வாயிருந்தும் ஊமைகளாய், திறனிருந்தும் எடுப்பவர் கைப்பிள்ளைகளாய் இருக்கிறார்களோ என்று நான் யோசிப்பது உண்டு. மாபின்க்ராட் என்ற பெரிய ரசாயன நிறுவனத்தின் தலைவர் கேட்டார்: ''நீங்கள் வேடிக்கை பார்ப்பவர்களாக இருக்க விரும்புகிறீர்களா அல்லது மைதானத்தில் இறங்கி விளையாடுபவர்களாக இருக்க விரும்புகிறீர்களா...? விளையாட்டில் வேடிக்கை பாருங்கள். சமுதாயப் பணியில் நீங்கள் வேடிக்கை பார்ப்பவர்களாக இருக்க விரும்பினால், உங்களைவிடத் திறமை குறைந்தவர்கள்—உங்களைவிட அறிவு குறைந்தவர்கள் உங்கள் விதியை நிர்ணயிப்பார்கள். உங்கள் விதியை நிர்ணயிக்கும் சட்ட திட்டங்களை

உங்கள் மீது போட்டுக் கொண்டிருப்பார்கள். ஆகவே, வேடிக்கை பார்ப்பவர்களாயிராதீர்கள். 'சமுதாயத்தில் எனக்கும் பங்குண்டு. என் தெருவில் தண்ணீர் தேங்கிக் கொசு மொய்க்கிறது என்றால் அது என்னையும் என் குடும்ப நலத்தையும் பாதிக்கிறது. அரசாங்கம் இலவச மாகக் கண்டபடிப் பணத்தைச் செலவழிக்கும்போது என் வரி அதிகமாகிறது; நான் வாங்கும் பொருளின் விலை அதிகமாகிறது. அரசாங்கம்—நாட்டு மக்களுக்காக இருக் கிறது. நான் இனியும் வேடிக்கை பார்ப்பவனாக இருக்கப் போவதில்லை. பங்கெடுக்கும் விளையாட்டு வீரனாக இருப் பேன்' என்று சங்கற்பித்துக் கொள்ளுங்கள்'' என்கிறார். சிந்திக்கவேண்டிய விஷயம்!

சில சமயம் நமது அமைப்பும், தேர்தல் முறையும், பழக்க வழக்கங்களும், நம்பிக்கையும் எல்லாமே மாற்றி அமைக்கப்படவேண்டும். தூக்கி எறியப்படவேண்டும் என்று எண்ணுவதுண்டு. மற்றவை எல்லாம் பிளாஸ்திரி— ஒட்டுப் போடும் வேலைதானே என்று யோசிப்பதுண்டு.

இதே போன்ற வேகமும், விரக்தியும் நம் நாட்டில் பலருக்கும், இளைஞர்களுக்கும் எழாமல் இல்லை. நம் செயலற்ற தன்மையைப் பற்றி எண்ணும்போதெல்லாம் நான் படித்த கதை ஒன்று என் நினைவுக்கு வரும்.

தாத்தா பேரனை முதன் முறையாக யானையைக் காட்ட அழைத்துப்போகிறார். சிறுவனுக்கு ஒரே வியப்பு, 'இத்தனை பெரிய மிருகமா...?' என்று.

கேட்கிறான் சிறுவன்: ''இத்தனை பெரிய யானையை எப்படித் தாத்தா இந்தச் சின்ன மனிதன் அடக்கி ஆள் கிறான்...? சொன்னபடி கேட்கச் செய்கிறான்...?'' தாத்தா, ''குழந்தாய் யானைக்குத் தன் பலம் தெரியாது; தெரிந்

திருந்தால் அவனைத் துவம்சம் செய்திருக்கும்'' என்று சொல்லிச் சிரிக்கிறார்.

நம் சமுதாயத்தின் பெரிய பகுதியினர்—அறிவாளிகள், திறமைசாலிகள் தங்கள் சக்தியறியாது அந்த யானை போலத்தான் நிற்கிறார்கள்.

## 22. நம்மைப் பிரதிபலிக்கும் தலைமை

இரண்டு வழிகளில் ஒரு சமுதாயத்தில் மாற்றம் ஏற்படலாம். ஒரு உதாரண புருஷன் நமக்கு எடுத்துக் காட்டாக வாழ்வதன் மூலம்—மேலேயிருந்து சத்திய நெறிகளும்—உயர் குணங்களும்—பண்புகளும் எல்லா மக்களையும் தொடலாம். மகாத்மா காந்தி வாழ்ந்த காலத்தில் அப்படி ஒரு பண்பு மலர்ந்து பரவியிருந்தது. அவரை எதிர்த்தவர்கள்கூட அவரை ஏற்றுக் கொள்ளாத வர்கள்கூட ஒரு கண்ணியத்தால் உந்தப்பட்டார்கள். உயர்ந்த நிலையிலிருந்து நடந்து கொண்டார்கள். ஒரு பிணக்கு ஏற்பட்டால் அதில் தானும் உயர்ந்து நின்று, எதிரியையும் உயர்த்தி இதன்மூலம் எதிரியின் உயர்குணங் களை வெளிவரச் செய்து, எதிரியை நண்பனாக்கி வழக்கைத் தீர்ப்பதுதான் காந்தியின் வழக்கம்.

''ஒரு கொள்கைப் போராட்டத்தில் எதிரியை உயர்த்தும் ஒரு அசாதாரணப் பண்பு—பெருந்தன்மை இருக்கிறதே, அது இதுவரை சரித்திரம் காணாதது'' என்று எழுதுகிறார் ஹார்வட் பல்கலைக்கழக மனோதத்துவப் பேராசிரியர் டாக்டர் எரிக் எரிக்சன். 'காந்தியின் உண்மை' என்ற எரிக்சனின் நூல் 'புலிட்சர்' பரிசு பெற்றது. ஜனாதிபதியின் வெள்ளை மாளிகையில் உள்ள புத்தகச் சாலையில் இடம்பெறும் ஒரு சில புத்தகங்களுள் ஒன்றாக முக்கியத்துவம் பெற்றது.

பெருந்தன்மையான குணங்களால் மனிதன் தொடப் படும் போது, சாதாரண மனிதன் தேவனாகிறான். மனித வாழ்க்கையே 'தேவனாகும்' முயற்சிதான். தேவனாகும் முயற்சிக்கு வாழ்க்கை ஒரு சாதனம். தேவனாகும் முயற் சிக்காக வாழ்க்கை நமக்கு அருளப்பட்டிருக்கிறது. இதை எல்லாம் உணராமல் நம்மையும், பிறரையும் கேவலமாக்கிச் சிறுமைப்படுத்தி வாழ்வதில் யாருக்குப் பிரயோஜனம் நாம், நம் வாழ்க்கையைப் பாழ்படுத்து கிறோம் என்றுதான் அர்த்தம். கையில் அமுதசுரபியை நம் அன்னை அளிக்கும்போது அதைத் தூக்கிச் சாக்கடையிலா எறிவார்கள்? நாம் நமக்கும், பிறருக்குமாக அன்பு காட்டி, உதவி செய்து நம் வாழ்க்கையையும் பிறர் வாழ்க்கையையும் மலர்விக்க வேண்டாமா? அது அல்லவா நல்லவன் பொறுப்பு? படித்தவன் கடமை?

ஓர் எடுத்துக்காட்டான வாழ்க்கை வாழ்ந்து நம்மை எல்லாம் உயர்த்தியவர்—நம் உள்ளங்களைத் தூய்மைப் படுத்தியவர்தான் மகாத்மா காந்தி. இதன் விளைவாக அவர் கால்பட்ட இடங்களெல்லாம் உயர் பண்புகள் ஒளிர்ந்தன. மனிதனுக்கு மனிதன் காட்டும் அன்பும், மரியாதையும் அதிகமாயின. இப்படி மேலேயிருந்து—தலைமையிலிருந்து நெறிகளை—கொள்கைகளைப் பரப்புவது ஒரு வழி.

மற்றொருவழி தலைவனிடமிருந்து வருவதற்கு மாறாக மக்களிடமிருந்து—அடித்தளத்திலிருந்து—மக்கள் பண்பாட்டிலிருந்து கிளம்பும் ஒரு செயல். உதாரணமாக அமெரிக்காவை எடுத்துக்கொள்ளுங்கள். நான்காண்டு களுக்கு ஒருமுறை இங்குத் தேர்தல் வருகிறது. அப்போது தேர்தலுக்கு நிற்பவர்கள் தனது கொள்கைகளைப் பற்றிப் பேசாது எதிரியின் குணங்களை இழித்துக் கூறுவதில்லை.

காரணம் அப்படிப்பட்ட மனிதனைத் தலைவனாக அமெரிக்கச் சமுதாயம் ஏற்றுக்கொள்வதில்லை. அவனுக்கு ஓட்டுப் போடமாட்டார்கள். இது நன்றாகத் தெரியும், தேர்தலில் நிற்கும் அரசியல் தலைவர்களுக்கு.

சமீபத்தில் ஈரானில் சிறைப்படுத்தப் பட்டிருக்கும் அமெரிக்கத் தூதர்களை விடுவிக்கும் முயற்சியில் ஜனாதிபதி கார்ட்டர் ரகசியப்படை ஒன்றை இரவோடு இரவாக அனுப்பினார். அவர் முயற்சி தோற்றது. ஏப்ரல் மாதம் 25-ஆம் தேதி காலையில் 6 மணிக்கு ஜனாதிபதி தன் முயற்சி தோற்றுப் போனதைப்பற்றி நாட்டிற்கு அறிவித்தார்.

''ரகசியப்படையை அனுப்பியது சரியா, அவர்களால் கைதிகளை விடுவித்திருக்க முடியுமா, சரிவர கார்ட்டர் திட்டமிட்டாரா, இதனால் எட்டு அமெரிக்கப் போர்ப்படையினர் இறந்து போனதற்கு யார்காரணம்'' என்ற சந்தேகங்கள் எல்லாம் எல்லார் மனத்திலும் இருந்தன. எனினும் செய்தியைக் கேட்டு விமரிசித்த ஒவ்வொருவரும் —தேர்தலுக்கு நிற்கும் ஒவ்வொரு தலைவரும் கார்ட்டர் செய்தது தவறு என்று கூறவில்லை.

எல்லாரும் ஜனாதிபதி செய்தது சரி, அவருக்குத்தான் உண்மை நிலை தெரியும். முடிவெடுக்க வேண்டிய பொறுப்பு ஜனாதிபதியினுடையதுதான் என்று ஏகோபித்துக் கூறினார்கள். யாரும் இதைத் தங்களது அரசியல் நோக்கத்திற்குப் பயன்படுத்தவில்லை.

தமிழ்நாட்டிலிருந்து சென்ற எனக்கு அவர்களது செய்கை வியப்பைத் தந்தது; பெருமையாய் இருந்தது.

ஏன் அந்த அமெரிக்க அரசியல்வாதிகள் இதைச் சரியான வாய்ப்பாக எடுத்துக் கொண்டு தங்கள் அரசியல் நோக்கிற்குப் பயன்படுத்திக் கொள்ளவில்லை? அது அவர்களுக்கே தெரியும்.

வீடுபற்றி எரியும்போது, பீடி சுருட்டுக்கு நெருப்புக் கேட்பவனை நாடும், மக்களும் தூக்கி எறிந்துவிடுவார்கள் என்பது அவர்களுக்குத் தெரியும். அப்படி ஒரு பாரம் பரியம், கலாசாரம் அங்கே உருவாகி நிலவி வருகிறது; கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. ஆகவே, தப்புத்தண்டா வாகப் பேசவோ, செய்யவோ அரசியல்வாதிகள் பயப்படு வார்கள். இங்கே மக்களின் அபிப்ராயம் அரசியல் வாதியைத் தூய்மையானவனாக இருக்கும்படி நெருக்கு கிறது. இங்கே மக்களது நேர்மை அரசியல்வாதியை நேர்மையாளனாக நடந்து கொள்ளும்படி கட்டாயப் படுத்துகிறது. இந்தக் கட்சிகளுடன் நமது ஊரில் நடக்கும் அரசியல் கேவலங்களை ஒப்பிடுங்கள். நேற்று ஒரு கட்சியில் இருந்து விட்டு இன்று மற்றொரு கட்சிக்கு மாறிப்போய் பேசுபவனை நாம் மாலைபோட்டு மரியாதை செய்கிறோம். 'நட்பு என்பது என்ன, கல்வி என்பது என்ன, பண் புடைமை என்பது என்ன என்பதைப் பற்றியெல்லாம் திருவள்ளுவர் கூறியிருக்கிறார், என்று பெருமைப்படும் நம் ஊரில், நேற்றுத் தன்னுடன் கூடி வாழ்ந்தவனை இன்று சாடிப் பேசுவதை நாம் சகித்துக் கொள்கிறோம்.

இங்கோ நகைப்பார்கள்! 'மகா யோக்கியன்!' என்று காறித் துப்புவார்கள். ஜனாதிபதி நிக்சன் காலத்தில் கட்சி மாறிய ஜான் கானலி என்ற வலிமைபடைத்த தலைவரை, மீண்டும் அவர் ஜனாதிபதி பதவிக்கு நின்றபோது, 'நாணயமில்லாதவன்' என்று தூக்கி எறிந்துவிட்டார்கள். இங்கு மக்கள் மறப்பதில்லை.

கட்சி மாறும் சுபாவ முள்ளவர்களை விட்டுத் தள்ளுங்கள். அவர்களை வரவேற்பவர்கள், எந்த விதத்தில் இந்த மனிதன் இதே போல நாளை நம்மைத் தூற்ற மாட்டான், காலை வாரிவிடமாட்டான், என்று நம்ப

முடியும்? எனினும் நம்புகிறார்கள்! ஏன்? ஏதோ கிடைத்த வரை ஆதாயம்; நமக்குப்பதிலாக எதிரியைத் திட்டட்டும் என்று எண்ணுகிறார்கள்.

நமது சொந்த வாழ்க்கையில் நமக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த ஆசிரியரையோ, நமக்கு உதவிய நண்பனையோ, நமக்கு வழிகாட்டிய ஒரு பெரியவரையோ நாம் இப்படி முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவோமா? மாட்டோம். அது வாழும் பண்பாடன்று.

என்று நாம் இவர்களை மனிதர்களிலும் கீழானவர்களாக மதிக்கிறோமோ, நடத்துகிறோமோ அன்றுதான் அரசியலில் நல்ல நெறிகள் தோன்றும். உயர்ந்த பாரம்பரியம் தோன்றும். "மக்கள் கண்டு கொள்வார்கள், இது துரோகம் என்று" என்ற பயம் இருக்கும்போதுதான் நமது அரசியல் வாழ்வு தூய்மைப்படும்.

கட்சி மாறிகளை ஒரு உதாரணத்திற்குச் சொன்னேன். அரசியலில் பொய் பேசுபவர்களும், சமயத்திற்கேற்றாற் போலக் கொள்கைகளை மாற்றிக் கொள்பவர்களும், கொள்கை ஏதுமில்லாது பதவி நோக்கி அலைபவர்களும், சுயபெருமை பேசுபவர்களும், அதிகாரத்தின் அடிவருடிகளும்—எல்லாம் ஒரே இனம்தான்.

அவர்கள் மைனாரிட்டி—சிறுபான்மையோர். பொது மக்களாகிய நாம்தான் மெஜாரிட்டி—பெரும்பான்மையோர். பொதுமக்களாகிய நாம் ஆலமரம். அதில் சில நச்சுருவிகள் நம் உழைப்பால்—நம் கண்ணியத்திற்கு மாசு ஏற்படும் வகையில்—நம்மிடையே வாழ நாம் அனுமதிக்கக் கூடாது.

## 23. அச்சமும், மடமையும், பெண்களும்...

'அச்சமும் மடமையும் நீங்கிய பெண்கள்—
அறிவுடைத் தமிழ்நாட்டின் கண்கள்'.

—பாரதிதாசன்

நமது ஊரில் பெண்களைத் தன்னம்பிக்கை இழக்கு மாறு செய்து வளர்த்து விட்டோம். நம் நாட்டுப் பெண் களின் நிலைமைக்கு முழுக்காரணம் நமது சமுதாயப் பழக்கவழக்கங்கள். சமுதாயப் பழக்கவழக்கங்களின் ஆரம்ப நோக்கம் ஆண்களின் சுயநலம்.

'நல்ல விலை கொண்டு நாயை விற்பார்,
அந்த நாயிடம் யோசனை கேட்பதுண்டோ...?'

என்று சாடுகிறார் பாரதி, நாம் நம் பெண்களைத் திருமணம் செய்து கொடுக்கும் முறையை.

உடலியற்கை அளவில் ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபாடுகள் உள்ளன என்ற ஒரு கோட்பாட்டை மனித சமுதாயம் பெரிதாக்கி, பெண்களை ஒரு பொருளாக (property) கீழாக (informal) நடத்தி வந்திருக்கிறது காலங் காலமாக. (நிலைமை படித்த மக்களிடை மாறிவருகிறது என்பது உண்மை. எனினும் 85% மக்கள் கிராமத்தில் வாழும்போது அங்குள்ள நிலைமையினை எண்ணிப் பாருங்கள்.)

ஒரு சின்ன உதாரணத்தைப் பாருங்கள்.

'பெண்கள் சிரித்தால் போயிற்று!' என்பது நம் பழமொழி. இடமில்லாத இடத்தில் ஆண்கள் சிரித்தாலும் 'போயிற்று' தான். அது பொருத்தமில்லாததாக, அடக்க மில்லாததாக அமையும். ஆனல், நம் பழமொழி என்ன சொல்கிறது..? பெண்கள் சிரித்தால் போய்விட்டது! ஏன் ஓர் ஆண் மனந்திறந்து ஒரு ஹாஸ்யத்தை ரசிக்குமளவுக்குப் பெண்கள் சிரித்து ரசிக்கக் கூடாதா? நமது சம்பிரதாய வாதிகள் 'அடக்கம் ஓர் அழகு' என்ற பொருளில் சொல்லியிருக்கிறார்கள் என நமக்குச் சமாதானம் தரக்கூடும். இத்துடன் 'அச்சம்', 'மடம்' பற்றி பெண்களிடம் நம் சமுதாயம் என்ன எதிர்பார்க் கிறது என்பதையும் கூட்டிக்கொள்ளுங்கள்.

'பெண்கள் இவ்வளவுதான் சிரிக்க வேண்டும்; அதற்கு மேல் சிரித்தால் அடக்கமற்றவள்' என்று நிர்ணயித்து, அதற்கேற்றபடி பெண்களை உருவாக்கும் ஒரு சமூகத்தை என்னவென்று சொல்வது? இதெல்லாம் நாமாக ஏற்படுத்திக் கொண்ட போலி அளவுகோல்கள் (Standards). இன்னும் மேனுட்டில் பெண்கள் ஆண் களுக்குச் சமமாகச் சிரிக்கக்கூடாது என்ற வழக்கத்தை நான் கேட்டதில்லை.

இதனுல் என்ன நேர்கிறது...? நேற்று வரை, ஒரு பையனும் பெண்ணுமாக, சகோதர சகோதரிகளாய் வளர்ந்து வந்தவர்களை நாம் பாலுணர்வு காட்டிப் பிரிக் கிறோம். 'நீ இதெல்லாம் செய்யக் கூடாது என்று பெண்ணைப் பின் தள்ளி வைக்கிறோம். இப்படி லேசாக ஆரம்பித்து, ஒரு பெண்ணின் தன்னம்பிக்கையைச் சமுதாயச் சம்பிரதாயங்களால் கொஞ்சங் கொஞ்சமாகப் பாழ்படுத்துகிறோம்.

நமது சமுதாயத்தில் ஆணுக்கிருக்கிற வாய்ப்புப் பெண்ணுக்கு இல்லை. குழந்தை குட்டிகளைப் பெற்று

வாழும் ஒரு முப்பது வயது பெண்மணி திடீரென சம்பாதிக்கும் தன் கணவனை இழக்க நேரிடுகிறது என்றால், அந்தக் குடும்பம் தெருவில் நிற்க வேண்டிய கதிக்கு வந்து விடுகிறது. அதைப் பார்க்கச் சகிக்காமல்தானே என்னவோ அவர்களை உடன்கட்டை ஏற்றினோம்? இன்று அவர்கள் வயதேறிய பெற்றோர்களின் அரவணைப்பிலோ, அண்ணன், தம்பிகளின் ஆதரவிலோ வாழவேண்டிய நிலை. தன் காலிலேயே நிற்க வேண்டிய வழிமுறைகளையோ வாய்ப்புகளையோ நாம் அளிக்கவில்லை; சமுதாயம் அளிக்கவில்லை.

நான் சொல்ல விரும்புவது; தன்னம்பிக்கை கொடுக்காமல், 'ஒரு பெண் இப்படித்தான் இருக்கவேண்டும்' என்ற சம்பிரதாயப் போக்கில்—ஆண் கண்ணோட்டத்தில் நமது பெண்கள் பெரும்பாலானவர்கள் வளர்க்கப்படுகிறார்கள்.

"ஒரு பெண்ணையும், ஒரு பையனையும் நாம் இரண்டு விதமாக வளர்ப்பது சரியல்ல, நியாயமல்ல. நம் வருங்காலச் சமுதாயத்திற்கே கேடு செய்கிறோம். அதனால் தான், பயம் ஒரு தாய் தரும் நோய் என்று சில மனோ தத்துவப் பேராசிரியர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள்.

நமது இலக்கியமோ, 'சீறிவந்த புலியதனை முறத்தினாலே சிங்கார மறத்தி ஒருத்தி துரத்தினாளே!' என்று பாடுகிறது. நடைமுறையோ, 'வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போம் என்ற வழக்கமடா உன் வழக்கம்' என்று சாடுகிறார் பாரதி. 'காதலென்றால் இலக்கியத்தில் மகிழ்வார், மற்ற அதுவே வீட்டோரத்தில்—கொல்லைக் கிணற்றங்கரையில் வந்துவிட்டதென்றால் வெகுள்வார்!' இதுவும் நம் வழக்கம்தான். நம் சமுதாயத்திற்கு இரட்டைநாக்கு!

நமக்கு வேண்டிய காரியங்களுக்காகவும், நம்மைப் பாதிக்காத காரியங்களுக்காகவும், பெண்ணைப் போற்று வதும் நடைமுறையில், பெண்ணை நாலடி பின் தள்ளி நடக்கச் சொல்வதும் பெரும் சமுதாயப் புரட்டு!

குழந்தைகளை வளர்க்கும் பெரிய பொறுப்பு தாயிடம் இருப்பதால், ஒரு பெண்ணின் உள்ளத்தைத் தன்னம் பிக்கையாலும்—தைரியத் தாலும்—பெருமிதத்தாலும் நிறைக்காதவரை, வருகின்ற புதுச் சமுதாயம் ஒன்றும் பெரிதாகச் சாதித்துவிடப் போவதில்லை.

வீட்டில் விதை நட்டுப் பாத்தி கட்டினீர்களானால், சின்னச்செடியாய் இருக்கும்போது அதற்குச் சரியான போஷாக்கு அளிக்கப்படாமல் அது நரங்கிப் போய் விட்டால், பெரியதாய்ப் போனபின் என்ன ஊட்டம் கொடுத்தாலும் அதை மாற்றுவது கஷ்டம்.

வெறும் மரவள்ளிக்கிழங்கையே பெரிதும் நம்பி வளரும் ஆப்பிரிக்க குழந்தைகளுக்கு, போதுமான புரதம் இல்லாமல், மூளை வளர்ச்சி குன்றுவதாக விஞ்ஞானிகள் கண்டிருக்கிறார்கள். அதேபோல, சின்னவயதில் தாய் தன் குழந்தையை வளர்க்கும் விதமும் அனுபவமாக மூளையில் பதிகிறது. "பெரும்பாலான தலைவர்கள் தலைமைப் பதவியில் நடந்து கொள்ளும் விதம், அவர்கள் இளம் வயதில் எப்படி வளர்க்கப்பட்டார்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது" என்கிறார் டாக்டர் பேபர் என்ற அரசியல் பேராசிரியர்.

ஊட்டம் என்பது உணவு மூலம் மட்டுமே ஏற்படு வதன்று. நாம் அளிக்கும் தன்னம்பிக்கை, தைரியம்—இதன் மூலம் குழந்தை பெறும் நிறைவு, மகிழ்ச்சி—இவை குழந்தையின் எதிர்கால வாழ்விற்குப் பெரிதும் காரண மாக இருக்கிறது.

சமூகத் தொண்டு புரியும் திருமதி. ஜெயா அருணசலம் நம் சமுதாயத்தில் இன்று பெண்கள் இருக்கும் நிலே பற்றிக் குமுறியிருந்தார், திருமதி. சிவசங்கரிக்கு அளித்த பேட்டி ஒன்றில். அதற்குப் பதிலாக வெளிவந்த கடிதங்கள் என்னைச் சற்று அயரவைத்தன.

ஒரு பெண்ணேயும், ஓர் ஆணேயும் நம் குழந்தைகளாக வளர்க்கிறேமென்ருல், நம் சமுதாயத்தில் ஆணுக்கிருக்கும் பாதுகாப்புப் பெண்ணுக்கு இல்லே. அதுதான் இன்றைய நிலே. அவர் கூறியிருப்பது அதிர்ச்சி வைத்தியம்... நாடு இதே கதியில் ஆண்களுக்கொரு நியாயம்; பெண்களுக்கொரு நியாயம் என்று வெகுநாள் போய்க்கொண்டிருக்க முடியாது. நமது பழக்கவழக்கங்களும், நமது பாரம்பரியமும் சுமையாக நம்மை அழுத்துகின்றன. அதில் பெரும் சுமையை நம் பெண்கள் தலேமீது—அரசியல் வாதியின் வார்த்தையில் தாய்க்குலத்தின் மீது—ஏற்றி வைத்திருக்கிறேம்.

“படித்துப் பணம் சம்பாதிக்கும் பெண்கள் சுயமாய் சிந்தனே செய்ய மறுக்கிருர்கள். இதுதான் நம் நாட்டின் மிகப்பெரிய சாபக்கேடு” என்று அவர் கூறும்போது சுயமாய்ச் சிந்திக்கும் விஷயத்தில், “நம் நாட்டு ஆண்கள் மட்டும் என்ன வாழ்ந்தார்கள்...?” என்றுதான் கேட்கத் தோன்றுகிறது, நாடு இருக்கும் நிலேயைப் பார்க்கும் போது. தன்னம்பிக்கையின்மையும், பயமுமே நம்மை ஆட்டிப் படைக்கிறது.

சமீபத்தில் பிரெஞ்சு நாட்டில் பெரிய பிரபுவாக இருந்த ஒருவர் அமெரிக்காவில் சில ஆண்டுகள் தங்கிய பின், அமெரிக்கக் குடிமகன் ஆனுர். அவரைப் பேட்டி கண்டார்கள். அவர் கூறினுர்: “பிரெஞ்சு நாட்டின் பிரபுத்துவமுறையும், பாரம்பரியமும் பெரும் சுமையாக

தனிமனித முன்னேற்றத்தை அழுத்துகின்றன. தனி மனித முயற்சியை ஒடுக்குகின்றன. அமெரிக்காவிலோ அத்தகைய வகுப்பு பேதம் இல்லை; மேலும், 'இப்படி இப்படி இருக்க வேண்டும்' என்று பாரம்பரியம் நிர்ப்பந் திப்பதில்லை. ஆகவே, இங்கு மனிதன் எதுவேண்டுமோ அதைச் செய்யலாம்; எவ்வளவு உயரம்வரை— செல்வந்தனுகப் போக விரும்புகிருனே அதுவரை இங்குப் போகலாம். 'யாரும் எதுவரை வேண்டுமானுலும் போக முடியும்' என்ற ஒரு சமுதாய அமைப்பு—சுதந்தர—விலங் கற்றதன்மை—இருக்கிறதே அதில் நம் குழந்தைகள் வளர வேண்டும் என்று எண்ணித்தான் நான் அமெரிக்கக் குடிமகனுனேன்'' என்ருர்.

பிரெஞ்சு நாட்டையே இன்னும் வகுப்பு பேதமும் பாரம்பரியமும் அழுத்துகிறது என்ருல் நம் நாட்டைப் பற்றிச் சொல்ல வேண்டாம். இங்கோ, நாம் உணர முடியாத அளவுக்கு ஆழ்ந்து போய், 'இருளும் ஒரு பெருமை' என எண்ணி வாழ்ந்து வருகிருேம்.

இந்தநிலை ஒரே நாளில் உடனடியாக மாறிவிடக் கூடியதன்று. பாரதியார் கோபமாகக் கூறுகிருர்.

> ''பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
> பேணி வளர்த்திடும் ஈசன்;
>
> மண்ணுக்குள்ளே சில மூடர்—நல்ல
> மாதர் அறிவைக் கெடுத்தார்.''

மாதர்களின் தன்னம்பிக்கையை நாம் கெடுத்து விட்டோம்; அவர்கள் தைரியத்தைக் குலைத்து விட்டோம். மாதர்களே இதை உணராதவரை, 'தாய்க்குலமே' தாய்மார்களே!' என்று கூறி, சமுதாயம் அவர்கள் தலையில் மிளகாய் அரைத்துக் கொண்டுதானிருக்கும்.

# 24. ஒரு பெண்—ஒரு பையன் நமது வளர்ப்பு முறை! - 1

தெருவில் வருகிறோம். பெரிய சினிமா போஸ்டர்கள் கண்ணில் தென்படுகின்றன. எல்லாம் பெண்கள்! நீச்சல் உடையில்! ஆதிவாசிப் பாணியில்...அங்கே பெண்மையை வியாபாரம் செய்கிறார்கள். பெண்ணின் பார்வை, பெண்ணின் கவர்ச்சி இவைதான் செல்லுபடியாகும் பொருள். இதைப் பார்க்கும் பெண்ணும் இப்படித்தான் இருக்கவேண்டும் போலும் என்ற எண்ணத்தை மறைமுக மாக ஏற்றுக் கொள்கிறாள். பெண்ணைப் பார்க்கும் ஆணும், வெறும் கவர்ச்சிப் பொருளாகவே பெண்ணை நோக்கக் கற்றுக் கொள்கிறான்.

பீடாக் கடையில் பத்திரிகை வாங்குகிறோம். அங்கே பத்திரிகை மேலட்டையில் படுத்த போஸில் ஒரு பெண். புதிய இதழ் இதோ தொடங்குகிறது. அதை நம் புகைப் படக்காரர் (கொஞ்சம் தூக்க மயக்கம்...பெண்மை மயக்கம் கொண்டவர்) எப்படி எடுத்திருக்கிறார்...? "அம்மா, கொஞ்சம் கையை உயரத் தூக்கினாற்போல நில்லுங்கள். கை உயரமாட்டேன் என்கிறதா...? கையில் சரவிளக்கொன்று தருகிறேன். அதைத் தூக்கிப் பிடித் தாற்போல ஒரு பாவனை! அப்போதுதான் கொஞ்சம் மார்பு எடுப்பாகத் தெரியும்!" 'கிளிக்!'

பெண்மை ஒரு விற்பனைப் பொருள்; இது ஒரு படித்த வியாபாரம். "அதைத்தான் மக்கள் விரும்புகிறார்கள் என்றால் அதை அளிப்பதில் என்ன தவறு...?" என்றொரு வாதம். பெண் ஒரு போகப் பொருள். இது ஒரு செக்ஸ் வியாபாரம்.

சரி, பம்பாய்க்குப் போகிறோம். அங்கே ஒரு பெரிய தெரு—கிராண்ட் தெரு. வரிசையாகப் பெண்கள் பன்னிரண்டு வயதிலிருந்து 65 வயதுவரை, விபசாரிகள் வசிக்கும் தெரு அது. "இதேபோல் ஆண்களை வரிசையாக நிறுத்திவைத்து, வியாபாரம் செய்யும் தெரு எங்கிருக்கிறது...?" என்று கேட்கிறோம். அப்படி ஒன்றில்லை என்று பதில் கிடைக்கிறது. பெண் ஒரு பொருள்; விற்பனை செய்யக்கூடிய பொருள். ஆண் அப்படியல்ல, நாம் சற்றுச் சிந்திக்க வேண்டும்.

"என் பெண்ணுக்குப் படிப்பு வரவில்லை, அதற்குத்தான் உங்களிடம் என் பெண்ணை அழைத்து வந்தேன்" என்றார் ஒரு தந்தை, கலாக்ஷேத்ரம் ருக்மணி அருண்டேலிடம். திருமதி ருக்மணி வெகுண்டார். "என்ன இது, கலாக்ஷேத்ரம் மண்டுகளின் புகலிடமா...? இல்லை. மண்டுவாயிருந்தால் நாட்டியம் வரும் நன்றாக, என்ற எண்ணம் எப்படி வந்தது உங்களுக்கு...?"—கேட்கிறார் திருமதி. ருக்மணி.

இவ்வளவு படித்த அமெரிக்காவில் கூட, ஓர் அழகு நிறைந்த பெண் நடிகையாயிருந்தால், "என்ன ஆச்சரியம்! நீங்கள் இவ்வளவு புத்திசாலியாய் இருக்கிறீர்களே... அழகாயிருப்பவர்கள், புத்திசாலித்தனத்தில் அதிகக் கவனம் செலுத்த மாட்டார்கள் என்று எண்ணினேன்!" என்று பேட்டி காண்பவர் கூறக் கேட்டிருக்

கிறேன். பெரிய நல்ல விளையாட்டு வீரர்களைப் பார்த்து, 'நீங்கள் இவ்வளவு புத்திசாலிகளாய் இருக்கிறீர்களே!' என்று யாரும் ஆச்சரியம் தெரிவிப்பதில்லை. மாறாக ஒரு நடிகையைப் பார்த்துப் பலர் தங்கள் அதிசயங்களைத் தெரிவிக்கிறார்கள்.

ஆனந்திக்கு இப்போது இரண்டு குழந்தைகள். அவை பள்ளிக்கூடம் போகின்றன. ஆகவே, ''கல்லூரியில் ஏதோ கரஸ்பாண்டென்ஸ் கோர்ஸ் சொல்லித் தருவதாகக் கேள்விப்பட்டேன். நான் படிக்கப் போகிறேன்'' என்கிறாள் ஆனந்தி. ''வேறு வேலை இல்லை. அது ஏன் உனக்கு...?'' என்கிறான் கணவன். ''மேலே படித்து என்ன உத்தியோகம் பண்ணவா போகிறாள்...?'' என்கிறார் மாமியார். அத்துடன் முடிந்தது அது.

மாறாக கணவன் அனந்தகிருஷ்ணன் இரவுப் படிப்பு எம். பி. ஏ.க்குப் படித்துவருகிறான். ''நம்முடைய திறமைகளைக் காட்டி மேலதிகாரிகளைத் திகைக்க வைக்கிறதிலே ஒரு பெரிய பெருமை இருக்கிறது. ஒரு பெரிய திருப்தி—நிறைவு'' என்கிறான் மனைவியிடம். ஆனந்தி ஆமோதிக்கிறாள். ஆனந்தியிடம் இருக்கும் திறமை, சாமர்த்தியம், அறிவு எல்லாம் வெறும் நான்கு சுவருக்குள், குடத்தில் இட்ட விளக்காய், காட்டில் மலர்ந்த ரோஜாவாய், கடலுக்கடியில் விளைந்த முத்தாய் அப்படியே கிடக்கிறது. ஒரு சிறு பகுதியைத் தன் குடும்பத்திற்கு உபயோகிக்கிறாள். அதைத்தான் செய்யலாம் அவள்.

ஆனந்தி அதுபற்றிச் சிந்தித்ததே இல்லை. ஆனந்தி! என்ன பெயர்...! பிறருக்கு ஆனந்தம் தருவதே அவள் தொழில்—அவள் வாழ்க்கை. அன்பான கணவன்; அருமையான குழந்தைகள். பின் என்ன வேண்டும்...? தன் கணவனுக்காக, தன் குடும்பத்துக்காக, தன்னை

அழித்துக் கொண்டாள்; மறைத்துக் கொண்டாள்; தன்னை அர்ப்பணித்துக் கொண்டாள்.

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்...
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்"

என்று நாவுக்கரசர் பாடுகிறார். ஆனந்தியின் வாழ்க்கையேதான் அது. உலகம் சொல்கிறது: "ஆகா ஆனந்தி! நீயே தியாக புருஷி! நீயே பாரதப் பெண்! நீயே நல்ல இந்து மனைவி!"

காட்சி முடிகிறது. சினிமாவில் ஆனந்திக்குச் சிலை கட்டி, மாலைபோட்டு வணங்குகிறார்கள்.

வாழ்க்கை வெற்றி என்பதை அளக்கும் அளவுகோல் பெண்களின் வாழ்க்கைக்கு வேறுபட்டது. பள்ளியும் கல்லூரியும் வாழ்வில் முன்னேற உதவும் சாதனங்கள் ஆணைப் பொறுத்தவரை. நல்ல லட்சணமுள்ள குடும்பப் பெண்ணாக இருப்பதுதான் பெண் வாழ்கையின் வெற்றி என்று நம் சமுதாய அளவுகோல் கூறுகிறது. இது சரிதானா, நியாயம்தானா என்று நாம் கவனிக்கவேண்டும்.

பிறர் வைத்த அளவுகோல்களை ஆனந்தி ஏற்றுக் கொண்டாள். பார்வையும், இளமையுமே அவள் ஆயுதங்கள். பணிவும், தியாகமுமே அவளது வெற்றியின் உறைகற்கள்.

ஆனந்திக்குத் தெரியாது, தான் என்ன இழந்தோம் என்று! எதைப் பறி கொடுத்தோம் என்பது பற்றி. 'தனக் கென வாழாப் பிறர்க்குரியாளனாக' அவள் வாழ்க்கை அமையும் போதுதான் அவள் புகழ்—சிறப்பு பெறுகிறாள்.

கறுப்பர்கள் அடிமைகளாயிருந்தபோது, அடிமைத் தனத்தை நீக்க வேண்டும் என்று போராடுபவர்கள்,

வெள்ளை முதலாளிகளிடம் இதுபற்றிப் பேசுவார்கள். வெள்ளை முதலாளிகள் தங்களிடம் வாழ்கிற கறுப்பர்களை அழைத்து, "இங்கு என்ன குறைச்சல்...?" என்று கேட்பார்கள். கறுப்பர்களோ, "எல்லாம் நன்றாகத்தான் இருக்கிறது. நாங்கள் உங்களுக்கு வேலை செய்து கொண் டிருப்பதையே பெரிய பாக்கியமாகக் கருதுகிறோம்" என் பார்கள்.

அதே கதைதான் இன்று வேறு உருவத்தில் பெண்ணினத்தின் நிலையாக இருக்கிறது.

ஒரு பெண் இதைத்தான் செய்யலாம் என்றிருக் கிறது. ஒரு பெண்ணை—திருமணம் செய்து கொள்ளும் தகுதிக்குத்தான் நாம் தயார்செய்கிறோம்...அந்தப் பணிக்குள்தான் அப் பெண்ணின் அறிவு, திறமை எல்லாம் உபயோகப்படுத்த இடம் அளித்திருக்கிறோம். வாழ்வின் பல துறைகளைக் காட்டி ஆணைப்போல் தேர்ந்தெடுக்கும் உரிமைகளை நாம் பெண்ணுக்குக் கொடுப்பதில்லை.

நீ வக்கீலாக, விமானம் ஓட்டுபவளாக வரக்கூடாது என்று யாரும் சொல்வதில்லை; அல்லது தடுப்பதில்லை. மாறாக, "நீ அப்படி வரலாம்" என்று ஓர் ஆணை ஆசைப் படுத்தி ஊக்கப்படுத்துகிறாற்போல நாம் செய்வதில்லை. குடும்பத்தாயாகவும், ஒரு வக்கீலாகவும், ஒரு பெண் இயங்க முடியாதா...? ஒரு நல்லமனைவியாகவும், மருத்துவ ராகவும் ஒரு பெண் செயலாற்ற முடியாதா...?

நம் சமுதாயம் பெண்ணின் எண்ண ஓட்டங்களை விரிவுபடுத்துவதில் அதிகம் அக்கறை காட்டுவதில்லை. 'எத்தனையோ பெண்கள் இப்போதெல்லாம் மருத்து வர்களாகவும், வழக்குரைஞர்களாகவும்தான் பயிற்சி பெறுகிறார்களே?' என்று கேட்கலாம்.

நேரு இருந்தவரை, இந்திராகாந்தி ஒரு கான்வெண்ட் பள்ளியில் படிக்கும் பெண்போலத் தயக்கமும், வெட்கமும் காட்டுகிறார்; என்று வெளிநாட்டுப் பத்திரிகை நிருபர்கள் எழுதினார்கள். பிறகுதான்—நேருவுக்குப்பின்தான், வயதாலும், அனுபவத்தாலும் சூழ்நிலையாலும் இந்திராகாந்தி தலைவரானார். பிறகுதான் நம்பிக்கையுடன் செயல்பட்டார்.

ஆணையும், பெண்ணையும் நாம் வளர்க்கும் முறை ஏற்றத்தாழ்வுள்ளதாக இருக்கிறது.

பொருளாதாரத் துறையில் முன்னேற நாம் சமசந்தர்ப்பம் அளிக்கவில்லை பெண்ணுக்கு; விஷயங்களை முடிவு பண்ணும்போதும் பெண்களை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்வதில்லை. அவர்களுக்குச் சமுதாயம் ஊக்கமளிப்பதில்லை. சுயஅறிவின், சுய திறமையின் வெளிப்பாடாகப் பெறும் நிறைவைப் பெறவிடாமல் வாழ்க்கை வாய்ப்புக்களை நெருக்கிச் சுருக்கி விடுகிறோம். இப்படித்தான் சமுதாய இயல் அறிஞர்கள் பொதுவாகப் பெண்களின் நிலைபற்றி அபிப்பிராயப்படுகிறார்கள்.

எதிராக, "குடும்பப் பாரத்திலிருந்து பெண் வெளியேறி விடவேண்டும். ஆணுக்குப் பெண் சமம் என்று பிரகடனப்படுத்த வேண்டும். தன் உரிமையை நிலைநாட்டத் தன் தலைமையை நிரூபிக்க வேண்டும்; நிர்ணயிக்க வேண்டும்" என்றெல்லாம் புரட்சிகரமாகக் கூறி குடும்ப அமைப்பை—திருமண உறவு முறையை—தூக்கி எறிந்து விடும் நோக்கில் அவர்கள் சொல்லவில்லை.

நம் பெண் குழந்தைகளை, வருங்கால‘ தாய்க்குல’த்தை நாம் தன்னம்பிக்கை ஊட்டி, சமயம் நேர்ந்தால் தன் காலிலேயே தான் நிற்கும் தைரியத்துடன் வளர்த்திருக்கிறோமா என்பதுதான் கேள்வி.

## 25. ஒரு பெண்-ஒரு பையன் நமது வளர்ப்பு முறை!-2

**நா**ன் எழுதப்போவது நமது சம்பிரதாய வாதிகளுக்குச் சற்று அதிர்ச்சியைத் தரக்கூடும். நமது பண்பாட்டிலே ஊறி வளர்ந்தவர்களுக்கு —நமது எல்லாப் பண்பாடுகளுமே உயர்ந்தவை, போற்றிப் பாதுகாக்கப் படவேண்டியவை என்று எண்ணிக் கொண்டிருப்பவர்களுக்கு—பெரிதும் கோபத்தை உண்டு பண்ணக்கூடும் என்ற முன்னுரையுடன் மேலே செல்கிறேன்.

பாலுணர்வு வேறுபாடுகளைக் காட்டி, உடலியற்கை வேறுபாடுகளைக் காட்டி நம் பெண்களைப் பிறந்த நாளிலிருந்து வேறுவிதமாக நடத்துகிறோம். இதனால் ஆணுக்குச் சமமாகப் பொருளாதார முன்னேற்றம் பெறவோ, முடிவெடுத்துப் பல காரியங்களைச் சாதிக்கும் திறன் பெறவோ, 'வாழ்க்கையில் நான் சாதித்தேன்' என்ற நிறைவு பெறவோ அதிகம் வழியில்லாதவாறு, பெண்களின் வாழ்வுக்கு நாம் எல்லை வகுத்திருக்கிறோம். நமது குடும்பத்தின் பயனுள்ள பிரதிநிதியாய் இருப்பதல்லாது, ஆணுக்குக் கிடைக்கும் மற்ற அனுகூலங்களை நம் சமுதாயத்தில் அவர்கள் பெறவில்லை என்று சுட்டிக் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம். மற்றபடி பயப்படத் தேவையில்லை.

பிறப்பிலிருந்து வாழ்க்கை வரை ஒரு பெண்ணின் சரிதத்துடன் ஒரு ஆணின் சரிதத்தை—வளர்ப்பு முறையை ஒப்பிடுவோம்.

இவர்கள் இலட்சியத் தம்பதியர். மனைவி குழந்தை பெற்றெடுக்கிறார். முதற் குழந்தை. ''உங்களுக்குப் பெண் குழந்தை பிறந்திருக்கிறது'' என்ற செய்தி கேட்டு, தந்தை முகம் தொங்கிப் போயிற்று. தாயின் முகம் சற்று வாடினாலும் விரைவில் மகிழ்வு பெற்றது. ''பெண் தானா...?'' என்கிறார் பெண்ணின் தாய். பாட்டியோ, ''பொட்டைக் குட்டி!'' என்று அலுத்துக் கொள்கிறாள். உறவினர்அடுத்தது ஆணாக இருக்கும் என்று தேற்றுகின் றனர். பெண்ணுக்கு 'ஆனந்தி' என்று பெயரிடுகின்றனர்.

ஓராண்டு கழித்து வீட்டில் 'நாவுக்கரசன்' பிறக் கிறான். எல்லோருக்கும் மகிழ்ச்சிப் பிரவாகம். 'பேரன் பிறந்திருக்கிறான்' என்று பிடிபடாத பெருமை பாட்டிக்கு. ஆண் வம்சம் இல்லாமல் போயிற்று என்ற குறை இனி கிடையாது. கொள்ளி வைக்க ஓர் ஆண் மகன் பிறந் தான். (ஆனந்தி கொள்ளி வைக்க முடியாது!)

பையன் பெரிய பொறியியல் வல்லுநனாக, மருத்துவ னாக, வழக்குரைஞனாக வரவேண்டுமென்று அப்பாவுக்கும், அம்மாவுக்கும் ரொம்ப ஆசை. ஆகவே, வீட்டில் புதிய புதிய விளையாட்டுச் சாமான்கள், சிங்கப்பூரிலிருந்து வாங்கி வந்த கிரேன், அடுக்குச் சட்டம், கருவிகள்—அது இதென்று பல. ஆனந்தியைப் பற்றி அப்படி எண்ண வில்லை... ஏனோ...?பெண்ணுக்கு ரப்பர் பொம்மைகள், மரப்பாச்சி, சொப்பு என்று பலவித அடுப்பங்கரை விளையாட்டுச் சாமான்கள்.

வீட்டுக்கு விருந்தினர் வருகிறார்கள். நாவுக்கரசன் தொப்பியை மாட்டிக் கொண்டு, ''நில் அப்படியே.

நகர்ந்தால் சுட்டுவிடுவேன்,'' என்று தன் பொம்மைத் துப்பாக்கியைக் காட்டிப் பயமுறுத்துகிறுன். ஆனந்தியும் தலேயில் தொப்பி வைத்துக்கொண்டு, இடுப்பிலிருக்கும் துப்பாக்கியை உருவி, ''நில் அப்படியே, சுட்டுவிடுவேன்!'' என்று பயமுறுத்துகிருள்.

அப்பாவும்—அம்மாவும் வந்து ஆனந்தியை அந்தப் பக்கம் இழுத்து, ''ஐயய்யே...! இப்படியெல்லாம் ஒரு பெண் செய்யக்கூடாது!'' என்று சிரிக்கிருர்கள்; கண்டிக் கிருர்கள்.

பாட்டி, தாத்தா கிராமத்திலிருந்து வருகிருர்கள். ''என்ன பண்ணப் போறே அரசு...? என்ன பெரிய கலெக்டரா வருவியா...? பெரிய பாங்கராய் வரப் போறியா...?'' என்று கேட்பதிலே ஓர் ஆனந்தம். ஆனந்தியைக் காண்கிருர்கள்; ''என்னம்மா ஆனந்தி...? நீ யாரைக் கல்யாணம் செய்துக்கப்போறே...? மாமன் மகன் மணிவாசகத்தைத் தானே...?'' பெண் வெட்கப் படுகிருள். ஏன் நாம் ஆனந்தியை ஒரு பெரிய கலெக்டராக வருவியா என்று கேட்பதில்லே...?

எதிர்க் கொல்லேயில் மாமரம் இருக்கிறது. நாவுக்கரசும் ஏறுகிருன். ஆனந்தியும் ஏறுகிருள். ''ஏ! எருமை! என்னடி இது...? பெண்ணு லட்சணமா வீட்டிலிருக்கிறதை விட்டுவிட்டு மரம் ஏறுகிருளாம் மரம்! மறுபடி உன்னே இப்படிப் பார்த்தால் காலே ஒடிச்சிப் போட்டுடுவேன்!'' — தந்தை சீறுகிருர். ஆனந்திக்குக் கொஞ்சம் விஷயம் விளங்குவது கஷ்டமாயிருக்கிறது. ஆனுல், கண்டிப்புப் புரிகிறது.

நாவுக்கரசு தெருவில் வலேகட்டி 'வாலிபால்' விளேயாடுகிருன். சடுகுடு, கோலி எல்லாம் விளேயாடு

கிறான். ஆனந்தியோ திண்ணையில் உட்கார்ந்து மற்றப் பெண்களுடன் தாயம், பரமபதம், பல்லாங்குழி விளையாடு கிறாள்.

"மேலே பையன் என்ன பண்ணப் போகிறான்...?" என்றார் அடுத்த வீட்டுக்காரர். "வக்கீலுக்குப் படிக்கப் போகிறான். அவங்க தாத்தா—என் மாமனார் பெரிய வக்கீல் தெரியுமில்லே?" என்றார் தந்தை பெருமையுடன். "பெண்ணை என்ன பண்ணப் போகிறீர்கள்...?"— அடுத்த வீட்டுக்காரர் கேட்கிறார். கேள்வியைக் கவனி யுங்கள். பெண்ணைப் பெற்றோராகிய நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்...? பையனையோ பையன் என்ன பண்ணப் போகிறான்...? "என்ன...? எப்படி இருந்தாலும் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டியதுதானே... எதற்குப் படிப்பு?" என்கிறார் தந்தை. ஆனந்தி ஒரு வக்கீல் என்று யாரும் நினைத்துக் கூடப் பார்ப்பதில்லை; பார்க்க முடிவதில்லை. "ஆனந்தி ஒரு வக்கீல்" சிரிக்கிறான் நாவுக்கரசு: "அவளுக்கென்ன தெரியும் பேச...? அழத்தான் தெரியும். பாவம் ஜட்ஜ்! இவள் அழுவதைப் பார்த்துவிட்டு, பரிதாபப்பட்டு இவள் பக்கம் தீர்ப்புக் கூறுவார்..." பாவம் ஆனந்தி! இப்படி அவமானப்படுத்தப் படுவது வெட்கமாயிருக்கிறது. 'வவ்வவ்வே' காட்டுகிறாள். அழுகை வருகிறது. அம்மா மடியில் முகத்தைப் புதைத்துக் கொள்கிறாள்.

அப்பாவுக்கு ஒரு கடை உண்டு. "டேய் நாவுக்கரசு! நம்ம பிசினஸ் நன்றாகப் போகிறது. கொஞ்சம் பிசினசைப் பார்த்துக்கொள். பின்னால் உனக்கு உபயோக மாக இருக்கும்."

ஆனந்தி மூத்தவள்தான். இருந்தும் யாரும் அவளைக் கேட்கவில்லை. ஒரு பெண்ணால் ஒரு தொழிலை நடத்த

முடியுமா...? ஆண்களோடு சரிசமமாகப் பழகமுடியுமா...? பிசினஸ் நெளிவு சுளிவுகள் தெரியுமா...?—இதெல்லாம் ஆனந்திக்கு வராது என்று தந்தையே தீர்மானம் செய்து விடுகிருர். பாவம் ஆனந்தி! சந்தர்ப்பமே கிடைக்க வில்லே.

ஆனந்தியைப் பெண் பார்க்க வருகிருர்கள். ஆனந்தி வீட்டார் ஆண் பார்க்க என்று போவதில்லே. கர்ப்பகிரகத்திலிருந்து அம்மன் சர்வ பூஷிதையாய் வெளிவருவது போல ஆனந்தி ஹாலுக்குள் நுழைகிருள். அவளுக்கு வெட்கம், கூச்சம். ஏதோ மாட்டுச் சந்தையில் மாட்டுக்குச் சுழி பார்ப்பது போல எல்லாரும் அவளேப் பார்க்கிருர்கள்; "பெண்ணுக்குப் பாடத் தெரியுமா...?" என்று கேட்கிருர்கள். 'உங்கள் அனந்த கிருஷ்ணனுக்குக் குழல் ஊதத் தெரியுமா...?' என்று கேட்கத் துடிக்கிறது இவள் நெஞ்சம். கேட்க முடியவில்லே. "எதுவரை படித் திருக்கிருள்?" என்று கேட்கிருர்கள். 'அவர் படித்தவர் என்கிறீர்களே, நான் ஒரு கெமிஸ்டிரி குவிஸ் வைக்கிறேன். அவரால் பதிலளிக்க முடியுமா...?' என்று கேட்டு விடத் துடிக்கிறது அவள் உள்ளம். ஆனல், கேட்கத்தான் முடியவில்லே! ஏன்...? அவள் அப்படி எல்லாம் கேட்கக் கூடாது!

பையன் நன்ருகச் சம்பாதிப்பான் என்று பேசிக் கொள்கிருர்கள். பெண்ணேப் பற்றிச் சம்பாத்யப் பேச்சு இல்லே. "நல்ல லட்சணமா... குடும்பப்பாங்கா இருக் கிருள்" என்று மெச்சிக் கொள்கிருர்கள். அனந்த கிருஷ்ணன் அட்டைக்கறுப்பு. அவனுக்கு லட்சணம் தேவையில்லே. ஆனந்திக்குத்தான் லட்சணம் தேவை. லட்சணத்தை வைத்துத்தான் விலேபோக வேண்டும்.

## 26. பெண்களைப் பற்றி நம் எண்ண ஓட்டம்

தமிழ்நாட்டுப் பத்திரிகைகளில் சமீப காலங்களில் வெளிவந்த சில நகைச்சுவை துணுக்குகளை—பெண்களைப் பற்றியவற்றை—கொஞ்சம் நினைவுக்குக் கொண்டு வாருங்கள். சினிமாவில் அழகாகத் தோன்றும் ஒரு பெண் கொஞ்சம் மண்டுவாகத்தானிருக்கும் என்ற எண்ணம் பரவி நிற்கிறது என்று முன்பே எழுதியிருந்தேன். இதோ தமிழ்நாட்டுக் கேலிச்சித்திரம்—ஒரு நடிகையிடம் டாக்டர் கூறுகிறார்: "நீங்க சினிமாவிலே பெரிய கதாநாயகியா இருக்கலாம். அதுக்காக எக்ஸ்ரேயைக் கூட கலர் பிலிம்லேதான் எடுக்கணும்னு சொல்றது சரியில்லே...!"

மற்றொரு ஜோக்: ஒருவர்: "சத்தியம் சிவம் சுந்தரம்" பார்த்ததிலிருந்து என் மனைவி ஜாக்கெட்டே போடுவதில்லை!"

மற்றொருவர்: " 'சித்தார்த்தா' பார்த்ததிலிருந்து என் மனைவி சேலையே கட்டுவதில்லை!"

பெண்கள் என்றால் இளப்பம், அவ்வளவுதான். கேட்டால், "நகைச்சுவை கூட இல்லையே உங்களுக்கு...!" என்பார்கள்.

நமது புராண இதிகாசங்களை எடுத்துக் கொள் ளுங்கள். திருவெண்காட்டில் அன்னை பராசக்தி நாட்டிய மாடுகிறாள். அன்னைக்கும் — அகோரமூர்த்திக்கும்

போட்டி! ருத்ர தாண்டவம். அப்பனைப்போல் அன்னை காலைத் தூக்கி ஆட முடியாததால் நாணத்தால் தலை குனிந்து தோல்வியை ஒப்புக் கொள்கிறாள். அன்னை தலை குனிந்தது தவறென்று நான் கூறவில்லை. நமது மனோ பாவத்தைப் பாருங்கள். கடவுள் பெயரைக் காட்டி, நாணத்தை முன்வைத்துப் பெண் ஆணுக்குக் கீழ் என்று ஆணி அடித்துப் பூட்டுப் போட்டுச் 'சீல்' வைத்து விட்டோம்!

நமது பாடல்களைக் கவனியுங்கள். "பெண்ணாகி வந்ததொரு மாயப் பிசாசம், பிடித்திட்டு என்னைத் தன் புண்ணுங் குழியிடைத் தள்ளிப் போகப் பொருள் பறித்தே...", என்று போகிறது பாடல். பெண் தள்ளி விட்டாளாம் ஆணைப் படுகுழியில்! விழுந்தவர் சுயசிந்தனை அதிகம் பெற்ற ஆண்குலம். தன் விதியைத் தானே நிர்ணயிக்கும்—சார்ந்து நிற்காத—ஆண்குலம்!

மற்றோர் பாடல்: "சேலை கட்டிய மாதரை நம்பினோர் தெருவில் நின்று தயங்கித் தவிப்பரே." துறவை மேற் கொள்ள வேண்டுமென்றால் அது யாருக்கும் தடையில்லை. அதற்காகத் தன் துறவறத்தில் தனக்கு உறுதி ஏற்படும் பொருட்டு, 'சேலை கட்டிய மாதர்களை நம்பாதீர்கள்' என்று உலகத்திற்கு உபதேசம் செய்வது எந்த விதத்தில் ஞானியின் செயல்...? ஒரு பெண் புடவை கட்டிக் கொண்டு துறவறம் மேற்கொள்கிறார் என்றால் அவர் நிலைமை என்ன...?

பெண்ணை இழிவுபடுத்தும் எதையும் நாம் சமுதாயத்தில் அனுமதிப்பது தர்மமாகாது.

நிலைமை அமெரிக்காவில் எப்படி இருக்கிறது என்பதைக் காட்ட ஒரு சிறு சம்பவத்தை—நடந்த சம்பவத்தை விவரிக்கிறேன்...

சட்டசபை உறுப்பினர் ஒருவர் மூன்றும் வகுப்புக்கு விஜயம் செய்கிறார். ஒரு துடிப்பான பெண் கேட்கிறாள் அவரை : ''நம் நாட்டில் ஒரு பெண் ஜனாதிபதியாக வர முடியுமா...?'' என்று. ''ஏன் முடியாது? நிச்சயமாக முடியும். பாதிக்கு மேல் ஓட்டுப் போடும் உரிமை படைத்த பெண்கள் தீர்மானித்தால் நிச்சயம் ஒரு பெண் அமெரிக்க ஜனாதிபதியாக வரமுடியும்'' என்றார். கடைசி பெஞ்சி லிருந்து ஒரு சிறு ஆண் குரல் கோபமாக ஒலித்தது. ''இதையெல்லாம் போய் அவர்களுக்கு (பெண்களுக்கு) ஏன் சொல்லவேண்டும்...? சும்மாயிருங்கள்!''

'இருக்கிற வினை போதாதா...? இனி ஒரு பெண் ஜனாதிபதி வந்து வேறு நாம் படவேண்டும்...?' என்று கோபப்படுகிறான் கடைசி பெஞ்சு மாணவன்.

சமுதாயத்தில் பெண்ணின் நிலை பற்றி ஆராய்ந்த சமுதாய இயல் பேராசிரியர்கள் எழுதுகிறார்கள்: ''குடும்பம், வீடு என்ற துறை தவிர பிற துறைகளில் தனக்கு அறிமுகம் தெரியாது என்று தன்னைத் தாழ்த்திக் கொண்டு பிறரைச் சார்ந்து வாழும் ஒரு மனித உருவாகப் பெண்களை வளர்த்து வந்திருக்கிறோம். பிற துறைகளில் வெற்றி காண்பது எளிதல்ல என்பது பெண்ணுக்குத் தெரியும். சில துறைகளில் அப்படி முயல்வதும் கூட முறையல்ல என்று, நாம் மறைமுகமாகப் புகட்டி வந்திருக்கிறோம்.''

வளரும் மாணவ—மாணவிகளின் இலட்சியங்களையும், ஆசைகளையும், மன ஓட்டங்களையும் அறிய ஒரு கணக் கெடுப்புச் செய்தார்கள். 'முதலாவது ஆண்டு மருத்துவப் படிப்பில் தான் முதலாவதாகத் தேறியிருக்கிறோம் என்பதை ஜான் அறிந்தான்' என்று ஒரு தொடக்கம் கொடுத்து,ஜானின் கதையைமுடிக்குமாறு சொன்னார்கள்

கல்லூரி மாணவர்களிடம். அதே போலக் கல்லூரி மாணவிகளிடம், முதலாண்டு மருத்துவப் படிப்பில் தான் முதலாவதாகத் தேறியிருக்கிறோம் என்று 'ஆன்' தெரிந்து கொண்டாள்' என்று ஒரு தொடக்கம் கொடுத்துக் கதையை முடிக்கச் சொன்னார்கள்.

ஆண்களில் பத்து சதத்தினருக்கு இந்தத் தொடக்கம் மிகவும் கஷ்டமாயிருந்தது. கஷ்டமான மருத்துவப் படிப்பில், அதுவும் முதலாவதாக வருவது அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியாததாக இருந்தது. பெண்களில் சுமார் 66 சதத்தினருக்கு இத்தொடக்கம் பெரிதும் சங்கடத்தை அளித்தது. இவர்கள் கொடுத்த தொடக்கத் திற்கு எதிராகக் கதையைக் கொண்டுபோனார்கள்.

ஒரு மாணவி எழுதினாள்: "ஆன்" தான் முதலாவ தாக வருவதை விரும்பவில்லை. பிற மாணவர்கள், 'இவள் ஒரு புத்தகப் புழு, என்று அவர்கள் கூட்டத்திலிருந்து ஒதுக்கி விடுவார்கள் என்று அவள் எண்ணி அடுத்த ஆண்டு பரீட்சைகளில் ஒன்பதாவதாக வந்தாள். முடிவில் முதலாவதாக வந்த டாக்டர் மாணவனைக் கல்யாணம் செய்து கொண்டாள்."

மற்றோர் மாணவி எழுதினாள்: முதலாவதாகத் தேறி யிருக்கிறோம் என்று தெரிந்தபோது, அவளுக்குக் குற்ற உணர்வு ஏற்பட்டது. கடைசியில் சோகத்தால் நரம்புத் தளர்ச்சி ஏற்பட்டுக் கல்லூரியையே விட்டாள். எனினும் ஒரு நல்ல டாக்டரைத் திருமணம் செய்து கொண்டாள்."

மற்றோர் மாணவி எழுதினாள்: "ஆன் என்பது உண்மையான நபரல்லர். மருத்துவ மாணவர்கள் அனைவரும் சேர்ந்து அப்படியொரு புனை நபரை உருவாக்கி அந்தப் பெயரைப் பதிவேட்டில் ஏற்றினார்கள்.

'ஆன்' என்ற பெயரில் அவளுக்காகப் பரீட்சை எழுத மாணவர்கள் பல தந்திரங்களைக் கையாண்டனர்.''

பெண்களால் எப்படி மனத்தால் கூடச் சில விஷயங்களை, சில துறைகளை, சில திறமைகளை ஏற்றுக் கொள்ள முடியவில்லை என்பதைப் பாருங்கள். பொதுவாக, 'தாங்கள் சாதாரணம் அல்லது சாதாரணத்திற்கும் கீழ்' என்று எண்ணிக்கொண்டிருக்கும் ஒரு மன ஓட்டத்தால் தங்களைத் தாங்களே குறைத்து மதிப்பிடுகிறார்கள். மனோதத்துவ ரீதியில், பெண்கள் மன ஓட்டம் முடக்கப் பட்டிருக்கிறது!'' என்று அமெரிக்கப் பெண் விடுதலை இயக்கம் பற்றி எழுதுவோர் குறிப்பிடுகிறார்கள்.

ஒரு பெண்ணிடம் ஒரு டென்னிஸ் விளையாட்டில், ஒரு பேச்சுப் போட்டியில் தோற்பதையும்; ஓர் ஆணிடம் தோற்றுப் போவதையும் சீர்தூக்கிப் பாருங்கள். பெண்ணிடம் தோற்றான் என்றால், அது 'மகா கேவலம்.' ஏன்...? பெண் 'மட்டம்' என்ற நினைவு அடி ஓட்டமாக நம் சமுதாயத்தில் ஓடுகிறது.

இத்தகைய போட்டிகளில் ஒரு பெண்ணின் மன நிலை என்ன...? அதுபற்றி நாம் கவலைப்படுகிறோமா...? ஒரு பெண்ணுக்கு அவள் பெறும் வெற்றி எத்தனை நம்பிக்கை ஊட்டும், அவள் வாழ்வை வளப்படுத்தும் என்று நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. 'பெண்ணிடம் தோற்றான் என்று இளப்பமாகப் பேசுகிறோம். தோல்வி பெற்ற ஆணின் மனநலத்தில் கரிசனம் காட்டும் அளவுக்கு வெற்றி பெற்ற பெண்ணின் மகிழ்ச்சியோ, வளர்ச்சியோ நமக்கு முக்கியமாகப் படுவதில்லை.

ஆண்—பெண் என்ற பாலுணர்வுப் பாகுபாட்டிற்கும்; அறிவு, திறமை, என்பவற்றிற்கும் அடிப்படையிலே

ஏதேனும் தொடர்பிருக்கிறதா? நமது சம்பிரதாய வாதிகள், ''ஆம்! பெண்களின் உடலில் வேறுவித ஹார் மோன்கள் ஓடுகின்றன!'' என்று வாதாடக் கூடும். பெண்ணாக இருப்பதால் பிறவியிலேயே அறிவு, திறமைக் குறைபாடு, வருகிறதா...? அல்லது நாம் வளர்க்கும் முறையிலா...? நாம் சிந்திக்க வேண்டும்...

கருத்துக்கள், கொள்கைகள் இவை ஆண் தன்மை கொண்டவை.

உணர்ச்சிகள் பெண் தன்மை கொண்டவை.

தொழில்துறை பொறி—யந்திர அறிவு ஆண் தன்மை கொண்டது.

சமூக குடும்ப உறவு பெண் தன்மை கொண்டது.

தனித்து நிற்பது ஆண் தன்மை.

சார்ந்து நிற்பது பெண் தன்மை!

—இப்படிச் சமூகம் பாகுபாடு செய்து பிரித்திருப் பதாகச் சமுதாய இயல் அறிஞர்கள் கூறுகிறார்கள். இதை மீண்டும் படித்துப் பாருங்கள்; சிந்தியுங்கள்.

அப்படியானால் தனித்து நிற்கும் பெண், உணர்ச்சி வசப்படாமல் எதையும் சிந்திக்கும் பெண், தனது பெண் தன்மையை இழந்து விடுகிறாளா...?

நமது பல்கலைக்கழகத்துப் பேராசிரியர்கள், அகிலன் எழுதிய 'பெண்ணையும்', லஷ்மி எழுதிய 'பெண்ணையும்' ஜெயகாந்தன் எழுதிய 'சில நேரங்களில் சில மனிதர்க'ளில் வரும் 'கங்காவையும்' பற்றி மனோதத்துவ ரீதியில் அலசிப் பார்க்க வேண்டும். நாட்டின் மன ஓட்டம் எப்படிப் பிரதிபலிக்கிறது என்பது புரியவரும்.

பெண்கள் பற்றி எப்படிச் சில விஷயங்களை நம்மால் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை என்பதை விளக்க ஒரு புதிர் போடுவோம். ஒரு பையனும் தந்தையும் விபத்தில் காயம் பட்டு மருத்துவ மனைக்கு அழைத்து வரப்பட்டார்கள். பையனைப் பார்த்த டாக்டர், "இவன் என் மகன்—நான் 'ஆப்பரேட்' செய்ய முடியாது" என்று கூறினார்.

இது எப்படி முடியும்...! சிந்தித்துப் பாருங்கள். இந்தியப் பண்பாட்டில் வளர்ந்த ஒரு பெண் கூறினாள். "முற்பிறவியில் அவருக்கு அவன் மகனாயிருந்திருக்க வேண்டும்." மற்றொரு மாணவன் சொன்னான்: "அவர் அந்தப் பையனின் சித்தப்பா...இல்லை பெரியப்பா." மூன்றாவது பதில்: "பையன் சோதனைக்குழாயில் வளர்ந்த மகன்!"

விஷயம் வேறொன்றுமில்லை. அந்த டாக்டர் அம்மா அடிபட்ட அந்த மகனின் தாய். அவ்வளவுதான்!

நாம் சரியான பதிலுக்குத் திணறும் காரணம், நம்மால் ஒரு பெண்ணை டாக்டராக நினைத்துப் பார்க்க முடியவில்லை. டாக்டராக மட்டுமா நம்மால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை...? இன்னும் பல—பலவிதங்களில்.

## 27. பிரச்சினை டில்லியில் இருக்கிறது.

இந்தி மொழி ஒரு பிரச்சினையா? இல்லை. பின் எது பிரச்சினை; இந்திமொழியைத் திணிக்கும் ஆதிக்க வெறி இருக்கிறதே அதுதான் பிரச்சினை. இந்தி பேசுவோர் கூட்டத்தில்—பாராளுமன்றத்தில்—இந்தி தெரியாதவனை உதாசீனம் செய்யும்நிலை இருக்கிறதே அதுதான் பிரச்சினை. நாட்டில் 42 சதவீதத்தினரின் மொழி இது, ஆகவே இது தேசியமொழி, நாட்டுமொழி நீ இதைக் கற்றுக்கொள். உன் தேசபக்தியை நிரூபி என்று இந்தியைப் பொது இடங்களிலெல்லாம்—ரயில்வே, தபால் இலாகா, விமானப் போக்குவரத்து என்று எங்கும் இந்தியைக் காட்டி நம்மை ஓட ஓட விரட்டுகிறார்களே அதுதான் பிரச்சினை. என் தமிழ்நாட்டிலேயே என்னை அன்னியனாக்குகிறார்களே, அதுதான் பிரச்சினை.

இந்தி மொழியால் நாம் வடக்கு தெற்கு என்று பிரிந்து போயிருக்கிறோம். இது கவனமுள்ள டில்லி அரசாங்கத் தலைவர்கள் உணர வேண்டிய பிரச்சினை. உணராதவர்கள், உணர மறுப்பவர்கள், திணிப்பவர்கள், அதன் விளைவை அனுபவிப்பார்கள். அது காலங்கடந்தா அல்லது காலத்திற்கு முன்னா என்பது அவர்கள் பிரச்சினை.

ஆண்டாண்டு தோறும் இந்திப் பிரச்சினை எழுகிறது. நம் கோபத்தைக் கிளறுகிறது. நம் உணர்ச்சிகளைப்

பீரிடச் செய்கிறது. மக்கள் வீறிட்டெழுகிறார்கள். எதிர் நின்று வாளேந்தும் கட்சிகள் எல்லாம் தோளோடு நின்று செயல்படுகின்றன. இதுவும் வடக்கத்திக்காரர்கள் பிரச்சினைதான். ஏன்? இதன் விளைவு நாளை என்ன ஆகும் என்பதை அவர்கள்தான் எண்ணிப் பார்க்க வேண்டும்.

நாட்டின் ஆக்கப் பணிகளில் செலவிட வேண்டிய மக்கள் சக்தி, தலைவர்கள் சக்தி, அரசாங்க சக்தி, பணம் எல்லாம் இந்தி வெறிப் போராட்டத்திற்கு ஈடு கொடுப்பதில் வீணாகிறது. நமக்கு வேறு வேலை இல்லை...? ஏழை மக்களின் பொருளாதாரம் முன்னேற வேண்டாம்....? பின் ஏன் இப்படி நம்மை வடக்கத்திக்காரர்கள் அலைக்கழிக்கிறார்கள்?

சில 'படித்தவர்'கள் கூறுகிறார்கள்: ''இருப்பதெல்லாம் இருக்கட்டும். 'கிழவியைத் தூக்கி மணையில் வை' என்ற கதையாகப் பிரச்சினை இல்லாத சமயத்தில் இதை அரசியல்வாதிகள் பிடித்துக் கொள்கிறார்கள், இந்தியைப் பிரச்சினையாக ஆக்குகிறார்கள்'' என்று. உண்மையா? இல்லை. கேரளத்தில் இருந்த கம்யூனிஸ்ட் எழுத்தாளர்கள் ஒரு நாடகம் நடத்தினார்கள். தலைப்பு? 'நீ என்னைக் கம்யூனிஸ்ட் ஆக்கினாய்!' என்று. அதே கதையைத்தான் நம் வடக்கு வாழ் இந்தி மொழி ஆதிக்கக்காரர்கள் செய்கிறார்கள். நாம் தள்ளப்படுகிறோம். நம் தன்மானம் இடிபடுகிறது. நமக்குப் போக வழியில்லை. சுவரின் நாலு மூலைக்குள் நிற்கும் நாம் தற்காத்துக் கொள்ள முயல்கிறோம். விளைவுதான் இந்தி மொழிப் போராட்டம்.

மொழி உணர்வு ஒரு தாய் உணர்வு. அது ஒருவன் பேசும் சக்தியைப் பறிப்பதாகும். ஒருவனது நாக்கை

அறுப்பதற் கொப்பாகும். என் நாட்டில் நான் என் மொழியைப் பேச முடியாதபோது என் வாழ்வு பத்திரமாக இல்லை என்ற பயம் ஏற்படுகிறது. ஏதோ பிறர் என்னை ஆட்டுவிக்க முயல்வதுபோல் அச்சம் எலும்புக்குள் புகுந்து ஆட்டுகிறது.

விரட்டப்படுபவன், வேறுவழியில்லாதவன், தன் மானம் பறிக்கப்படுபவன் நீதி நியாயங்களை ஆராய்ந்து கொண்டிருக்க மாட்டான். 'கொலை வாளினை எடடா மிகக் கொடியோர் செயல் அறவே' என்றுதான் போர் வாளைத் தூக்கிப் புறப்படுவான். அவன் என்ன செய்வான், அதனுல் என்ன நேரிடும் என்பதை யாரும் கூறமுடியாது. அப்படி முன்னேற்பாடு இல்லாமல் உணர்ச்சிவசப்பட்டு, தன் நிலை மறக்கும் மனிதனின் செயல் சிலசமயம் நீதிமன்றத்தில் கூட மன்னிக்கப்படு கிறது.

அப்படிக் கொலைவாளினை எடுத்துப் புறப்பட்ட செயல்தான் 1965ல் நிகழ்ந்தது. அதை இன்னும் தமிழ் மக்கள் நினைவு கொண்டுள்ளார்கள். டில்லிக்காரர்கள் நினைவுகொள்ள வேண்டும். டில்லிக்குப் புத்தி சொல்வ தாகத் தங்களைத் தாங்களே நியமித்துக் கொண்டோர் நினைவு கொள்ளவேண்டும். தமிழனின் தயவைவிட டில்லியின் தயவினுல் அதிக லாபம் என்று லாபக் கணக்கில் உறவை உறுதிப் படுத்திக் கொண்டோர் நினைவுகொள்ள வேண்டும்.

ஆகா தமிழா! உனக்கென்ன வந்தது? அண்டை மாநிலங்களான கன்னடமும், தெலுங்கும், மலையாளமும் இதை ஏற்று இந்திக்கு இசை பாடுகின்றனவே, நீ ஏன் மறுக்கிருய்? நீ ஏன் வெறுக்கிருய்? என்று கேட்பது விவேகமன்று.

ஒற்றுமை, தேசபக்தி என்ற போர்வையில் தனி மனித உரிமை, சிறுபான்மை மக்கள் உரிமை புறக்கணிக்கப் படுகிறது. சிறுபான்மை என்று அவர்களை ஆதிக்கம் செய்ய முற்படுகிறார்கள். அடுத்த வீட்டுக் காரன் எதிர் வீட்டான் மனைவியுடன் இச்சகம் பேசினால் அதற்காக நானும் பேசவேண்டும் என்பதன்று. அது அவன் பாடு. அவன் தலைவிதி.

என் தலைவிதி என் கையில். அதன் உரிமை என் கையில் இருக்கிறது. அதை எந்த வடக்கத்திக்காரர் களும் பிடுங்கிவிட முடியாது. அதற்காக என் உயிரைப் பணயம் வைக்கத் தயார் நான். அதற்காக இந்த நாலு கோடி மக்களும் தங்கள் சதையைத் துண்டு துண்டாக் கினும் போராடுவார்கள் என்பது எனக்குத் தெரியும்.

இது பெரியார் நூற்றாண்டு, இன்னும் அடுத்த ஐம்பதாண்டுகளுக்குப் பெரியார் நினைவும் செயலும் மக்களிடையே நிலவும். அவர் ஏன் ஒரு போராட்டம் தொடங்கினார் என்று 97 சதவிகிதமுள்ள பிராமணர் அல்லாதார் மட்டும் யோசிக்கப் போவதில்லை. மொத்த நூறு சதமான தமிழ் மக்களும் யோசிப்பார்கள். 'அவர் ஏற்றிய தீபம் அணைந்து விட்டது அவருடன்' என் றெல்லாம் தப்புக் கணக்குப் போடுபவர்கள் வெறும் ஆசையில் வாழ்பவர்கள்; கனவுப் பிரியர்கள்.

தி. மு. க. நாட்டுப் பிரிவினையைக் கைவிட்டது சீனப் படையெடுப்பின் போது. வேண்டுமென்றல்ல; நிர்பந்தத்தினால். பெருமளவு பயத்தால். பேச்சளவில் அந்த வெளிப் போராட்டம் மறைந்து போயிருக் கிறது. அதுவே பல உருவங்களில் கோவை மாணவர் கூட்டத் தீர்மானமாக, இந்தி எதிர்ப்புப் போராட்டமாக

வெளிவருகிறது என்பது தான் உண்மை. இதை மூடி மறைப்பது முட்டாள்தனம்.

இந்திக்காரர்கள் தமிழ் படித்து, 'தமிழன் ஏன் இப்படி முரண்டு செய்கிருன், அவன் சேர—சோழ—பாண்டிய பரம்பரை என்ன, ஏன் அதை விரிவாக இந்தியச் சரித்திரத்தில் படிக்க முடிவதில்லே' என்பதைப் பற்றிச் சிந்திக்கவேண்டிய தருணம் வந்துவிட்டது. அமெரிக்க நாட்டில் அந்தந்த நாட்டுப் பண்பாடுகளே, எண்ண ஓட்டங்களேப் புரிந்து கொள்ள அந்தந்த நாட்டு மொழியைப் பயில்கிருர்கள். இந்திக்காரர்கள் இப்போது தமிழ் படிப்பது நல்லது. தமிழ்ச் சரித்திரம் படிப்பது நல்லது. கனக விசயர்கள் கல் சுமந்ததைச் சிலப்பதிகாரம் கூறுகிறது என்பதுடன் அண்ணுவும், கலேஞரும் அதை அன்ருட எண்ண நினேவில் தமிழ் மக்களின் சிந்தனேயில் எப்படி ஏற்றிவிட்டிருக்கிருர்கள் என்பதைப் புரிந்து கொள்வது நல்லது. தமிழறிஞர்களும், தமிழ்ப் புலவர்களும் இந்தி எதிர்ப்பில் ஏன் அத்தனே முன்னேடிகளாய் இருக்கிருர்கள்? தமிழில் அப்படி என்னதான் இருக்கிறது என்பதைக் காலந்தாழ்க்குமுன் அறிந்து கொள்வது நல்லது. தமிழுக்கும் வடமொழிக்கு முள்ள தனித் தன்மையைப் புரிந்து கொள்வது நல்லது.

நாமக்கல் கவிஞர் பாடினர்:

'தமிழன் என்ருேர் இனமுண்டு
தனியே அவர்க்கொரு குணமுண்டு' என.

அது வடக்கத்திக்காரர்களுக்குப் பிடிக்காததாக இருக்கலாம். ஆனல், அதைப் புரிந்து கொள்வது நல்லது.

ஜெயகாந்தன் 'வாக்குமூலம்' என்ருெரு தொடர் எழுதினர். அதன் முடிவில் தெள்ளத் தெளிவாகத் தமிழன்

ஏன் பிறரால் ஆளப்படவேண்டும் என்று கேட்கிறார். 'இன்று ஐம்பத்து மூன்று ஆண்டுகளாக இந்திமொழிப் போராட்டம் நடைபெறுகிறது. விடிவு என்று? எப்போது?' என்று கேட்கிறார் டாக்டர் சனார்த்தனம்.

அன்று பெரியார் கேட்டார். பின் அண்ணா கேட்டார்; கலைஞர் கேட்டார்; எம். ஜி. ஆர். கேட்கிறார். மூதறிஞர் ராஜாஜி சொன்னார்: "தமிழன் தன் உரிமை கேட்பது பாவமல்ல" என்று. இராஜாஜி பிரிவினைவாதி அல்லர். இந்தி வெறியர் அல்லர். பின் ஏன் அப்படிச் சொல்கிறார்? சிந்தித்துப் பாருங்கள்.

இந்தி கற்றுக்கொண்டால்தான் பிற மாநிலங்களில் வேலை கிடைக்கும் என்கிறார்கள் சிலர். எத்தனை நாளைக்கு நாம் பிற மாநிலங்களில் வேலை பார்த்துப் பிழைக்க முடியும்? அதுவா நம் வருங்காலத் திட்டம்? நடுத்தர வேலைகளிலும், மேல் வேலைகளிலும் 'யார் அவன்? எந்த மாநிலத்தான்?' என்று பார்த்து வேலை தரும் நிலை நாடு பூராவும் பரவியிருக்கும்போது எப்படி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளமுடியும்?

எமர்ஜென்சி சமயத்தில் திணித்தபோது ஏன் இந்தியை எதிர்க்கவில்லை என்றும், இத்தனை நாள் 'தபால் கார்டில் இந்தி இருக்கும்போது இப்போது போய் எதிர்ப்பானேன் என்றும் சிலர் குழந்தைத் தனமான வாதங்களை எழுப்புகிறார்கள். நேற்று நான் சிறுவனாக இருந்த போது என்னை ஏமாற்றினார்கள்; நான் ஏற்றுக் கொண்டேன் என்பதற்காக இன்று நான் வளர்ந்த நிலையிலும் அடிபணிய வேண்டும் என்று அர்த்தமல்ல.

இந்தியின் தரம் பிரச்சினை அன்று. அது வெறும் குப்பை வாதம்.

இந்திப் போராட்டத்தின் அடிப்படை அதற்குக் கீழ் ஓடும் வேகமான அடி நீரோட்டம். இது எப்படி அடி நீரோட்டமாகவே இருக்கப்போகிறது என்பதோ, பொங்கி வெடித்து எரிமலையாய் மற்றோர் 1965 ஆகவோ அதற்கு மேலோ உருவாகப் போவது எல்லாம் தமிழ் நாட்டு அரசியல் வாதிகள் கையில் இல்லை.

டில்லியில் அரசோச்சும் இந்தித் தலைவர்களின் கண்ணோட்டத்தில் இருக்கிறது.

## 28. பாரதம், தேசியம், புனிதம்.

என் கட்டுரைக்கு வந்த இரு எதிர்ப்புக் கடிதங்களைக் கண்டேன். அவற்றிற்குப் பதில் கூறுவது என் பொறுப்பு மட்டுமன்று; அது விஷயங்களைப் பாரபட்ச மில்லாமல் சீர்தூக்கிப் பார்க்கவும், சிந்திக்கவும் உதவும் என்ற நம்பிக்கையில் எழுதுகிறேன்.

பாரதம், தேசியம் போன்ற வார்த்தைகளின் புனிதத்தை நான் உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை என்று திரு. கண்ணன் எழுதுகிறார். பாரதம், தேசியம் என்ற பதங்களுடன் புனிதம் என்ற சொல்லைச் சேர்ப்பதன் மூலம், அவற்றிற்கெதிராகப் பேசுபவர்கள், போராடுபவர்கள் எல்லாரும் புனிதத்திற்கெதிராக, தர்மத்திற்கெதிராகப் போராடுபவர்கள் என்று சிலர் நம்மை நம்ப வைக்கிறார்கள்.

தேசியம் காப்பாற்றப்பட வேண்டுமானால், என்ன நியாயங்கள் கடைப்பிடிக்கப்பட வேண்டும், அப்படிச் செய்யா விட்டால் நாளை என்ன நேரக்கூடும் என்றுதான் எழுதியிருக்கிறேன்.

முன்னாளில் கிராமத்தில் ஹரிஜனங்கள் பொதுக் குளத்தில் தண்ணீர் மொள்ளக் கூடாது, கோயிலுக்குள் நுழையக் கூடாது என்று கூறியவர்களும், தண்ணீரின் புனிதம், கோயிலின் புனிதம் பாழ்பட்டு விடும் என்றுதான் வாதிட்டார்கள். மகாத்மா காந்தியோ, "அங்கே மனித உரிமைகளைக் காலில் போட்டு மிதிக்கிறோம்" என்று ஹரி

ஜனங்களின் உரிமைக்காகப் போராடினர். தண்ணீரின் புனிதம், கோயிலின் கடவுள் தன்மை என்ற பெயரில் ஹரிஜனங்களின் மனித உரிமைகளைப் பறிப்பது எந்தத் தர்மத்தில் சேர்ந்தது? அது கடைந்தெடுத்த சுயநல மல்லவா...? அதே போலத்தான் நாம் நம் உரிமைகளைக் கேட்கிறோம். உரிமைகளைக்கேட்பது எப்படிப் பாவமாகும்? புனிதத்தைப் பாழ்படுத்துவதாகும்? உரிமைகளைக் கேட்கப் பயப்படுபவன் கோழை—பேடி!

நாய்கூட அடிக்குமேல் அடி அடித்தால் குலைக்கிறது! திரும்பக் கடிக்க வருகிறது! அது உயிர்ப் போராட்டம். தற்காத்துக் கொள்ளும் முயற்சி. தன்னைக் காத்துக் கொள்ள முடியாத நாயும், மனிதனும், மனித இனமும் உலகில் பூண்டற்றுப் போய்விடுவார்கள். இது பரிணாம உண்மை.

"சுயமுன்னேற்றத்தில் அக்கறை உள்ள, தமிழர்கள் அனைவரும் இந்தியைக் கற்றுக்கொள்கிறார்கள்" என்று கடிதம் எழுதுகிறார் கண்ணன். சுயமுன்னேற்றத்தின் முன் குடும்பக் கௌரவத்தை, குடும்பத் தன்மானத்தை யாரும் பணயம் வைக்க மாட்டார்கள். சுயமுன்னேற்றத் திற்காக, பொருளாதார வசதிக்காக யாரும் அலுவலகத் தில் மேலதிகாரி கூறும் எதையும் செய்துவிடுவதில்லை. சுயமுன்னேற்றமே எல்லாம் அல்ல...அதற்கும் மேலே நியாயம் இருக்கிறது; உண்மை இருக்கிறது; தன்மானம் இருக்கிறது. நியாயம், உண்மை, தன்மானம் பறிக்கப்படும் போது நல்லவர்களும் அறிஞர்களும் சும்மா இருப்பதில்லை.

சுயமுன்னேற்றத்தில் மட்டுமே அக்கறை கொண்டு, "இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டா லென்ன? இந்தி மொழியைக் கற்றுக்கொள்ளச்சொன்னால் கற்றுக்கொள்வோம். ஆப்பிரிக்க நடனத்தை ஆடச் சொன்னால் அதையும் ஆடுவோம்" என்று சொல்பவர்

களால் ஒரு நாட்டின் விதி என்றும் நிர்ணயிக்கப் படுவதில்லை.

இந்தி எதிர்ப்புப் போராட்டம் பற்றித் தமிழக மக்கள் அனைவரும் வெகுண்டெழுந்த மாதிரி நான் ஒரு ‘False image’ —ஐ என் கட்டுரையில் திணித்திருப்பதாகக் குற்றஞ் சாட்டுகிறார் நண்பர். எந்த நாட்டிலும் பொது மக்கள் அவரவர்களது அன்றாடப் பாட்டில் கவனஞ் செலுத்துபவர்கள் தாம். ஆகவே, தமிழகமே நர்சரிப் பள்ளிக் கூடத்திலிருந்து மருத்துவ மனையில் உள்ள நோயாளிகள் ஈறாகத் திரண்டெழும் என்று நாம் எதிர் பார்க்க முடியாது.

அமெரிக்க நாட்டின் சுதந்தரப் போராட்டம் அதன் மூன்றிலொருபகுதி மக்களாலேயே நடத்தப்பட்டது. இரஷ்யப்புரட்சி லெனின் போன்ற அறிஞர்களால் நடத்தப்பட்டது. இங்கிலாந்தின் சமதர்மப் புரட்சி (Labour party Movement) பெர்னாட்ஷா, லஸ்கி, அட்லி போன்ற அறிஞர்களால் தொடங்கப்பட்டது; இங்கிலாந் தின் என்.ஜி.ஓ. சங்க உறுப்பினர்களால்—படித்த மக்களால்தொடங்கப்பட்டது. ஈரான் நாட்டுப் புரட்சி அந்த நாட்டு மதபோதகர்களால் தொடங்கப்பட்டது.

பின்னால் வரும் சம்பவங்களின் கனமோ, வேகமோ, எதுவும் முதலிலேயே மொத்தமாகத் தெரிந்து விடுவதில்லை. நாட்டில் நடக்கும் பலவிதக் குறிப்புக் களிலிருந்தும், சம்பவங்களிலிருந்தும், தலைவர்களின் பேச்சுக்களிலிருந்தும் அறிஞர் பெருமக்களின் எழுத்துக்களி லிருந்தும்தான் நாட்டின் ஓட்டத்தை—போக்கை— எதிர் காலத்தைக் கணிக்கவேண்டும். அத்துடன் 1965-ல் என்ன நடந்தது என்பது தெரியும்போது, பின்னால் என்ன நேரக் கூடும் என்பதை அதிலிருந்து கணிக்கலாம். அந்தக் கணிப்பின் எச்சரிக்கைதான் என் கட்டுரை.

அப்படிக் கணிக்கத் தவறியவர்களின் சோகக் கதையைச் சரித்திரம் பக்கம் பக்கமாக எழுதுகிறது. அமெரிக்கச் சுதந்தரப் போராட்டம், ரஷ்யப் புரட்சி, சீனுவின்புரட்சி, மொழிக்காகக் கனடாவிலும்—பெல்ஜியத்திலும் நடத்தப்படும் போராட்டங்கள், கிளர்ச்சிகள் எல்லாம் சரித்திரத்தில் முடிந்த கதைகளாகவும், முடிவை எதிர்நோக்கி நிற்கும் கதைகளாகவும் நிரம்பி வழிகின்றன. வருமுன் காப்பவர்களே திறமைசாலிகள். வருமுன் உணர்பவர்களே புத்திசாலிகள். சரித்திரத்தை நாமும் சரி, டில்லியும் சரி புறக்கணிப்பது நல்லதன்று என்பதுதான் என் எச்சரிக்கை. மக்கள் ஒவ்வொரு முறையும் வீறுகொண்டு எழமாட்டார்கள். உண்மை. ஆனுல், அடுத்த எரிமலே எப்போது வரும் என்று யாரும் ஆருடம் கூறமுடியாது. 1965 சரித்திரம் நமக்குப் படிப்பினையாக இருக்கவேண்டும்; பயன்பட வேண்டும்.

இராஜாஜி, பெரியார், அண்ணு, கலேஞர், எம்.ஜி.ஆர், ஜெயகாந்தன் மட்டுமே தமிழகமல்ல என்கிருர் மாணவப் பேரவைக் காப்பாளர் ரா. கிருஷ்ணமூர்த்தி.

ஒரு நாட்டின் வாழ்வு அங்கு வாழும் அறிஞர்களின்—தலேவர்களின் எண்ணங்களினுலேயே உருவாக்கப்படுகிறது. இராஜாஜியின் கூர்மதியும்—கடைசிக் காலத்தில் அவருக்கேற்பட்ட இந்தி வெறுப்பும், பெரியாரது சாதி ஒழிப்புப் போராட்டமும், அண்ணுவின் திராவிட நாட்டுக் குரலும், இவை அனேத்திற்கும் கலேஞர் கருணுநிதியும்—எம்.ஜி.ஆரும் தந்த அழுத்தமும், ஜெயகாந்தனின் புதுமை வழி நடக்கத் தூண்டும் எழுத்துக்களும் நாட்டில் தன் முத்திரையைப் பதிக்கவில்லே என்று யாரேனும் நெஞ்சில் கைவைத்துக் கூறமுடிமா...? பெரியார், அண்ணு, கலேஞர் எம்.ஜி.ஆர். என்று இவர்கள் தந்த தலேமை தமிழ்நாட்டு ஆட்சியாகப் பிரதிபலித்து வரவில்லேயா? அவர்களது

கருத்துக்களும், கொள்கைகளும்தானே நாட்டு ஆட்சியாக, திட்டங்களாக உருவெடுக்கின்றன. இவர்களேயும் கலைஞருக்கும், எம்.ஜி.ஆருக்கும், ஓட்டுப் போட்ட பொதுமக்களேயும் தமிழ்நாட்டு மொத்தத் தொகுதியில் கழித்தால் யார் மிஞ்சுவார்கள்? அங்கே இருக்கும் இந்தி எதிர்ப்பாளர்களேயும் கழித்தால் எத்தனே பேர் மிஞ்சுவார்கள்...? கேட்கிறேன்.

இப்படி உரிமை கேட்பதை, மனம்திறந்து பேசுவதைக் 'கவர்ச்சிப் பிரசாரம்' என்கிருர் நண்பர். எது கவர்ச்சி? எது பிரசாரம்? உண்மையைக் கூறுவது, உரிமையைக் கேட்பது பிரசாரமா...? உள்ளத்தில் எழும் வேகம் எழுத்தில் தீயாகப் பரவினுல் அதைக் கவர்ச்சிப் பிரசாரம் என்று உதாசீனப்படுத்துவதா?

நாம் கிண்டல் மூலமோ, அடைமொழி மூலமோ நமக்குப் பிடிக்காதவர்கள் மீது, ''கவர்ச்சிப் பிரசாரம்' 'கவர்ச்சி நடிகர்' என்று நம் அதிருப்தியை ஏற்றலாம். அதனுல் உண்மை மறைந்து போய்விடுவதில்லே. 'கவர்ச்சிப் பிரசாரம், 'வீராவேசம்' என்றெல்லாம் கூறி நாடு செல்லும் திசையை உணர மறுப்பது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதாகும்.

இந்தி ஆதிக்கத்தையும் திணிப்பையும் எதிர்ப்பதனுல் நாம் 'குண்டுசட்டி குதிரை'களாகிவிட மாட்டோம்; அப்படிப் பயப்படும் நண்பருக்கு, தமிழ் நாட்டில் அறிஞர்கள் மட்டுமில்லே, சாணக்கியர்கள் இருக்கிருர்கள்; சாணக்கியப் பரம்பரையே இங்கிருக்கிறது; அஞ்ச வேண்டாம் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். அத்துடன், 'இப்படை தோற்கின் எப்படை வெல்லும்?' என்ற மனேன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளேயின் கவிதையையும் நண்பர் முன்வைக்க விரும்புகிறேன்.

## 29. ஒத்த உள்ளங்கள் காத்திருக்கின்றன.

ஒவ்வோர் எண்ணத்திற்கும் ஒரு சக்தி உண்டு. நாம் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் ஒரு பலன் உண்டு. உலகில் நிகழ்பவை அனைத்தும் தாமாக நிகழ்பவை அல்ல. இந்த உலகம் காரண காரியத் தொடர்புடன் தான் இயங்குகிறது. நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் ஒவ்வொரு பலனைத் தருகிறது. அதற்கேற்ற பலனைத் தருகிறது. ஆனால், செயலுக்கு முன் அது மனத்தில் எண்ணமாக விழுந்து, நம்பிக்கை எனும் நீர் பெற்றுச் செடி என்ற செயலாக வெளிப்படுகிறது. எண்ணங்களிலிருந்துதான் செயல்கள் புறப்படுகின்றன. ஆகவே, எண்ண நிலையில், தீமை பயக்கும் விதைகளை அகற்றி விட்டோமானால், நமது வாழ்க்கை நலம் நோக்கிச் செல்லும். எண்ண நிலையில் தீயவற்றைப் பழக்கப்படுத்திக் கொண்டோமானால் அதன் விளைவுகள் தீமையைத்தான் கொண்டுவரும்.

நம்மை மீறிச் சில சமயம் யாரோ நம்மை அழைத்துச் செல்வதாக உணர்ந்திருக்கிறீர்களா? யாரோ நமக்கு 'இப்படிச் செல்' என்று வழி காட்டுவதைப்போல் அனுபவம் ஏற்பட்டிருக்கிறதா?

எனது ஜப்பானிய நண்பர்கள் கூறுவார்கள்.

"இந்த உலகில் நம் கண்ணுக்குத் தெரியாது சில சக்திகள் செயல்படுகின்றன. சில சக்திகள் உலவு

கின்றன. அவைதாம் நம்மை நடத்திச் செல்கின்றன. அவைதாம் நமக்கு வழி காட்டுகின்றன'' என்று.

இது உண்மையாய் இருக்குமா எனப் பலமுறை நான் யோசித்ததுண்டு. எண்ணம் ஒரு சக்தி. ஒருமுகப் படுத்தப்படும் எண்ணம்—சதா சிந்திக்கப்படும் ஆசை—வலுபடைத்த சக்தியாய் மாறுகிறது. ஒரு மனிதன் எந்த எண்ணத்தில் ஆக்கிரமிக்கப் படுகிருனே அந்த எண்ண சக்தி அவனைச் சுற்றிப் பரவி நிற்கிறது. இதுதான் உண்மையாக இருக்க வேண்டும். அந்த எண்ண சக்தியை அவன் செல்லுமிடங்களிலெல்லாம் பரப்புகிருன்; ஒரு மலரின் மணம் ஒரு சோலையையே நிறைப்பது போல.

ஒத்த உள்ளங்கள் ஒன்றுசேர்ந்து முகிழ்த்துச் சங்கமமாவதைப் போல, இத்தகைய ஒத்த எண்ண சக்திகள் வெளியில் உலவும் பிற எண்ண சக்திகளைக் கவருகின்றன. இதனுல் ஒத்த உள்ளங்களின் சக்தி, ஒருமித்த பெருஞ் சக்தியாக மாறுகிறது.

ஒரு கணம் யோசித்துப் பாருங்கள். நேற்றுவரை சாதாரண மனிதனுக நம்மிடை உலவிய ஒருவன், லட்சியம் என்னும் உயர் எண்ணத்தால் தலைவனுக, கடற்கரைக் கூட்டத்தில் பேசுகிருன். தலைவனுக மாபெரும் சாதனைகளை நாட்டுக்காகச் செய்கிருன். இது எப்படி முடிகிறது? இது ஒரு தனிமனிதனின் சாதனை அன்று.

ஒத்த உள்ளம் கொண்ட பல்லாயிரக் கணக்கான மக்களிடமிருந்து புறப்படும் ஓர் எண்ணசக்தி தலைவனின் எண்ணங்களுடன் இணைந்து, தலைவனுக்கு மகத்தான வலிமையைக் கொடுக்கின்றன. மக்களுடைய நல்லெண்ணமும் அபிமானமும் எண்ண சக்தியாக தலைவன்

என்ற ஓரிடத்தில் ஆவாஹனம் ஆகின்றன. இப்படித் தான் நம்மை அறியாது பல சக்திகள் செயல்படுகின்றன. நாட்டுமக்களும்—தலைவனும் ஒரு நோக்கில் செல்லும் போது, பல பெரிய சாதனைகளும் எளிதில் நிகழ்ந்து விடுகின்றன. நாட்டு மக்களது எண்ணங்களும், தலைவனின் எண்ணங்களும் மாறுபட்டு வேறுவேறு திசை களில் செல்லும்போது, சக்தி சிதறி விடுகிறது. நாடு முன்னேராமல், திசை கெட்டு நிற்கிறது,

'ரே மூடி' என்ற பிரபல மருந்து ஆராய்ச்சியாளர், 'வாழ்வின் கடைசிக் கட்டத்தில் ஒரு பேரொளி வழிகாட்டி அழைத்துச் செல்வதாக' ஆராய்ந்து கூறுகிறார். ஜப்பானிய நண்பர்களது அனுபவமும், திபெத்தியப் புத்த மதக் கோட்பாடுகளும் இப்படி ஒரு பேரொளி நம் வாழ்வை நடத்திச் செல்வதைப் பற்றித்தான் குறிப்பிடு கின்றன.

தெளிவாகச் சொல்லப் போனால், நமது எண்ணங்கள் —நமது எண்ண சக்தி பிரபஞ்சத்தில் உலவும் அதைப் போன்ற எண்ண சக்திகளை ஈர்க்கின்றன; அதன் மூலம் வலுப் பெற்றிருக்கின்றன, என்ற விளக்கம் கிடைக் கிறது.

இதில் மந்திரம் ஏதும் இல்லை; ஆத்மீகம் ஏதும் இல்லை. ஒத்த உள்ளங்கள் கொண்ட இருவர் உரையாடிப் பேசிப் பிரியும்போது, இருவரும் தங்களது ஒத்த எண்ணங் களால் எவ்வளவு நிறைவையும் வலுவையும் பெறுகிறார்கள் என்பதை எண்ணிப் பாருங்கள்.

அதாவது வெற்றியை நாடிச் சிந்திக்கப்படும் எண்ண மானது, வெற்றி பெற்றவர்களின் எண்ணசக்தியை— அறிவை, அனுபவத்தை எப்படியோ உங்களுக்கு அருகில்

கொண்டுவந்து வைக்கிறது. வாழ்வில் முன்னேற வேண்டும் என்ற துடிப்பு நிறைந்த எண்ணசக்தி, வாழ்வில் முன்னேறியவர்களை உங்களுக்கு அருகில் இழுத்துவரு கிறது. வாழ்வில் எல்லாம் பெற்று வளமாக வாழ வேண்டும் என்று எண்ணப்படும் எண்ணசக்தி, அதற் கேற்ப மனிதர்களையும்—சூழ்நிலையையும் கொண்டுவந்து அமைத்துத் தருகிறது.

ஆகவே, நம் மனம் என்னும் சோலையில் முன்னேற் றத்தைப் பற்றிய எண்ண விதைகளைத் தெளிப்போம். தோல்விகளை எல்லாம் தூளாக்கும் வெற்றி எண்ண விதைகளைத் தூவுவோம். மனம் எனும் சோலையில் நம் வாழ்வையும் நாட்டு வாழ்வையும் எப்படி நல்ல விதமாக மாற்றுவது என்ற சாதனை எண்ணங்களை விதைப்போம்.

இப் பிரபஞ்சத்தில் பல சக்திகள் காத்துக் கொண்டிருக்கின்றன உதவுவதற்கு. ஒத்த உள்ளங்கள் ஏற்படுத்தும் எண்ணசக்தி மகத்தானது. நன்மையை நாடித்தான் இப் பிரபஞ்சம் இயங்குகிறது.

## 30. தேவை : புதிய சங்கற்பம் - 1

சமீபத்தில் வெளிவந்திருந்த, அமெரிக்காவின் தலை சிறந்த பொருளாதார நாளேடான 'வால்ஸ்டிரீட் ஜர்னலை' எடுத்துப் புரட்டினேன். அதில், முடிவெடுப்பதில் ஜனாதிபதி ரேகனின் தோல்விகள்' என்று கொட்டை எழுத்தில் தலையங்கமிட்டு, ஒரு முக்கியமான கட்டுரை வெளியாகி இருந்தது. எழுதி இருப்பவர், ஜனாதிபதி நிக்சனுக்கு முன்னாள் உதவியாளராகப் பணி புரிந்த ஒரு வழக்கறிஞர்.

என்னுள் எழுந்த எண்ணம்: இப்படி நமது தலைவர்களின் குறைகளையும் நிறைகளையும் எடுத்துக்காட்டி, அவர்கள் செல்லும் பாதையை நமது ஊரில், இப்படி, அறிஞர்கள்—தொழிலதிபர்கள்— பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் செம்மைப் படுத்த மாட்டோம் என்கிறார்களே, அப்படிப்பட்ட ஒருபாரம்பரியம் நம் பத்திரிகை உலகில் நிலவவில்லையே என்ற ஆதங்கம் ஏற்பட்டது.

பொதுவாக நமது ஊரில் நாம் ஒருவருக்கு— ஒரு தலைவருக்கு — ஒரு கட்சிக்கு வேண்டியவராயிருக்கிறோம்: அல்லது எதிரியாய் இருக்கிறோம். 'பாரபட்சமற்று எழுதப்படும் கட்டுரைகள், மதிப்பீடுகள், சொல்லப்படும் யோசனைகள் எல்லாம் எதிர்க்கட்சியின் கேவலமான தூண்டுதலால் எழுப்பப்பட்டவை' என்ற ஒருமனோபாவம். அல்லது, 'இந்த ஆளுக்கு என்ன தெரியும்? இந்த ஆள் சொல்வதை நான் கேட்டதாகக் காட்டிக் கொண்டால்

என் சுயகௌரவமும், வெளிமதிப்பும் அல்லவா குறையும்' என்பன போன்ற எண்ணங்கள்.

நமது ஊரில் ஓரிரு தனிக் குரல்களைத் தவிர, நாட்டு நல்வாழ்வு என்ற பொது நீரோட்டத்தில் நமது ஊர் அறிஞர்களும், தொழிலதிபர்களும், விஞ்ஞானிகளும், கல்வியாளர்களும் பங்கெடுத்துக் கொள்வதில்லை.

இதனால் நம் தலைவர்களுக்குப் போதுமான யோசனைகள் கிடைப்பதில்லை. ஒரு பிரச்சினைக்கான மாற்று வழிகள் கிடைப்பதில்லை. வேறுபட்ட கருத்துக்களும், புதிய அணுகுமுறைகளும் அவர்களுக்குக் கிடைக்காமல் போகின்றன. இதனால் நம் தலைவர்களின் முடிவெடுக்கும் திறன் பாதிக்கப்படுகிறது. சில சமயம் நம் தலைவர்கள் இதனால் முடிவெடுக்காமலே நிற்கிறார்கள்.

இந்த இரண்டு வழிகளாலும் நாட்டுக்கு ஏற்படுவது நஷ்டம். நாட்டு முன்னேற்றத்திற்கு ஏற்படுவது முட்டுக் கட்டை; தாமதம்.

நான் எழுதுவது மத்திய அரசிற்கும், மாநில அரசிற் கும் பொருந்தும். 'நமது மத்திய தலைமையும், மாநிலத் தலைமையும் பிறர் யோசனைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட அதிசய மனிதர்களால் நடத்தப்படுபவை' என்றெல்லாம் வாதிட யாரேனும் முற்படுவார்களானால், அவர்களுக்கல்ல நான் எழுதுவது.

'நம் தலைவர்களும் நம்மைப் போன்ற மனிதர்கள் தான். ஏதோ சில வாய்ப்புக்களால், சூழ்நிலைகளால், சொந்த லட்சியங்களால், திட்டங்களால் (?) அந்தப் பதவியைப் பிடித்தார்கள்' என்று எண்ணுபவன் நான். ஆகவே, அவர்களும் தவறு செய்ய வாய்ப்புண்டு. குடிமக்கள் என்ற அளவில் நமக்கும் உரிமை உண்டு.

ஜனநாயகத்தின் தலைவர்கள் என்னும் அளவில் அவர்கள் இதை விருப்பு வெறுப்பு இன்றி ஆணவம், அலட்சிய மின்றிப் பரிசீலித்துப் பார்க்க வேண்டிய கடமை உண்டு.

இந்தப் பூர்வாங்கப் பீடிகையுடன் ஜனாதிபதி ரேகனைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்று பார்ப்போம்...

'ஜனாதிபதி ரேகன் 'இதைவிட இது மேல்' அல்லது 'எது சிறந்தது! என்று தேர்ந்தெடுப்பதில் தயக்கம் காட்டு கிறார். அவரது இனிமையான சுபாவமும் கவர்ச்சிகரமான செயல்களும், உண்டுபண்ணி இருக்கும் 'இமேஜ்' அவரது குறைகளை மூடிமறைக்கின்றன.'

'ரேகன்' சின்னச் சின்ன விஷயங்களில் பெரிய 'கறார்' பேர்வழிபோலத் தன்னைக் காட்டிக் கொள்கிறார். பத்திரிகை, டி.வி. போன்ற சாதனங்களைத் தனக்குச் சாதகமாக்கிக் கொள்ள நினைக்கும் துடிப்புதான் முன்னிற் கிறது.'

'சட்டமன்ற உறுப்பினர்களை எப்படி இழுக்கலாம், நம் இஷ்டத்திற்கு ஆட்டிப்படைக்கலாம் என்றசூத்திரக் கயிற்றை நன்கு அறிந்து வைத்திருக்கிறார் மனிதர்!'

'நாட்டின் பொருளாதாரத்தைப் பற்றி அமைச்சர வையில் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன; ஒருமித்த அபிப்பிராயம் கிடையாது. நாட்டுப் பாதுகாப்பைப்பற்றி ஏதும் தெளிவான கொள்கை அவருக்கில்லை என்பதும் புலப்படுகிறது.'

'நாட்டு வளர்ச்சியை மொத்தமாகப் பார்க்கும் மனோபாவம் அவரிடம் இல்லை. மாறுபட்ட கருத்துக் களிடை அல்லது திட்டங்களிடை எதைத்தேர்ந் தெடுப்பது என்பதுபற்றி அவரிடம் தெளிவு இல்லை.'

'அவரது அத்யந்த சகாக்களில் ஒருவரும், 'சிறந்த சிந்தனுவாதிகள்' என்று சொல்வதற்கில்லை. என்ருலும் சிலரிடம் கொள்கை வெறி காணப்படுகிறது.'

'இத்தனை நாள் எப்படி ஜப்பானும் மேற்கு ஜெர்மனியும் நம்மை முந்த எந்த உப்புசப்பற்ற கொள்கைகளும், உடனடியாக லாபம் கருதும் போக்கும் காரணமாயிருந்தனவோ அதே நிலைதான் ரேகன் ஆட்சியிலும் நீடிக்கிறது.'

'ரேகனைச் சுற்றி இருக்கும் ஆலோசகர்கள் ரேகனின் நிழலில் வளர்ந்தவர்களே தவிர, சொந்தமாகச் சாதனை ஏதும் செய்து தங்கள் திறமையை உலகுக்குக் காட்டி அங்கே போனவர்கள் அல்லர்.'

'அவரது உதவியாளர்களும்— ஆலோசகர்களும் இன்றைக்கென்ன தலையங்கம் எழுதப்பட்டிருக்கிறது; இன்றைக்கு நம் தலைவரை எப்படி டி.வி.யில் காட்டினுர்கள், என்று கவலைப்படுகிருர்களே ஒழிய, நாட்டு நலன்— நீண்டகால நோக்கு என்ற ஏதும் இவர்களுக்கு இல்லை.'

'ரேகன் இதுவரை இரண்டு முறை கொள்கைகளை அறிவித்துவிட்டு, வாபஸ் வாங்கியிருக்கிருர்.'

'எனினும் அவருக்கு ஒரு தனித்துவம் இருக்கிறது. நாட்டை வேறுதிசையில் அழைத்துச் செல்ல வந்த தலைவர் என்று மக்கள் நம்புகிருர்கள். அவருக்குச் சொந்த வாழ்வில் இத்தனை நாள் ஏற்பட்ட அதிர்ஷ்டம் இன்னும் சில ஆண்டுகளுக்கும் ஏற்பட்டால் நல்லது.'

'மோசமான கதியில் போய்க் கொண்டிருந்த நிலையை மாற்றிப் புதுமைகளைச் செய்த கலிபோர்னியா சரித்திரம் அவருடையது. இன்றிருக்கும் அவர் நிலையிலிருந்து

நாட்டை அவரால் மாற்றமுடியும். எனினும், அவர் பாடம் படிக்க, அனுபவம் பெற, மக்கள் இன்னும் நான்கு ஆண்டுகள் அவகாசம் கொடுப்பார்களா என்பது சந்தேகம்தான்!'

மேற்கண்ட ஒவ்வொரு வாக்கியமும் ஏதோ நம் நாட்டைப்பற்றி — நம் தலைவர்களைப்பற்றிக் கூறப் பட்டவைகளாய் இருக்கின்றன.

## 31. தேவை: புதிய சங்கற்பம் - 2

உலகம் பூராவிலும் நாட்டை நடத்திச் செல்லும் தலைவனுயிருக்கும் பதவி அத்தனை எளிதல்ல என்று இது பறை சாற்றுகிறது. ஆனால், இப்படி எண்ணுவது ஒரு சமாதானமாக அமையுமே அல்லாது மன்னிப்பைப் பெறாது.

நாட்டுப் பொறுப்பை— நாட்டுப் பொதுச்சொத்தை —நாம் நம்பி அவர்கள் கையில் ஒப்படைத்ததற்கு— நம் தலைவர்கள் பலவழிகளில் உண்மையாக, சுயநல மில்லாமல் பாடுபடவேண்டும்.

என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறோம்?

நாட்டின் இன்றைய தலையாய பிரச்சினை ஏழ்மை; வறுமை; நாட்டின் பொருளாதாரம்; வேலையில்லாமை.

மற்றபடி மற்ற மாநிலங்களில் மந்திரிசபையைக் கவிழ்ப்பதோ, மற்றபடி தெருக்களின் பெயர்களை மாற்றி வேறு பெயரைச் சூட்டுவதோ அல்ல...

தனிமனிதன் தொழில் செய்ய எங்கெங்கே தடைகள், நிர்ப்பந்தங்கள், சட்டங்கள் இருக்கின்றனவோ அவற்றை எல்லாம் தளர்த்த வேண்டும்.

தமிழுக்கோ, ஆத்மீகத்திற்கோ மாநாடு கூட்டு வதற்குப் பதிலாக, தலைமை தாங்குவதற்குப் பதிலாக, ஊருக்கு ஊர்—மாவட்டத்திற்கு மாவட்டம்

தொழிலதிபர்களையும் — இளைஞர்களையும் ஒன்றுகூட்டித் தொழில் மாநாடு நடத்த வேண்டும்.

விஞ்ஞானம், டெக்னாலஜி, தொழில் அறிவு இவற்றினால் நம் நாடு முன்னேற முடியுமே தவிர, மற்றபடி தமிழ்க் கவிதையாலோ, சினிமாவினாலோ, அல்லது அரசியல் தலைவர்களுக்குச் சிலை எழுப்புவதாலோ அல்ல என்பதை நாம் உணர வேண்டும்.

ஜப்பானில் அரசாங்க அதிகாரிகளும், தொழிலதிபர்களும் ஒன்று கூடி அமெரிக்காவுடன் போட்டி போடுவது என்று இணைந்து திட்டமிடுகிறார்கள். நம் ஊரில் அரசாங்கம் அந்த நிலையில் தொழிலதிபர்களுடன் இணைந்து உதவ முன்வர வேண்டும்.

பிறமாநிலங்களிலும், பிறநாடுகளிலும் என்னென்ன புதிய தொழில் முறைகள் வந்திருக்கின்றன; புதிய பொருட்கள் கொண்டு வரப்பட்டிருக்கின்றன; உலகச் சந்தையில் எந்தெந்தப் பொருள்களுக்குக் கிராக்கி இருக்கிறது; எதையெதை நாம் செய்யலாம் என்று ஆராய்ந்து, அந்தந்தத் தொழில் முறைகளை ஆர்வமுள்ளோருக்கெல்லாம் வழங்கும் ஒரு விஞ்ஞான 'எக்ஸ்சேஞ்ஜ்' நிறுவப்பட வேண்டும்.

தொழில்துறையில் 30 வயதும் அதற்கு மேலும் அடைந்து, குறிப்பிட்ட தொழில்களில் பயிற்சி பெற்றோருக்கெல்லாம் மூலதனமாகப் பணத்தைக் கடன் கொடுத்து, அவர்கள் தொழிலில் இறங்க ஆர்வம் ஊட்ட வேண்டும்.

கும்பகோணம் கல்லூரியிலிருந்து குடியாத்தம் கல்லூரிவரை அங்கங்கே உள்ள எல்லா சோதனைக் கூடங்களும், விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சிகளில் ஈடுபட நாம் ஆதரவு அளிக்க வேண்டும்.

திரையுலகக் கலைஞர்களுக்கு ஆண்டுதோறும் விருது வழங்குவதுபோல, 'கலைமாமணி' பட்டமளித்துக் கலைஞர் களைக் கொண்டாடுவதுபோல, நம் விஞ்ஞானிகளை— தொழிலதிபர்களை—சிறு வியாபாரிகளை ஆண்டுதோறும் கௌரவிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

பல்கலைக்கழகங்கள்தோறும், கல்லூரிதோறும் தலைசிறந்த ஆராய்ச்சிகளுக்கு, கண்டுபிடிப்புகளுக்கு (நாவல்களுக்கு 10,000 பரிசு கொடுப்பது போல) நாம் தமிழ்நாட்டு நோபல் பரிசுகளை வழங்க வேண்டும்.

அடுத்த தலைமுறையில் வளரவிருக்கும் விஞ்ஞானத் துறைகளான கம்யூட்டர் (computer), எலக்ட்ரானிக்ஸ் (Electronics), ரொபாடிக்ஸ் (Robotics), மாற்று எரி பொருள் (Alternative Fuels), நுண்ணுயிர்களைக் கொண்டு விவசாய மருத்துவ மாற்றங்கள் (Bio-technology) போன்ற துறைகளில் நாம் தலைமை எடுக்க ஆவன செய்ய வேண்டும். அதற்கு இன்று திட்டமிட வேண்டும்; செயல்பட வேண்டும்.

நாட்டின் அமைச்சர்களும், அரசாங்க அதிகாரிகளும் விளம்பரம் பெற்று நாட்டில் தெரிவதற்குப் பதிலாக, விஞ்ஞானிகளும்— தொழிலதிபர்களும்— கல்வியாளர் களும் நாட்டின் முன்னே தென்பட வேண்டும்.

நாம் ஆண்டுதோறும் கம்பர் விழா என்றும், அவர் மகன் அம்பிகாபதி விழா என்றும், அத்தைப்பாட்டி கதை களுக்கு விழா என்றும், கவி சம்மேளனம் கூட்டுகிறோம். இவை எல்லாம் எந்த விதத்தில் நம் பொருளுற்பத்தியை அதிகரிக்கச் செய்யும் என்று எண்ணிப் பார்க்கவேண்டும்.

பூம்புகார் மண்டபங்களையும், வள்ளுவர் மாடத்தை யும், ஊருக்கு ஊர் சிலைகளையும் கண்டு நான் நம்

மூதாதையர் பற்றிப் பெருமைப் படுகிறேன். இன்று இங்கு வாழும் நாம், நம் சோற்றுக்கு இதன் மூலம் என்ன செய்தோம்; ஏழைகளின் சோற்றுக்கு என்ன செய்தோம் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். பழம்பெருமை ஒரு காலத்தில் தேவைப்பட்டது, இன்றல்ல...

தேவைப்படுவது இன்று:

லட்சிய வெறி; நாடு முன்னேற வேண்டும் என்ற லட்சிய வெறி; நம் நாடு பொருளாதாரத்தில் சிறந்தோங்கி மக்கள் எல்லோரும் வீடும் துணியும் சோறும் பெற்று வாழவேண்டுமென்ற நன்னோக்கு; 'எனக்குச் சுயநலமல்ல முக்கியம்—பொதுநலம்தான் என் லட்சியம்' என்ற மகாத்மா காந்தியின் லட்சிய வெறி.

நம்மிடம் மக்கள் இருக்கிறார்கள். ஒரு நாட்டு மக்கள்தான் ஒரு நாட்டின் முக்கிய சொத்து. தமிழ் நாட்டு மக்கள் நல்ல அறிவுக்குப் பெயர் போனவர்கள். ஜப்பான் தன் அறிவினால் மட்டுமே இன்று அமெரிக்கா வுடன் போட்டி இடுகிறது.

தமிழர்களாகிய நாம் நம் அறிவை— தமிழ்நாட்டு மக்களது மொத்த அறிவையும் பயன்படுத்த வேண்டும். அங்கங்கு நாம் நம் அறிஞர்களையும், விஞ்ஞானிகளையும், தொழிலதிபர்களையும், கல்வியாளர்களையும், பொறியிய லாளர்களையும் கட்டவிழ்த்துவிட வேண்டும். மக்களிட முள்ள ஆக்கசக்தியினை வெளிக் கொணர வேண்டும்.

எந்தப் பிரச்சினைக்கும் முதல்படி நாம் இன்றியிருக்கும் நிலையைத் தெளிவாக உணர்ந்து கொள்வதுதான். அடுத்து, 'எது முக்கியம்—என்ன செய்ய வேண்டும்?' என்று அறிர்ஞர்களைக் கலந்தாலோசித்து வழிவகுக்க வேண்டும்.

போனதற்கெல்லாம் புலம்பிக் கொண்டிருக்காமல், யாரையாவது குற்றஞ்சாட்டிக் கொண்டிருக்காமல், சூழ் நிலையைக் குறைகூறிக் கொண்டிருக்காமல், சுயநல நோக்கில்லாமல், நாட்டின் எதிர்காலத்தை எண்ணி, நம் குழந்தைகளின் வருங்காலத்தை எண்ணி நாம் செயல்பட வேண்டும்.

இது நம்மால் முடியும்.
நம் தலைவர்களாலும் முடியும்.

———

